நீசெலு மாற்றிற் பாவ நாசமா தியநா நித்தம்
வாசஞ்செய் தலம நேக மாயவன் பதியே ரம்ப
னுசில்செவ் வேற்கை மைந்த னாலயம் பலகண் டப்பாற்
காசறு கயிலை நோக் கழறுநம் பதியுங் காண்பாய். [௨௪]

மாசின ரேனு நின்பால் வந்துமூழ் கினரோ னம்மைப்
பூசனை புரியுங் கையும் புகழ்பல துதிக்கு நாவுங்
காசினந் துதிகள் கேட்குங் காதுநோக் கிடுநற் கண்ணு
நேசமார் நெஞ்சுஞ் சூழு நீள்சர ணமுமுள் ளோராய். (௨௫)

படைகுடி பைங்கூழ் நல்ல பண்புடை யமைச்சர் நண்ப
ரடையர ணுடைய ராகி யவனியிற் போக மெட்டு
முடையாராய்க் கொடைய ராய்ப்பா ரொருகுடை நிழலிற் காத்துக்
கடையிலுஞ் சித்தி சேர்வர் களிப்பினோ டெனவம் மாது. [௨௬]

எங்கடம் மீசன் பொற்றா ளிணைமலர் மிசைவீழ்ந் தேத்திப்
பொங்குமா னந்தங் கொண்டு நிற்றலும் பொருனை மாதை
யங்கண னினிது நோக்கி யம்பிகை யங்கை வந்த
நங்கைநின் னுளத்தெந் நாளு நாமிருக கின்றோ மென்று. (௨௭)

ஆசிகள் பலவுங் கூறி யகத்திய முனியை நோக்கித்
தேசுறு மிந்த மாது தெண்புனல் வடிவத தெய்துங்
காசறு நினது செங்கைக் கமண்டலத் தேற்றி யென்ன
வீசன துரையின் வண்ண மேற்றவன் பொற்றாளேத்தி. (௨௮)

தென்றிசை தன்னை நோக்கிச் செல்வுழிக் காசி காஞ்சி
மன்றுடைத் தில்லை மூதூர் மதுரைகுற் றால நெல்லை
யென்றிவை யாதி யாய தலத்தெரி சித்துத் தென்றிக்
குன்றரு குறையும் பாவ நாசத்தைக் குறுகி யங்கண். (௨௯)

அதிர்விடைக் கொடியான் றன்னை யருச்சித்துப் பணிந்து சிங்கைப்
பதியுறை சிவனே பாவ நாசனே பணிவோர்க் குய்யு
மதிதரு முதலே யிங்ங னவ்விடப் பணித்தி யென்னப்
பொதிகையுற் றிசைமேற் கொண்டான் புவிதனைச் சமமாக் கண்டான். (௩௰)

இத்திறத் தாங்க மர்ந்த விருந்தவ முனிவன் செங்கை
வைத்திடு காகந் தன்னுள் வதிதரு பொருனை மாதை
யுத்தம மணமி யற்ற வுளங்கொண்டு வருணன் செந்தூர்
வித்தகக் குமர மூர்த்தி விளாமலர்ப் பதம்ப ராவி. [௩௧]

தவத்தரிற் றேற்றி மெய்மைத் தவத்தருக் கிடரோ யாற்று
மவத்தவில் வலவா தாவி யாவிகொண் முனிவ ரேனுஞ்
சிவத்தமிழ் முனியை நெஞ்சிற் சிந்திப்பப் போந்தன் றேனெஞ்
சுவப்பநின் கருத்த றிந்தா மொலிபுனற் கிறைவ வீண்டு. (௩௨)

பொருனையை மணத்தற் கெங்கோன் புயமிரா றுடையா னல்குந்
திருவருள் பெறுவா னையங்கைச் செம்மறன் சரித மூற்று
முரமுற வுணர்ந்தி றைஞ்ச லுறினெளி தினிற்கை கூடுஞ்
சரதமென் றுரைக்கத் தேருஞ் சால்பினிற் றலைமை யுற்றான். [௩௩]

சிந்தூர முகப்பி ரான்சீர் தெரிந்துளோர்த் தெரிந்து ளோரு
முந்தலை கடலி யத்தோன் யாவர்க்கும் வீயா மோகந்
தந்திடன் மறந்தி டான்போந் தனையெலா முய்ய மாரி
யுந்துவான் $மீதே மாரி யுந்துவா னியற்றி னால். [௩௪]

காதலான் மதவேட் கஞ்சிக் கருத்தழி கின்றே னென்கொ
லேதமி லகத்தி யன்கை யிருங்கமண் டலமா னேனே
லோதரும் பொருனை மாதை யுவந்தென திடம்வை கப்பெற்
றாதர வுடன்சு கித்தெஞ் ஞான்றும்வாழ்ந் திடுவ னன்றே. (௩௫)

நித்தமும் பொருனை மானை நினைந்தவட் கூட லுன்னி
மத்தெறி தயிர்போற் சித்த மயங்குவேன் பொதிய மென்னு
மத்திரி யாயி னேனே லவளையென் றலைமேற் கொள்ளுஞ்
சத்தியை யுடைய னாவேன் றவமதற் கிழைத்தி லேனால். (௩௬)

பாருமென் டிசையு மன்ன பைந்தொடி யன்றி மற்றைக்
காருநன் பொருனை மிக்காங் ககனமும் பொருனை யெந்த
ஊருநன் பொருனை மாதா வுற்றுள மலையும் வண்ண
மாரன்மால் செய்தான் மேனாண் *மறுக்கமால் செய்த தோர்ந்தே. (௩எ)

பெருவட வான லத்தின் பெருமையுங் கெடுக்கு நீரி
னரசனென் றோரா னோயா னனங்கனென் னங்க மேவான்
மருவுறப் பொருதான் முன்னாள் வாதனைப் பொருதா னன்னா
னெரிவிழி யொன்றால் வென்றா னஃதிலே னெதனால் வெல்வேன். (௩அ)

கயந்தலை மனைப்பூ வம்பு காம்ன்கை மறந்தெய் தாலும்
வயங்குதி யம்பாக் காயு மென்பதை மனத்தி னாய்ந்து

---

$ மீதேமாரி- மீது, அம்பு மாரியை.

* மறுக்கமால் செய்ததோர்ந்தே- இராமாவதாரத்தில் சேது அணைகட்டும்போது நினைத்தகாலத்தில் வாராதவருணனன்பேரில் அத்திரந்தொடுத்தது.

பயந்தவன் பயமுற் றானேற் காமத்தீத் தெறமெய்ப் பட்டார்
செயந்தனைப் பெறுவ ரேயோ தேம்பிநெட் டுயிர்ப்ப தின்றி. (௩௯)

காய்தொழில் வெய்யோற் கன்றிக் கலைநிறை மதியே நிற்கு
மேயதென் னைய கோவோர் வெய்யவர் சேர்க்கை யாலே
தூயருந் தீய ராவ ரென்பபோற் சுடர்ப்பா லோர்ந
ளாயவா சனையோ வென்னை யழன்றுநீ வாட்டு கின்றாய். (௪0)

இருமனப் பெண்டிர் பூப்பி னிறைவனு மொருவன் காத்து
மருவவும் பிறற்குற் றாளாய் வருத்தமுன் னவற்குத் தாற்போற்
கருநிறக் கடலே வேட்குக் கடிமுர சாய்மன் னென்னாய்
வெருவுற முழங்கிக் காய்வாய் வியப்பிலீ தலறை யென்னே. (௪௧)

இருளிராப் பெயரின் வேளு ரிருங்களிற் றடலீச றுங்கட்
குரமிகு *பாகற் கோற லுறுதொழி லற்றால் வெய்யோன்
குரைகடற் படவீழ்த் திட்டாய் குளிர்திரை நதிமான் றந்த
விரகமூர் வேனைத் துன்ப வேலைவீழ்த் திடுவ தென்னே. (௪௨)

தென்றலை விரும்பி யீசன் றென்றலை நணுகி யாடு
மென்றனை யயர்வு தீர்தற் கெனினெனைக் கயர்வு செய்த
னன்றல வெனினுந் தேர்ந்தே னுரிபாங் குறுநர்க் கன்றிக்
குன்றன வணங்கு செய்யுங் குணநின தெனமென் காலே. (௪௩)

வேறு.

காயம் படுத லுற்றவநிற் காய விழித்தான் றனையோர்காற்
காயம் பதனு லடர்ந்தாயேற் கடல்சூ ழுலகம் புகழ்ந்திடுமென்
பாயம் பாநீ முரசாக்கப் பார்த்திங் கிருப்பேன் பாலெதிர்ந்த
பாயம் பணலோர் விறலாமோ பாரார் நகையா ராராரோ. (௪௪)

வேறு.

பொருனைமா துருவ மென்றும் புந்திவைத் தயர்வா னோர்காற்
றிருவனு ளருகுற் றாளாத் தெரிதலுங் களிப்பிற் சேர்வா
னிருகர மாவிச் சேர்ப்ப வியைதரு §மூற்றங் காணு
னுருவெளி யெனத்தேர்ந் தின்ன லுவரியுண் மூழ்க லுற்றான். (௪௫)

ஏணில்வேள் கணையா லிவ்வா றிடையறா தினையு மன்னுன்
சேனுயர் பொதிய மோனி திருமொழி நினைந்து தன்கண்

---

* பாகன்

§ ஊற்றம்—பற்றுக்கோடு

காணமுன் னிற்பான் போலக் கழறுவான் பொருளை யென்பாற்
பூணுத னினது சித்தம் பொருந்துமே லீதே செவ்வி. (௪௬)

இல்லையே லாவி வாழே னெழிலிநீ ரருந்த லொல்லா
கம்பலின்வீழ் நதிர தங்கள் கணவனை யிழந்து வாடும்
பல்லுயிர்க் குணவு தங்கா பாரிலார் கலியின் றுமித்
தொல்லைமா தவஞ் லெய்திற் றெனும்பழி சுமையாக் கொள்வாய். (௪௭)

இப்பழி மொழிநின் மேல்வந் தெய்திடா தெளியே னெண்ணந்
தப்பிடா தரிதி ஞேற்ற தவப்பெரு மையினு லென்று
மெய்புவ னழுந்தொ ழுப்பெற் றெழிறிகழ் பொதிகை வைகு
மொப்பிலோ யருள்க வென்ன வுள்ளத்துட் சிந்திப் புற்றான். (௪௮)

அன்னவன் சிந்தித் துள்ள மயர்தலோர்ந் தைங்கை வள்ள
றன்னுபா சனையி லீலை யனைத்துமோர்ந் தேத்துஞ் சால்பு
துன்னுவித் தினிதா நாளிற் றொன்முனி பொருளை மாதை
மன்னுநீ ரிறைம ணந்து மகிழ்வுற வருளுஞ் செய்தான். (௪௯)

மைப்புயற் குணவ ருத்தி மாநிலக் குணவ ருத்து
மப்பிறை யினிதோர்ந் தேத்து மைந்துகைப் பிள்ளை சீர்த்தி
யொப்பினை மிசவ னத்தி னுறுவர்க்குச் சூத மேலோன்
செப்பிய வாறு நாயேன் றெரிவள வுரைக்கப் புக்கேன். (௫௰)

சிந்துபூந்துறைப்படலம் முற்றுப்பெற்றது.

ஆகப்படலம் ௪-க்குத்திருவித்தம் (௱௬௰௭)

---

# வியாசருபாசனைப்படலம்.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

சீர்திகழ் யுகங்க ளுன்கிற் செறிதுவா பரங்க டோறும்
பார்திகழ் மறைக ளாதி பகுத்துநன் முறைப்ப டுத்தக்
கார்திகழ் மேனித் தேவே வடிவமை வியாசர் காட்சிப்
பேர்திகழ் தாக்க ணேசற் பணிதிறம் பேச லுற்றாம். (க)

மெய்த்தவப் பாரா ரன்சேய் வேதத்தை நான்கு பாகம்
வைத்தபின் புராணந் தன்னை வகைமைசெய் திடப்பு குந்தான்
பைத்தலை யரவக் கச்சார் பனைக்கைமா முகவன் றன்னைக்
கைத்தலங் குவியான் வாழ்த்தான் கருத்தினுங் கணியா னுகி. (உ)

ஆகையாற் றுடங்குஞ் செய்கைக் கறிவுகை கூடா தேங்கி
மூகையா யினனே வன்றேன் மூடமெய் தியதோ பித்த
மோகையான் மதியைக் கைக்கொண் டோடிற்றோ வென்ன மிக்குச்
சோகவா ரிதியி லாழ்ந்தான் றுணையுங்கா ரணமுங் காணான். (௩)

ஆக்கலைத் தொழிலாக் கொண்ட வண்ணறன் றுலக நண்ணிக்
காக்கவின் றனையென் றன்னோன் கனகழ றொழுது வீழ்ந்த
மாக்கடி முளரிப் புத்தேண் மாதவன் வரவேற் றங்கண்
மேக்குய ரிருக்கை நல்கி †வேசறு முகத்தை நோக்கி. (௪)

கலிவிருத்தம்.

இத்தனை துயருறற் கேதி யாதென
வத்தனர் திருப்புக ழனைத்து மாதியிற்
சித்தியி னருளிய சீர்ப்புரா ணத்தை
யுத்தம வணியலா வுரைக்கப் புக்கனன். (௫)

என்னுள மயங்கிரா வெழாத தாகியே
யுன்னலு மோதலு மொழிந்த காரணந்
$தன்னமு மறிகிலாந் தமிய னின்றனை
முன்னிவந் தனனென முறுவல் பூத்தயன். (௬)

அலருறை யயன்முதன் மூவர்க் காயினு
மிலகொரு மருப்பனை யிறைஞ்சி டாதுநீ
ருலசிடைச் சிறுதொழி லுஞற்றப் புக்கினு
நிலைபரந் தன்னமு நிலவி டாதரோ. (௭)

பொக்கமின் மனத்தராய்ப் போற்று வோர்க்கெலாம்
விக்கினங் கெடுத்தருண் மேவச் செய்பவன்
பொக்கமுண் மனத்தராய்ப் போற்றி டார்க்கெலாம்
விக்கினங் கொடுத்திருண் மேவச் செய்பவன். (௮)

மூத்தவன் யாவரு முன்னர் முன்னரோ
யேத்திடத் தக்கவ னிவனை மெய்ம்மனங்
கோத்தவாக் காதியாக் குளிரு மன்பினோர்
மாத்திரை யாயினும் வழிபட் டாயிலை. (௯)

---

† வேசறு முகம்=துக்கநிறைந்த முகம்

$ தன்னம்-அற்பம்

அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

†முன்னமோக் தரிக்கும் வேத முழுப்பொருள் பகுத்த காலை
யன்னவே ரம்பன் றன்னை யன்பினேத் திலையின் றேனு
நன்னரோ முதலி ருத்த னவிறுதி யாக வெண்ணி
யின்னனின் வயிற்பொ ருத்தா திருந்தன னுணர்வின் மேலோய். (௰)

எண்ணிய யாவும் யார்க்கு மினிதினின் முடிக வென்றே
பண்ணியன் மறைகட் கெல்லாம் பகர்கண பதியாய் நாளு
நண்ணிய பிரண வத்தை நாதன்முன் னமைத்தா னற்றூற்
புண்ணிய மறுமுன் னீதைப் பொருத்தினர் நால்வல் லோரே. (௰௧)

அசம்புற நிறைவா யென்று னாதியா யநாதி யாய்மா
முடிக்கொளீங் கரத்தெம் மானை முதல்வழி படாதுன் னூக்கத்
ஆகம்பல வூர்கி னுவு முரைத்திட முடியா தென்றுஞ்
சுகந்தரா நகங்கொண் மைந்தா தூயவன் னவனை யேத்தி. (௰௨)

எழுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

ஏதமிக் குனதுள் ளூறைமயக் கொழித்தாங் கினிதருள் பெறுகென வுணர்ந்தந், நாதனுக் கியற்று பூசையின் முறையை நவில்கென விரந்தன ன் வியாதன், போதனுட் களித்துத் தீக்கையன் னவற்குப் புரிந்திருண் மலமறுத் துளத்தார், சோதியை விளக்கே காக்கா மனுவைத் துணைச்செவி பயிறரப் பகர்ந்தான். (௰௩)

பகர்ந்தவம் மனுவை வியாதனுட் கொண்டு பருவமீ ராறள விருந்தோர், சுகந்தமா வனத்துக் கணித்தனு மைங்கைத் தோன்றலோர் கோடியா தவரின், மிகுந்ததே சுருக்கொண் டும்பன்மா முகத்து மேவிமுன் னின்றன னோக்கித், தகுந்தவ னடுங்க வஞ்சனீ வேட்ட தருவலென் றெந்தைசாற் றுதலும். (௰௪)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

விரைவினி லெழுந்தான் சூழ்ந்தான் வியன்கரங் குவித்தான் சென்னி
துரைகழ றொழுதான் வாக்குக் குழறநெஞ் சுருகக் கண்ணீர்
திரைபுர ளாற்றின் வாரத் திகழ்ந்தக் கரண மொன்றாய்க்
கரையிலா னந்தத் தேத்திக் கனிந்தன னினைய சொல்வான். (௰௫)

---

† முன்னமோந்தரிக்கும் வேதம்=முதலிற் பிரணவமந்திரமாகிய ஓங்காரத்தைப் பொருந்திய வேதம்

ஆலமே யமுதா வுண்ட வண்ணலும் பூசை யாற்று
மூலகா ரணனே வேத முதல்வனே முக்கட் டேவ
சாலநா ளடியேன் செய்த தவத்தினுக் கிரங்கி யிங்காட்
கோலநின் பாத சேவை கொடுத்தனை தூய ஞானேன். (மகூ)

எந்தைநின் பாதப் போதென் னிதயபீ டத்தி ருத்தி
முந்தநான் மொழிய மூன்னு மூவறு தொகைப்பு ராணம்
புந்தியில் விளங்கு மாறு போதநன் குதவி யன்பு
தந்துபே ரின்ப மெய்தூந் தகைமையு மருளல் வேண்டும். (மஎ)

கருணைவா ரிதியே யீதென் கருத்தென விசப்ப வவ்வா
ளொருமருப் புடைய வள்ள லுதவிப்பின் னருமீ தோதும்
பெருமைசே ; வெஞ்சீர் பேசிடா திருந்த தான்முன்
னருமையாம் புராணஞ் சொல்லு மறிவைநீ யுற்று யல்லே. (மஅ)

பின்புநம் மான்மி யத்தைப் பிரமனு லுரைக்கக் கேட்டுத்
துன்பகன் றிடநீ நோற்றாய் தூயநம் மருள்பெற் றோங்கு
மன்பனு தலினீ ரொன்பான் புராணத்தோ டுபபு ராண
மென்பதும் புகல வல்லோ னுதியென் றிசைத்துச் சென்றான். (மகூ)

எண்சீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

உலகமெலா நனிவியப்ப வரமே வுற்று னுயர்தவன்யா வையும்புகலு மொண்மை பெற்று, னலமலியவ் வனத்திடையா லயமி யற்றி நால்வா யைங் கரத்தவனை ஞானக் குன்றை, மலமிலியைப் பிரதிட்டை செய்து வேத வான்முறையிற் பூசனையும் வழாதி யற்றிப், புலவருமற் றெவருமி கப் போற்று கின்ற புராணங்க ளனைத்தனைத்தும் புகன்று னன்றே. (உ0)

வியாசருபாசனைப்படலமுற்றுப்பெற்றது.

ஆகப்படலம் ரு-க்குத் திருவிருத்தம். (ளஅஎ)

# சோமகாந்தனுபாசனைப்படலம்

அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

அத்திமா முகனைப் பூசை யாற்றிநற் றவவி யாத
னுத்தம வரம்பெற் றுய்ந்த துரைத்தன முளத்தெந் நாளுஞ்
சித்தியைங் கரனை யுன்னித் தீதறு சோம காந்தன்
முத்தியை யடைந்த காதை முறைமையி னறைதல் செய்வாம். [க]

மூவுல கத்தின் மேலா முத்திக்கு வித்த தான
பூவுல கந்து மேன்மை பொருந்துபல் பொருள்சேர்ந் தென்றூழ்

காவுலாந் தடமுஞ் செந்நெல் கன்னனி ளரம்பை துன்னு
மாவயல் களுஞ்சூழ் சௌராட் டிரமெனு நாட்டின் மாதோ. (உ)

விண்டொடு மெயில்சூழ் தேவ நகரொன் றுண் டதற்கு வேந்தன்
றிண்டிறன் மேருத் தோளான் றிருந்தலர்க் கரியே றன்னான்
கொண்டலைப் பழித்த கையான் குலவுமன் பதையின் பப்பே
றுண்டகங களிக்க நேமி யுருட்டிமண் புரக்கு நாளில். (ங)

முந்திய பிறப்பிற் செய்த தீவினை முழுது மொன்றாய்
வந்தது போல வன்னோன் வனப்பொளி ருடம்பிற் குட்ட
வெந்துயர் வினைநோ யெய்த வேண்டுபல் சிகிற்சை செய்து
மந்நவன் றேய்தீர் வில்லா னமைச்சர்க்கூஉ யினைய சொல்வான். [ச]

உலகெலா நெறியிற் காத்தே னென்னலர்ப் பொருது வென்றே
னலகிலா மகங்கள் செய்தே யமரர்கட் கவிக ளீந்தேன்
பலபதச் சாலை கோலிப் பல்லுயிர் வருத்தந் தீர்த்தே
னிலைபெறு தவனந் தீர்ப்பா னீர்நிலை முதல தொட்டேன். [ரு]

அறம்பல வினைய வாற்று லாற்றியா துலர்க்குத் தாயாய்
மறங்கெடுத் தெவர்க்கு மெய்தும் வன்றுயர் புறங்கண் டேனைப்
புறந்தரச் செய்தென் மெய்யைப் புண்பட வருத்தி வாட்டி
நிறங்கெடுத் திடுநோய் வெல்ல நெறியொன் றுங் காணே னந்தோ. [சு]

இவ்வுடல் கொண்டு வையத் திருந்தலின் மாய்த னன்றா
மவ்விதி யில்லை யாரி னங்கைவா ளாலீர்ந் தேனுந்
தெவ்வெனத் தெறுநோய்க் கூடாஞ் செடியுட லீப்பே னென்னி
னெவ்வுறுப் பாவ மெய்து மாதலி னொழித்தொன் றோர்ந்தேன். [எ]

பன்னமார் வனத்திற் சேற றகவெனப் பண்பின் மிக்கி
றொன்னின்மே தகுசால் புள்ள விளவர சேம கண்டன்
றன்னையிவ் வுலக பாரந் தாங்குமன் னாகச் செய்வே
னன்னவன் பாலென் போலன் பாற்றிவேந் தியல்செய் கென்னா. (அ)

சொற்றலும் விரணத் துன்பாற் சோர்ந்தன னணையின் மேல்வீழ்
வுற்றன னேனை யோரு முற்றன ருறுகண் சீவ
னற்றவ ரானார் நூல்வல் லமைச்சர்க டேறிச் சோக
முற்றவு மொழித்தார் வேண்டு முயற்சிசெய் தெழுந்தான் மன்னன். [கூ]

அன்னவ னடியி னூல்வல் லமைச்சர்தாழ்ந் தறைவா ரைய
வுன்னையா ரணியுத் துய்ப்பித் துன்மனைக் கடையாம் வாழே

நின்னரு மகனை மன்னு நிகழச்செய் நிழல்போல் யாமு
மன்னுவ நீயே கற்கு மதிக்குங்கான் சரத மென்றார். (௰)

பொருவினன் மனையி தாய்ந்து போந்திரு தலைப்புட் போல
வருநலன் றீதொன் றாக மதித்துவாழ் நம்மி லென்னுள்
ளுருகவென் றனைநீ யிங்கிட் டுரியவ வனத்தி னேகத்
திருவுளங் கொளினுன் றுஞ்ச றிண்ணமிற் பிரியே னென்றாள். (௰௧)

இனையவை நிகழத் தந்தை யிடர்பொறு திருங்கா னேக
நினைதலு மமைச்சர் தாமு நீங்குறு துறைக்செல் சீரு
மனைசுதன் மையும்பின் செல்லு மமைதியுந் தன்னைப் பூவின்
மனமகிழ்ந் தாசா வைக்க மதித்தன்மத் திடபு ணர்ப்பும். (௰௨)

தவவுணர்ந் தேம கண்டன் சாற்றுவா னிரவி சோம
னவிர்தரா வானம் வேந்த னமைச்சனில் லாத நாடு
நுவல்பதி மகனில் பூவை தோன்றமு லவியில் வேள்விக்
குவமையாத் தந்தை தாயா முங்களை வனத்துய்ப் பித்தே. (௰௩)

இச்சகம் புரக்க வெண் ா மிசைந்திலே னீன்றோர் தம்மை
யச்சமுள் ளன்பி னேடு பூசனை யாற்றிப் போற்றி
நச்சுட விறந்த பின்ன ரீமகன் கடனி யற்றி
யுச்சமாம் பிதிரு லோகத் துவப்புற வாழச் செய்வல். (௰௪)

புத்திரன் கடமை யீதே யல்லது புவியி லாசை
வைத்துமான் மூழ்க னன்றோ வாழ்வொரு நிலையோ நீர்சென்
னித்தமாம் வழியை யானு நினைந்துடன் செல்வே னென்று
னுத்ததன் மகனைப் பார்த்தவ் வரசனீ துரைக்கு மன்னோ. (௰௫)

வேறு.

பிள்ளைப் பருவத் துளையலைநீ பேதைக் குணத்திற் பேசினையென்
றுள்ளப் படாத பனுவலுணா தானே யுணர்ந்து தகுதியுட
னுள்ளக் கனிவா லீன்றோரை யோம்பித் தன்மம் பலவியற்றி
விள்ளற் கரிய பலிபிண்ட மிடுகன் மகனுய்வியனுலகம். [௰௬]

மெச்சு பவனே யாயிடினும் விரும்பு தந்தை தாயருளா
யச்ச மொடுமுள் ளன்பினொடுந் தவறு தணிபோ லாதரித்தே
யுச்சி மேற்கொண் டொழுகுதறு னுயர்வாந் தன்ம மாதலினு
னெச்சி லளையிந் நகரிருந்து நுனித்த கேள்வி யமைச்சரொடும். (௰௭)

அகிலம் புரப்பா யெனப்போதித் தாட்சி வகையும் விரித்துணர்த்தி
மகிப ளுக்கத் தொல்கணித வல்லோர்க் கூவி வரையறைநாள்
புகலக் கேட்டத் தினத்தருமைப் புதல்வன் றனக்கு மணிகுயிற்றித்
திகழுந் தனது முடிவேய்ந்தான் செறிகா னமரும் படியேய்ந்தான். [௰அ]

எழுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

அரிகரி யுழுவை யாதிபல் விலங்கா ராரணி யந்தனை யணுகி, யுரிமையி னுடன்செல் சுபலனே ஞான கம்பிய னேயென வுரைக்கும், விரிமதி யமைச்ச ரிடுகனி யாதி விளங்கிழைச் சுதன்மையோ டயின்றுங், கரிசறு தவர்வாழ் சாலைபூம் பொழில்கள் கண்டுநாட் சிலகழிந் திடப்பின். (௰௧)

முந்தநல் வினை யந் தடுப்பவைம் புலனு முனிந்துளோன் பிருகுமா முனிபால், வந்தவ னடிதன் முடியுறச் சாத்தி வருவகை வகுப்பவவ் வறவோன், சிந்தையி னுலவாய் முகனடி பதித்தத் தீப்பிணி யழியுணாந் தரசே வெந்தழல் போனிற் றெறுதொழு நோய்பின் வீயுமஞ் சலையது கேண்மோ. (௨௰)

ஒதுமும் மையிற்கா மந்தநா மத்தோ டுறுதன வணிகனு நீநின், பேதைநீ ரகன்று தருணநீர் மையனுய்ப் பிறங்குநாட் குடும்பினி யென்னு,மேதகு மடந்தை தனைமனஞ் செய்து விரும்புபன் னிருமகப் பேறுற், றேதமின் றமர்கா னுந்தையு முனையீ னன்னையு முயர்கதி யடைந்தார். (௨௧)

பின்புனைக் காவல் செய்குந ரிலராய்ப் பேதுறு வேசையர் முயக்கி,லன்புவைத் துன்கைப் பொருள்கல னிலனில் லனைத்தையு மிழந்துபின் னிரந்தும், வன்பகை வினைபொய் யசத்தியங் குறளை வழங்கிப்பன் னகைநவ மணிகள், பொன்பல கவர்ந்து மளித்தனை யிவையோ பொருவில்கற் பினளையு மழித்தாய். [௨௨]

நீபெறு மக்கள் பசியினால் வருந்தி நிலையிழந் தனரவ ரோடு, தாபமில்லாக் குடும்பினி மாதுந் தாய்மனை சேர்ந்தன ரேத்த, சோபனுய் மயக்க மதுநுகர்ந் தடங்காத் துணிவொடு விளைவுறு மெல்லாப், பாபமும் புரிந்தாய் வேந்தனீ தறிந்து பதியினின் றுனையகற் றினனால். (௨௩)

வனமதிற் புகுந்து கள்வரோ டிணங்கி வழிவரல் செல்லல்செய் வோரைச்,சினவிமாய்த் தவர்பொன் கவர்வையிவ் வாறு சென்றபன் னாளவற் றொருநாட்

புனித §விப் பிரனங் கொருவனு றுறநீ போந்துபற் றலுமவன் வெருவி,
யினிமொழி நனிசொற் றிரந்தனன் கேளா தியமனி னவனுயிர் குடித்தாய்.

அக்கணம் பிரம கத்திநிற் பிடித்தாங் கழலெனச் சுடவிட ரனைத்தும், புக்
கன கிழமும் பொருந்திய தாற்றாய் பொருப்பன நிதிகளோ டியானுன், பக்
கமேய் குவலென் றேரிராந் தூதுன் பாரிபால் விடுத்தனை யவளு, மொக்
கலு மோர்ந்து வேந்திலீ தறியி னொறுக்குமென் றெணியிசைந் திலரால்.()

அன்றிரா வேயத் தூதுமீண் டவள்கோ ளறைதல்கேட் டினியறம் புரித
னன்றென வுணர்ந்த யுனதியல் பறியா நான்மறை வேதிய னொருவ, னுன்
றனை டரப்ப வேண்டிவெ வளித்தே யினுமுறு வளைக்கொணர் கென்றாய்,
சென்றவன் சிலமா தவர்க்கொணர் தலுநின் செயன்முழு தறிந்தவன் னவ
ர்தாம். (௨௬)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

சிரித்திது மொழிவார் நீயோ தெரிந்திலோந் தீயோ யையோ
கருத்தினுண் ணினைநி னைந்தோர் கண்டவர் கேட்டோர் சொன்னோர்
வருக்கமு மூழி தோறும் வன்னர குழப்ப ரேநீ
விருப்புடன் கோடி. செம்பொன் கொடுக்கினும வேண்ட லில்லேம். (௨௭)

தருமநீ விழையி னின்ன தனிவனத் துள்ள நேர்சார்
நிருமல கணேசன் கோயி னிகிலமுந் தருபபூண் டாதி
பெருகிமொய்த் துளக ளாந்து பிறங்கிடச் செய்திகல் லும்பால்
வருபவ மறநீ ராடி மறையோதித் தூய்து சென்றாய் (௨௮)

மனைவியுஞ் சுற்றத் தாரு மலைந்துகை விட்ட வாறும்
புனிதராங் கிகழ்ந்த வாறும் புன்கணோ யலைக்கு மாறுந்
தனியுணர்ந் துயர்க ணேசன் றளியினற் பணியே யன்றி
யெனையுறு துயர்நீங் காவென் றெண்ணியெய் தினையக் கோயில். (௨௯)

எண்ணலர்ப் பொருப டைக்கை யிறைவவங் கெனையாட் கொள்ளு
மண்ணலம் முருவங் கண்டா யாடினுப் தாழ்ந்தாய் சூழ்ந்தாய்

---

§விப்பிரன்-கனவர்த்தனனென்னு மோரந்தணன்.

*இனி மொழிநனி சொற்றிரந்தனன். என்பது அவ்வந்தணன் முன்னொரு கன்னி
கையைக் கலியாணஞ்செய்து அவள் புத்திரப்பேறில்லாமல் இறந்துபோனதையும், பி
தூர் கருமங்கட்குப் பிள்ளைவேண்டுமென்பதற்காக இரண்டாவது ஒரு கன்னிகையைக்
கலியாணஞ்செய்திருப்பதில் அவளும் பிள்ளைப்பெறாத பருவத்தினளென்றும் அதற்கா
கத் தன்கையிலுள்ள பொருள்களை வாங்கிக்கொண்டு உயிர்ப்பிச்சை தரவேண்டுமென்
றுந் தாழ்மையாகக்கேட்டுக்கொண்டான்.

பண்ணிறை மறைக ளென்னப் பாடினாய் தட்ட மிட்டாய்
கண்ணறல் பொழிந்தாய் நின்றாய் கன்மனங் கரைத்தா யிப்பால். (௩௰)

பழுதறு தளிக்கு வேண்டும் பணிமுடித் துற்ச வாதி
வழுவில்பூ சனைசெய் வித்து வைகிடு நாளில் வாழ்நா
ளொழியவந் தியமன் றூத ருனைப்பிடித் தீர்த்துத் தாக்கி
யிழிவுபல் வேறி யுற்றி யிரும்பகட் டிறைமுன் னுய்த்தார். (௩௧)

அன்னவ னினது நன்மை தீமையா வையுமா ராய்ந்து
முன்னவன் பணியி னானின் முற்பவத் தநேகந் தேய்ந்த
வென்னினுஞ் சேட மண்மே லிறன்மர பவற்றிற் றீதோ
நன்மையோ முதனீ துய்க்க நயந்திட னுரைத்தி யென்றான். (௩௨)

முதனல னென்று யற்றான் முடிகெழு வேந்தாய்ப் பின்னர்த்
துறைதொழு நோய னுய்வை கினையிது தொலைய வேண்டின
மதகய முகற்போற் றென்றான் மற்றவன் மொழியிற் றேற்றம்
பதிநரா ளையங் கொண்டான் பார்த்திப னனைய தீங்கால். (௩௩)

வஞ்சி விருத்தம்.

உட்கு காவலன், வெட்க மூர்மெயின்,
முட்கள் போலுமவாயப், புட்க டோன்றியே. (௩௪)

ஆயி ரத்தன, வாயிற் கொத்தின,
சாயி ரத்தம்வாள், பாய்புண் ணொத்தனும். (௩௫)

வீக்க ளாற்றிடர், நீக்கொ ணான்முனி,
வாக்கின் மாலின, ஊக்கு மீதென. (௩௬)

தஞ்ச நின்பதம், வஞ்ச னுஞ்சிடக்,
கெஞ்சு கின்றன, னஞ்ச லென்றருள். (௩௭)

அன்னை தாதையா, யென்னை நோக்குவார்
மன்னு வான்புவி, தன்னி னும்மிலேன். (௩௮)

மல்லன் மோனியே, நல்ல பார்வைநல்,
கில்லை யாயினன், செல்லு மாறுனேன். (௩௯)

பழுதி னாயனே, யிழுதைத் யேனினி,
யழியொ ணாவகை, மொழிய வேண்டுமால். (௪௰)

என்ற ரற்றியே, துன்று கொற்றவ,
னன்று றத்துதி, நின்று சொற்றனன். (௪௧)

முதல்வன் வெந்துய, ரிதயங் கொண்டுநொந்,
துதகங் கண்டரச், சுதன்மை கெஞ்சுமால். (௪௨)

ஞாலத் தூத்தம, சீலத் துற்றவ,
தாலிப் பிசசைநீ, பாலிப் பாயெனு. (௪௩)

உந்தி மென்றாகின், முந்தி யேந்தினாள்,
சிந்தை வெந்துயா, னைந்த முங்கினாள். [௪௪]

அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

துன்னிடர் தொலைத்தா ளென்னத் தொழுதிரந் தனர மைச்ச
ருன்னுணை வாய்மை தேறா துறுகணோ யுறுவாற் காத்தா
ளென்னவே னையருங் கூற விருந்தவ னிரங்கிப் பின்னு
மன்னவற் பார்த்துன் னும்மை வழங்கினந் தெளிய கில்லாய். (௪௫)

அனையநா னனிதுன் புற்றா யஃதற விரும்பின் வேந்தே
யுனதுயிர்ப் பொழிந்தி யென்றங் கெழுப்பின னொருங் கார
மினையதிற் புடக ளெல்லா மிரியத்தன் கரக நீரை
முனிவர னிறைமெய் வீச முற்பவ முருக்கொண் டென்ன. (௪௬)

குழிவிழிப் பூத மொன்று குறுகிமன் னவனை நோக்கி
யழிவுமுன் னெனக்கி ழைத்தா யன்னதிண் டிறல்காட் டின்றென்
றிழிவுறாத் தடா மேலோ னிறைமுன்விப் பிரனைக் கொன்ற
பழியிஃ தெனத்தேர்ந் தன்ன பசாசைமுன் னதட்டிப் பின்னர். (௪௭)

வெருவலை கதிநிற் கிவல் பூதமே விளங்கிச் சூதத்
தருவினீ யினையிற் சார்தி யெனலுமவ் வாறு சாரப்
பெருமரத் தோடு பேயு மெரிபடப் பினரப் பூத
மொருபெருந் தேவ னாயவ் வுயர்தவற் பணிந்து கூறும். (௪௮)

இன்னவேந் தெனைமுன் கொல்ல விவற்பிடித் துழந்தே னிந்நா
ணின்னது சேவை யாலிந் நீணலம் பெற்றே னென்றா
னன்னபோ திறைவ னோக்கா லாங்குறு மானத் தேறித்
துன்னினன் கதியி னிப்பாற் பிருகுமா முனிவன் சொல்வான். (௪௯)

வெந்திறற் சாயை வேந்தே வெந்தது கண்டா யைங்கைச்
சுந்தரன் சரிதங் கேட்கிற் றுன்புசெய் தொழுநோய் தீருஞ்
சந்தவீ டெய்து மின்ன தகைமைசேர் மருந்த லாதென்
புந்தியில் வேறு காணேன் புனல்படிந் திவண்வா வென்றான். (௫௰)

*உம்மை- முற்பிறப்பின் விர்த்தாந்தம்.

நிருபனீ ராடி மேனி நீறணிந் தக்க மாலை
திருவுறப் புனைந்த ணைந்தான் சீர்தரு தவத்தி னன்ற
பிருகுமா முனிசங் கற்பம் பேசினன் பேச லோடு
முருவிடைத் தொழுநோய் கொண்டா னுடனதை தொழியக் கண்டான் (௫௧)

காணரும் வியப்புக் கண்ட காவலன் முனிவன் பாத
நாண்மலர் தொழுது வாழ்த்த நன்மனை யமைச்ச ரோனோர்
பூணணி விம்ம வின்பப் புணரியுண் மூழ்கி மேலோய்
மாணிப முகவன் சீர்த்தி வகுக்கவென் றடிதாழ்ந் தாரால். (௫௨)

மாதவ னேக தந்தன் மலர்ப்பதங் கருத்தி லுன்னி
யோதினன் புராண மன்ன துவப்பொடு கேட்டு மன்ன
னாதரம் பெருகப் பாரா யணஞ்செய்தா னோராண் டைங்கை
நாதனல் லருள்பா லித்து நவிலிருங் கணங்கண் மொய்ப்ப. (௫௩)

ஒளிவளர் விமான மொன்றங் குய்ப்பமா தவனை யேத்தி
யளிவள ருளத்து மன்னன் பனைமதி யமைச்ச ரோடுங்
களிகொள விமானஞ் சேர்ந்தா னன்னது ககனஞ் செல்கால்
வளமலி தன்னூர் கண்ட சுதன்மைமன் னவனை நோக்கி. (௫௪)

வரவெதிர் நோக்கி வாழெம் மைந்தற்கா னாத கன்றூற்
பொருவறு துன்பந் தாழும் பொய்பல மெய்யே காட்சி
பெருமையி னவற்கு நலகிப் பின்னர்நாங் கதியிற் சேற
லருமைநா யகனே தக்க தாமென வறைந்தான் மாதோ. (௫௫)

அன்னது கணங்கள் கேளா வரசநின் மைந்தற் கிந்நா
ணன்மைசெய் கருத்துண் டேலிந் நலமலி விமானந் தன்னை
யுன்னகர்க் கணித்தா வுய்த்து மென்றவ்வா றுய்ப்பத் தன்பான்
மன்னுமந் திரனை மன்னன் மகிழ்ந்துதன் மகன்பா லுய்த்தான். (௫௬)

அன்னவர் கடிதி னேகி நிகழ்ந்ததை யனைத்து மன்னர்
மன்னவன் மகற்கி சைப்ப மகிழ்ந்தெழுந் திறும்பூ தெய்தித்
தொன்னக ருள்ளா ரெல்லாஞ் சூழ்தர விரைந்து சென்று
தன்னிரு குரவர்க் கண்டான் றாழ்ந்துதா தையைப்பார்த் தெந்தாய். (௫௭)

தனித்துனைப் பிரிந்து வாழே னினியென்றுன் றலத்தார் தாமு
மினித்தனை வாழ்வி லாசை யிலையெமக் குய்தல் வேட்டே
மனத்துய ரொழிப்பா னல்வாய் மாமுக னுலகிற் சேர்ப்பாய்
கனதநினைப் பழிக்கும் வண்கைக் காவல வென்று தாழ்ந்தார். [௫௮]

தன்னரு மகனு §நாக ரீகருஞ் சாற்றல் கேட்டு
மன்னவர் மன்னன் மாழ்கி மாமுக னுலகிற் சேர்த்த
லென்னது தரமோ நீவி ரியற்றிய தவப்பே றுண்டே
லன்னவ னுலகந் தத்தி லடைந்தருள் பெறுவீ ரொன்றான். [௫௯]

இன்னவை கணங்கள் கேளா விரங்கிமன் னவநின் றோன்றன்
முன்னர்முன் னவனை யேத்தி முற்றிய பயனு லன்னான்
றன்னுல கத்தி னுயகருந் தகவின னாகி நீவிர்
துன்னுமிவ் விமானந் தேறச் சுதந்தர னானான் றேற்றம். (௬௰)

தனிநகர் மாக்க ளெந்தை சரிதங்கேட் புறினுங் குய்க்கும்
புனிதரா குவர வர்க்குப் புகலவு மமைய மீதன்
றெனினுமன் னதுப யக்கு மியல்பிற்றோர் வாய்மை யுண்டே
துனைவினோ துதுமென் றியார்க்குந் துயரற வியம்பு மன்றே. [௬௧]

புவியுற்றுத் தீர்த்த மேன்மை பொருந்திய கங்கா தீரத்
†தவிமுத்தத் தைங்கை வள்ள லமருமா வரண மேழிற்
சவிமுற்று மெண்ணேழ் மூர்த்தங் கொண்டநா மங்க டம்மைச்
செவிமுற்ற நயந்து கேட்கிற் சேர்வராங் கரன்வைப் பென்னா. [௬௨]

---

§நாகரீகர்-நகரவாசிகள்.

†அவிமுத்தத்தைங்கைவள்ளல மருமாவரணமேழிற்- சவிமுற்று மெண்ணேழ்மூர்த்தங் கொண்ட நாமங்கள், காசிக்ஷேத்திரத்தின் கண்ணுள்ள எழுவகை ஆவரணங்களில்.

முதலாமாவரணத்தின் மூர்த்தங்கள்.
துண்டிவிநாயகர்.
துர்க்கைவிநாயகர்.
அர்க்கவிநாயகர்.
பிரசன்னவிநாயகர்.
வீமவிநாயகர்.
சந்திரவிநாயகர்.
ஆறு.

இரண்டாமாவரணத்தின் மூர்த்தங்கள்.
சித்தரூபவிநாயகர்.
இலம்போதரவிநாயகர்.
கூபதந்தவிநாயகர்.
சலாடகவிநாயகர்.
குலப்பிரிடவிநாயகர்.
சதுர்த்திவிநாயகர்.
பஞ்சமிவிநாயகர்.
முண்டவிநாயகர்.
சமுசிகவிநாயகர்.
விடங்கவிநாயகர்.
நிசவிநாயகர்.
இராஜபுத்திரவிநாயகர்.
பிரணவவிநாயகர்.
உபதாபவிநாயகர்.
பதினான்கு.

மூன்றாமாவரணத்தின் மூர்த்தங்கள்.
வக்கிரதுண்டவிநாயகர்.
ஏகந்தவிநாயகர்.
திரிமுகவிநாயகர்.
பஞ்சமுகவிநாகர்.
ஹேரம்பவிநாயகர்.
விக்கினராஜவிநாயகர்.
வரதவிநாயகர்.
மோதகப்பிரியவிநாயகர்.
எட்டு.

நான்காமாவரணத்தின் மூர்த்தங்கள்.
ஏகோபயப்பிரதவிநாயகர்.
சிங்கமுகவிாயகர்.
கூர்நிதாக்ஷவிநாயகர்.
கிப்பிரப்பிரசாதவிநாயகர்.
சிந்தாமணிவிநாயகர்.
தந்தவக்கிரவிநாயகர்.
அபிசண்டிவிநாயகர்.
ஊர்த்துவாண்டமுண்டவிநாயகர்.
எட்டு.

ஐந்தாமாவரணத்தின் மூர்த்தங்கள்.
மணிகர்ன்னவிநாயகர்.

அருட்டரு மெண்ணேழ் மூர்த்த நாமமு மறைந்த கேட்டப்
பெருநகர் மாக்க டாமு மமரரிற் பிறங்கி மான
மருவிகல் லமைச்சர் வேந்தின் மனைசுத ரொடுமோங் கெய்திப்
பொருவில்சா மீப மென்னும் பதவியிற் பொலிந்து வாழ்ந்தார். (௩௩)

காவலன் றனியே ரம்பன் கருணையா லெழிற் சாரூப
மேவியா தயன்றே சுற்று விளங்கினு னினைய வாற்றா
லாவலி னிப்பு ராண மருச்சித்தோர் படித்தோர் கேட்டோர்
யாவரும் பொருள்க ணான்கு மடைகுவ ரொளிதின் மாதோ. (௩௪)

காசிபன் மூர்த்தங் கொண்ட கணேசனூர் நாமங் கேட்டோர்
பாசவல் வினையி னீங்கிப் பாகதி யடைந்தா ரொன்னி
லாசையோ டாங்குச் சென்றோ ரவ்வொளி ருருவங் கண்டோர்
பூசனை புரிந்தோ ரெய்தும் பொருவில்பே றுரைக்கற் பாற்றே, (௩௫)

சோமகாந்தனுபாசனைப்படலம் முற்றுப்பெற்றது,

ஆகப்படலம் ௩-க்கு திருவிருத்தம். [௨௱௫௰௨]

---

## மூவருபாசனைப்படலம்.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

பிருகுமா முனியைச் சார்ந்த பெற்றியாற் சோம காந்த
னொருமருப் பினன்சா ரூப முற்றிடு திறனீ தன்னான்
றிருவடி வழிபா டாற்றித் திசைமுக னாதி மூவர்
பொருவின்முத் தொழில்கைக் கொண்ட புதுமையைப் புகல லுற்றாம். (௧)

---

ஆசாசிருட்டிவிநாயகர்.
கஜகர்ன்னவிநாயகர்.
கண்டாவிநாயகர்.
சுமங்கலவிநாயகர்.
மந்திரவிநாயகர்.
ஆறு
ஆறுமாவரணத்தின்
மூர்த்தங்கள்.
மோதகவிநாயகர்.
சுமுகவிநாயகர்.

துன்முகவிநாயகர்.
கணபவிநாயகர்.
அபரவிநாயகர்.
ஆக்கினைவிநாயகர்.
துவாரவிநாயகர்.
அவிமுத்தவிநாயகர்
எட்டு.
ஏழாமாவரணத்தின்
மூர்த்தங்கள்.
ஆமோதவிநாயகர்.

பாகீரதவிநாயகர்.
அரிச்சந்திரவிநாயகர்.
கபர்த்திவிநாயகர்.
பெந்துவிநாயகர்.
சனகவிநாயகர்.
ஆறு.
ஆகமூர்த்த நாமங்கள்
ஐம்பத்தாறும்.

முன்னொரு பிரளயத்து மூவர்க்கு முதலா மேலோன்
மன்னுயி ரனைத்துந் தன்பால் வந்திளைப் பாறும் வண்ணம்
பன்னுசங் கரித்த லாக வொடுக்கிப்பின் படைப்பா னெண்ணித்
துன்னறி வுருவாய் நாமம் வக்கிர துண்ட னாகி. (௨)

முக்குணத் தயன்மா லீசன் மூவரை முறைப டைத்தான்
றொக்கவர் தமையிவ் வாறு தோற்றல்செய் முதலைக் காண
வொக்கநற் றேவ வாண்டா யிரமுறு நோன்பி யற்ற
மிக்கவர்க் கெதிர்தோன் றுற்றான் வக்கிர துண்ட மேலோன். (௩)

கலிநிலைத்துறை

புகலு மத்தனி முதல்வனைக் காண்டலும் புகழ்ந்தே
யகில மியாவையும் படைத்தளித் தழித்திடு மமல
சகல தத்துவ மாயினாய் தத்துவா தீத
பகவ புங்கவ கணேசநின் பதமபணி குதுமே. (௪)

ஆதி மத்தியீ றல்லவ வகளங்க வரிய
மாத வத்தருட் கோயிலா வதியும்வா னவமெய்ப்
போக வானந்த வடிவுகொள் பூரண வலவை
பாதி யானவ கணேசநின் பதம்பணி குதுமே. (௫)

$நவமெ னப்படும் வடிவிறந் தவவிடர் தணுகா
தெவர்நி னைப்பினு நினைத்தவாங் கருள்பவ விறைவ
புவன மெத்தனை யத்தனை யும்புரப் பவவெம்
பவம றுப்பவ கணேசநின் பதம்பணி குதுமே. (௬)

வாத வக்கிர துண்டமுக் குணங்களில் வானை
யுரமு றுத்திரா சதத்தினா லோங்குசாத் திகத்தா
லானை மிக்கதா மதத்தினா லரிதனை யளித்த
பாம செக்கர்மா மேனிய வெனப்பழிச் சினரால். (௭)

இன்ன வாறுதோத் திரிப்பவக் கிரதுண்ட விறைவன்
பன்னு மூவிர்கா ணீவிரிங் ஙனமெமைப் பாவிச்
சொன்ன மேன்றுதிக் குவந்தன மித்திறந் துதிப்போ
ருன்னும் யாவையு முதவுது முறைமினும் வேட்கை. [௮]

---

$நவமெனப்படும் வடிவாவன- பிரமன்; விஷ்ணு, உருத்திரன், மகேசுரன், சதாசிவன், விந்து, நாதம், சத்தி, சிவம்.

தருது மென்னவம் மூவருந் தாழ்ந்தமீ ளவுநின்
றுருகு ளத்தராய் நின்பதத் தழுவலன் புந்தப்
பெருகு பத்திமை தந்தெமைக் காத்தலே பெரியோ
யருமை யாகநீ யெங்களுக் கருளுநல் வரமாம். [௯]

அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

என்னலுங் கணேசன் வேத னிராசதத் தாக்க மாய
னூன்றுசத் துவந்த ளிக்க விறைதமத் தொடுக்க வென்று
பின்னுமந் தொழிற்கு வேண்டும் *பேருணர் வாற்ற லெல்லா
நன்னரி னருளிச் செய்தா னான்முக னிறைஞ்சி யெந்தாய். (௰)

படைப்பிய றெளிய வெற்குப் பகரென விசுவ ரூப
மிடற்பட வெடுத்துத் தூங்கும் வியன்றுதிக் கையின்வ ழித்தா
யுடற்குளுய்த் திருவர் தாமு முடன்புகத் தனத கட்டிற்
றொடக்குறு மண்ட பிண்ட சராசர மனைத்துந் தோற்றி. [௰௧]

காணுமா றருளிச் செய்து கமலனை யத்து வாரத்
தேனுற விடுத்து மற்றை யிருவரை யிரண்டு காதின்
மானுறு துவாரந் தன்னால் வரவிடுத் தனன்பின் வேதாப்
பூணுமோர் தருக்கா லன்னோற் போற்றிடான் சிருட்டி செய்தான். (௰௨)

அன்னதோ டத்தோர் சென்னி யானன மிரண்டு கண்மூன்
றின்னன விருபம் பல்வே றுயியை வுருது தோன்றிப்
பின்னவன் றனைக்க றுத்துப் பெருங்கையாற் றூக்கித் தள்ளி
யுனனருந் தன்பத் தாழ வுளூற்றிய ததுபொ றானாய். (௰௩)

மிக்கிவை குரூபத் தெய்தல் விக்கினே சரன்றாள் போற்றித்
தக்கசிட் டியைத்தொ டங்காத் தன்மையா லெனவா ராய்ந்தே
யக்கணம் புனரேய்ந் தாற்றுங் கடன்முடித் தண்ணல் பொற்றாள்
பொக்கறு மனத்துட் கொண்டு பொருந்தினான் யோகத் தாங்கே. [௰௪]

விதிபுரி செயற்கெம் மானும் வியந்தவன் முன்பு தோன்றிப்
பதுமவா தனத்தோய் நம்மை மறந்துநீ படைப்பிற் புக்கா

---

*பேருணர்வாற்றலெல்லா நன்னரினருளிச்செய்தா னென்பது- வேதாகமபுராண கலைகளைக்கொண்டு யாவையுஞ்சிருட்டிசெய்யத் தக்கசத்தியைப்பிரமனுக்கும், யோகத்தினால் வேண்டியவடிவங்களைக்கொண்டியாவையும் இரக்ஷிக்கத்தக்கசத்தியை விண்டுவுக்கும், ஏகாக்ஷரசடாக்ஷர மந்திரங்களைக்கொண்டு எங்குந்தானாகவிருந்து யாவையுஞ் சங்காரஞ்செய்யத்தக்க சத்தியை உருத்திரனுக்குங் கொடுத்தருளினார்.

யதனினிவ் விடர்க ணின்னே யடைந்தன வினிச்சி ருட்டி
முதன்மையெய் துதற்கு பாய மொழிகுதுங் கூர்ந்து கேட்டி. (மரு)

நம்மருட் சத்தி மாருண் ஞானமேே கிரியை யென்றுஞ்
செம்மைசேர் சத்தி மாரைச் சிந்தையிற் கொண்டு நாளு
மம்மரொய் தாது சிட்டி வகைதொடங் கிடுதி யென்னு
விம்மென மறைந்தா னெல்லா வுயிர்தொறு நிறைந்தா னென்றும். (மசா)

சித்தியைங் கரத்தோன் வாய்மை சிரங்கொடு சத்தி மாரைப்
பத்தியிற் றியானஞ் செய்து பரவலு மிரங்கிச் சித்தி
புத்தியென் றுரைக்கு நாமம் பொருந்தியே யெனைத்து மாக்குஞ்
சத்திக ளிருவர் தாமுந் தோன்றினர் தாதா முன்னர். (மஎ)

மலரவன் வணங்கிச் சித்தி புத்தியென் னுமம் வாய்ந்தே
பலர்துதி தாய்மீர் நான்செய் படைப்புநன் குறவு நீரொன்
னிலகுறு புதல்வி மாரா வெய்தவு மருண்மி னென்ன
நலனுற விசைந்தார் வேத னன்குசிட் டித்தல் செய்தான். (மஅ)

மூவருபாசனைப்படலமுற்றுப்பெற்றது.

ஆகப்படலம் எ-க்குத் திருவிருத்தம். [உாமய]

---

## திருமணப்படலம்.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

மூவரைப் படைத்தன் றோர்க்கு முத்தொழில் வழங்கல் செய்த
தோவற நவின்றுஞ் சித்தி புத்தியென் பவரு வந்து
பூவினன் சுதைக ளாகப் பொற்பின்வாழ் தரவன் னுரை
மாவத னத்தோன் வேட்ட வண்மைநன் கறைதல் செய்வாம். (க)

மன்னுல கனைத்து நன்கு வகுக்குமா றருளிச் செய்து
தன்னரு மகளி ராகிச் சார்சித்தி புத்தி யென்று
மன்னைய ரிருவர் தம்மை யைங்கர நால்வாய் முக்கண்
முன்னவன் றனக்கு மன்றன் முடிப்பவுண் மதித்தான் வேதன். [உ]

*மாடக மகதி நல்யாழ் வல்லநா ரதனசி தோர்ந்தே
பீடுயர் பொழில்சூழ் வெள்ளிப் பிறங்கலை யடுத்தே நம்பன்

---

* மாடகம்-வீணை முறுக்காணி.

றுடலைக் கொண்டி சைத்தேன் றுறையிற் பொழிந்தன் னுன்ற
னுடலைப் புகழ்ந்து பாடி யருள்பெறீஇ நுவல லுற்றான். (ங)

வாசமென் கமலப் புத்தேண் மானதத் திருநல் லார்மா
தேசொடு தோன்ற லுற்றார் தேவநிற் கவர்க டம்மைக்
காசகல் வதுவை யாற்றுங் காதன்மிக் குள்ளா னன்றோ
னுசையி னதிபொற் பாரா டவர்தமை யமைப்பி னென்றும். (ச)

நின்னது வடிவை யெண்ணு நிகரின்மா தனைய மைப்பின்
மன்னெழி லனைய மாதர் வடிவையெண் ணுறுமென் றானீங்
கன்னவ ரழகை யெண்ணு லறைகுத றமோ வென்றப்
பொன்னனார்ப் பரவு மாதர் புரத்திலக் கணமுஞ் சொற்றான். [ரு]

கலிவிருத்தம்.

எந்தை கேட்டங் கிசைந்தருள் செய்திடச், சிந்தை யோகை சிறந்து சதுர்முகன், புந்தி தோன்றிய பூவையர் தம்முனர், வந்து நாரதன் சாற்றுவன் மங்கைமீர். [சா]

கொன்றை வேணிக் குழகன் விநாயகன், மன்றல் செய்ய மதித்தனனுங்களை, யென்ற போதவ் விலங்கிழை யார்களு, மன்ற வார்வ மனத்தமைத் தாரரோ. [எ]

பங்க யன்னுமை பங்கற் கிஃ திசைத், தங்க ளுவரு ளென்ன வருளலுஞ், செங்கை யைந்துடை யான்றிருத் தாள்பணிந், தெங்களுத வியம்புவதொன் றுண்டால். [அ]

அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

நின்னது செயன்மற் றியாதாய் நிகழ்கின்ற ததுவே யன்றி
யிங்கில மதனில் வேறு செயலுண்டோ வென்பா னிநல்
கன்னியர் தமைநீ வேட்டல் வேண்டுமென் றென்னி யின்பந்
துன்னுறு தியாண்டு மென்று னிசைந்தனன் சுமுக வள்ளல். [கூ]

திசைமுகன் மகிழ்ந்து முன்னோன் றிருமணத் திறந்நீட் டோலை
மிசையுல கத்தோ ரிம்பர் வேந்தரா தியருக் குய்த்து
விசுவகன் மனைப்பார்த் தேயிவ் வேட்பினுக் கிசைய யாரு
நசைகொண்மண் டபங்க ளாதி சமையென நயந்தி றைஞ்சி. [ய]

நகரமொன் றினித மைத்தந் நகரத்தின் புறஞ்சூழ் நொச்சி
தகுதியி னெழுப்பி நான்கு கோபுரஞ் சமைத்துள் ளாக

வகலிய மதிலுண் மேடை யாதிசெய் தாடத் தெண்ணீர்
மிகுகுளம் பொழிலுய் யாளம் விதம்வித மாகக் கண்டே. [யக]

அணிநகர் நடுவண் மன்ற லாற்றலுக் கியைந்த பற்பன்
மணியினு மேரு நாணு மாற்றுயர் பொன்னி னானுந்
திணிபெறு பளிங்கி னானுந் திகழ்மதி காந்தத் தானும்
பணிமிக மாட்சி தங்கு மண்டபம் பதித்தல் செய்து. [யஉ]

மண்டப நடுவே யொன்பான் மணியினா லிழைத்த சோதி
மிண்டரி யணையொன் றிட்டான் மங்கல வேள்விச் சாலை
குண்டமு மமைத்தா னட்ட மங்கலஞ் சுண்ணக் கோலங்
கண்டன னெங்குஞ் சென்று கண்டவர் நனிவி யப்ப. [யங]

ஏரொலா மயன்வ குப்ப தெனினுமிம் மயன்வ குத்த
சீரொலா நோக்கி நோக்கித் தேவர்கோ மான்போ னன்மெய்
யாரவா யிரங்கண் ணேயா தெண்கண னானே னென்றுற்
பூரணமாக யாவர் புகல்வரந் நகர்மாண் பிப்பால். [யச]

மன்றல்சான் முடங்க லக்கை வாங்கியோர் * கால்வே கத்தை
வென்றவோர் மனவே கத்தான் மேதினி வான்றிக் கெங்குஞ்
சென்றுசென் றுய்ப்ப வன்ன திருமுகம் பெற்றோ ரொல்லா
மின்றுநன் றெய்திற் றென்னா வினிதுள மகிழ்ந்தெ ழுந்தார். [யரு]

சலநிதி கடைநா ளிற்போந் தெனத்தவ ராவார் பூவார்
புலவர்மற் றேனோர் தத்தம் புதல்வரா தியரோ டெம்மா
னிலகெழின் மணவி ழாக்கண் டேத்தவந் தார்வந் தாரெண்
ணலகில வனையர்க் கெல்லா §மமலையு முடையும் பூணும். [யசா]

இணையறு பதுமஞ் சங்க மெனுமிரு நிதியுஞ் சிந்தா
மணியுமைந் தருவுங் காம தேனுவும் வளங்க ளுள்ள
பணிவுட னளிக்கத் துய்த்தும் பாங்குற வுடுத்து மெய்யி
லணிவன வணிந்து மின்ப வாழியிற் றிளைப்பா ராக. [யஎ]

பொன்னகர்க் கிறைவன் வேறு பொன்னக ரடைந்தே மென்னா
மன்னுபே ருவகை பூத்தான் வானக ரத்தா ரொல்லாம்
பன்னுமிவ் வியப்பி னோங்கு பதிமுனங் கண்ட தின்றா
லென்னமிக் கோகை யுற்றா ரெண்ணுறுந் தோறு மாதோ. [யஅ]

---

* கால்வேகம்-வாயுவேகம்.

§ அமலை சோறு

திணிவரை நிகர்தோண் மைந்தர் செப்பிள முலையார் சில்லோ
ரணிமணை விதான நோக்கி யலர்விழி யிமையா ராஞர்
மணிவட முலையார் சில்லோர் வாகைசேர் கணவ ரோடும்
பணிசெய்கந் துகங்கொண் டாடிப் பலருளங் களிப்பச் செய்தார். (௰கூ)

மொய்யளி முரலுஞ் செந்தா மரைமுக முறுவற் சில்லோர்
பையர வல்கு லார்தம் பாங்கிய ரோடெங் கூடி
மைவிழி கீழ்மே ஞெக்க மணிபணி தனங்கு லுங்கக
கைவளை கலக லென்ன வாடினர் களங்கம் மானா. [உ௰]

பெருமதக் களிற்றின் வெற்றி போரணி நடந்து வாவும்
பரிகளின் செயம்வன் சேவல் பகர்கவு தாரி காடை
பொருதக ரிவற்றின் போராற் புகழ்தரு வீரங் காணு
வரசர்க டருக்கி னோடு மகமிகு களிப்பி னுற்றார். [உக]

முனிவரர் சுருதி யாற்றன் மொழியறம் பொருள்க ளின்பந்
துனிதவிர் முத்தி வாதந் தொடுத்தினி தியம்பா நின்று
ரனகனர் சிறப்பிற் சொன்ன வாகமப் பொருள்க ளாய்ந்த
சனகாதி யர்மா யோக தத்துவந் திறம்பே சுற்றார். [உஉ]

கலிவிருத்தம்.

மங்க லந்திரள் காணவந் நேர்செய
லிங்கி தாகவெம் மீசன் றிருக்குறிப்
பைங்கை வள்ள லறிந்துசங் கற்பத்தாற்
பொங்கு தெய்வப் புனல்படிந் திட்டனன். [உ௩]

§பிங்க லக்கலை பெட்பிற் றரித்தனன்
கொங்கு மிக்குக் குளிர்தரு செச்சையை
யங்க மெங்கை யணிதிரு மார்பினும்
பொங்க ரொத்த புயத்தினும் பூசினன். (உ

திங்கள் போழ்சடை சேர்துமென் றெண்ணிய
பொங்கு கோள்கள் புரிதவத் தன்னவு
மெங்க ளாதன் மிலைந்த தெனச்சிரந்
தங்கொன் பான்மணித் தண்முடிச் சூட்டினன். [உ௫

ஒன்று மண்டத் திருண்டிடி யொன்றினிற்
பொன்றல் செய்துதற் கண்புறம் போதர

§பிங்கலக்கலை- பீதாம்பரம்.

னின்றி டத்தடை செய்தலி னெற்றியின்
மின்ற யங்குபொற் பட்ட மிலங்தனன். [௨௬]

மாத ரோங்கு மணிமுடி மேவிய
சீதன் றேசின் வடிவந் தெரித்தல்போற்
பூதி பூசிப் பொலிந்தொளிர் வாணுதன்
மீது பொட்டு விளங்கப் பொறித்தனன். [௨௭]

தோகை மாரிய றேய்$வட மீனும்ப
தாகை மீனுந் தனதருட் கட்கடைக்
காகை வேண்டி யமைந்திடல் போலிரு
வாகு சேர்செவி வாய்ந்தனன் குண்டலம். [௨௮]

துங்க நல்வரைத் தோளி னவமணி
யங்க தத்தோ டலங்கு கடகமென்
செங்கை நாணா சீறடி நூபுரந்
தங்க வாழி விரலினுஞ் சாத்தினன். [௨௯]

எழுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

வடிவுறப் புனைந்த மணவணி நோக்கி மறைமுத லுமையொடும் விடையூர்ந், தடல்கொளோர் மருப்பின் யானைமா முகனை யணிகொ*ளீ ராயி ரமருப்பின், மிடல்செறி யானை மிசையிவர் வித்து வேளைமா மஞ்ஞையூர் வித்துப், புடையெலா மனந்த ராதியோர் பறைமந் திரங்கலை யாதிகள் பொதுள. (௩௰)

பூதர்க டொகுதி செயப்பிர தாபம் புகழ்ந்துமுன் கட்டியம் புகல, மாதவர் வேத மனுக்களாற் றுதிப்ப வட்டவெண் மதிக்குடை நிழற்ற, மேதகு கவரி யிருபுற மிரட்ட வெண்டுகிற் பதாகைவான் றூர்ப்ப, வேதமில் பஞ்ச வாத்தியங் கறங்க வெழுந்துவிண் ணெறிப்படர்ந் தனரால். (௩௧)

---

$ வடமீனும் பதாகை மீனுந்தனதருட்கட்கடைக்காகைவேண்டி, என்றது அருந்ததி- மீனக்கொடி- யென்னும் இருமீன்களையும் இருமகரகுண்டலங்களாக்குதல் இறைவன் பக்குவான் மாக்களுக்குக்கடாக்ஷித்தல் மீன்போல் நோக்குதலும் ஒன்றுதலால் அதைவிரும்புதல்போன்று என்றும் அவைக்கடைக்கண்ணோக்கம் பெற இச்சித்தல் போன்று- என்றும்- கொண்டதாம்.

* ஈராயிரமருப்பின் மிடல்செறியானை-அயிராவணமென்னும் பெயருள்ள பெரிய யானை.

இன்னண மெண்டோ ளிறையவ னுமையோ டிபமுகத் தைங்காத் தெ
ந்தை, பன்னுமற் றெவரும் புறப்பெருங் கடல்போற் பாங்குறப் போதா
லறிந்து, பொன்னூரத் தவனும் பிரமனு மற்றப் புல்வரும் போந்தெதிர் வ
ணங்கித், தன்னிகர் நகரி னணிகிளர் வீதி தகவுடன் வலமுறச் செய்து. ()

மணவணி புனைசெய் மண்டபத் துய்த்தார் வாணிசென் றிரும்புனல்
வார்ப்பப், பணிவொடு கமலன் கணபதி பாத பங்கயம் விளக்கலு மிதழிப்,
பிணையல்வே யிறைவெற் பிறைவியோ டெழில்கொள் பீடமார் தாக்கண ப
தியு, மணிமணிப் பீடத் த ார்ந்திடப் பிறரு மயலமைத் திடுதவி சிருந்தார்.

அறுசீர்க் கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

மணவினைக் கடுத்த வோரை வர்ல்குறித் தனுதி யான
கணபதி யுடன்பல் கிதங் களின்மகிழ்ந் தமர்ந்தார் யாருந்
திணிமணி வடமார் கொங்கைச் சித்திபுத் தியர்க ணன்கு
புணர்திரு மணக்கோ லங்கொள் புதுமைசற் றினிச்சொல் கிற்பாம்

மங்கைமார் சிலரன் னாரை மணிதிகழ் பீடத் தேற்றி
யங்காஞ் சிவப்பத் தான மளித்தபின் றயில நீவிக்
கங்கைநீ ராடிப் பொன்னங் கலையணாக் கசைத்தெ ழிற்பூங்
கொங்கைநன் னிறங்காட் டாமை கோட்டல்போற் களபம் வேய்ந்தார்.

இருளையீர்ந் திந்து டேற்று லெனவகுப் பெடுத்தவ் விந்துக்
கரிகளா மீ ராவு மொன்றியாங் கடுத்த தேய்ப்பப்
புரிசடை யொடுபொன் னுகப் பூணிட்டார் நுதற்பூண் வானிந்
திரதனு வினைக்கார் மாட்டுச் செறித்தெனக் குழற்பாற் சேர்த்தார். (௩௬]

முன்னவ னங்கை யேந்து முரட்கொடி மயிலுஞ் சென்னி
துன்னவேய் மதியுங் காந்தன் றொல்லிலச் சினைய வற்றைப்
பன்னியர் தலைமீக் கொள்ளல் பாங்கென வமைப்பார் போன்று
மின்னிளம் பிறைம யூர மெனுமணி முடிவேய்ந் தாரால். [௩௭]

தலைவன்மெய்ந் நிறந்தெ ரிக்குஞ் சால்பிற்சேர் திலக மிட்டா
ரலர்விழி கறுப்பூர் வெண்மைத் தாதன்மா லமர்பா லாழி
நிலையெனு வதனங் கொங்கை நிழன்மதி வரையென் றோர்காற்
புலனில்விண் ணவர்ம திப்பான் புகாதெழி னியின்மை யிட்டார். (௩௮)

தப்பினித் திலமூக் குத்தி தையலார் கொழுநன் கீர்த்திக்
கொப்பெனத் தேற்று வார்போ லுயர்திரு காசி வேய்ந்தார்
துப்புமூக் கனங்க ளன்ன தோகையர்க் காடற் றொன்மை
செப்பலின் மணிசெ யன்னக் கொப்புமேற் சாதிற் சேர்த்தார். (௩௯)

ஒருகோடி §யொகாரந் தன்னை யுச்சியிற் பொருத்தல் போன்மற்
றொருகோடி மகாரந் தன்னை யொசிந்தொளிர் காதி னூடு
செருவிட றகவென் பார்போற் றிகழம்பொன் மணியி னுற்றிப்
பெருகொளிக் குழையெ னும்பூண் பரிதிவாள் பிறழப் பெய்தார். (சம)

வலம்புரி யென்னத் தூய்தின் வளர்கண்டத் திமையோர் நாத
னலந்தரப் புனைபல் பூணி னுதனுந் திருநாண் வைக
வலங்கா தனநீள் பீட மமைத்தென மணியொன் பானுந்
துலங்குமுட் கட்டுக் கோவை சூழ்தரப் பூட்டி னால். (சக)

பீடுயர் தனங்கட் கிட்ட †பெரும்பரம் வெளிக்காட் டார்போன்
மாடைசேர் கச்சின் மீது மாணிக்கம் வயிர நீலஞ்
சேடுறு பவள மாதி நவமணி சிறந்த கோவை
யாடகத் தாந்தார் பூந்தா ரணிந்துமே லலங்க ரித்தார். (சஉ)

பெய்தன்ர் விரல்கட் கேற்ப மணிசெய்து பிறங்கு மாழி
கைவளை கடக மிட்டார் கவினெறி கலாப மாதி
$யைவகை யணியு மார்ப்ப வசைத்தன ரொன்று மைய
மெய்துநுண் ணிடையில் வண்டு கொடியினுற் றிமிர்தல் போல. (சங)

ஏதமில் வேதம் பன்னு முடியு மெய்தாப் பாத
மேதக வின்று கண்டா மெனப்பற்றி வியத்த லேபோற்
*ரூதனூ புரஞ்ச தங்கை பாடகந் தண்டை யார்ப்பப்
பாதசா லம்பூட் டிச்செம் பஞ்சுமூட் டினர்நன் கெய்த. (சச)

எத்திக்கும் பணிசெய் தேத்து மேரம்பன் பணிகட் கேற்பச்
சித்திக்கே யதிதி யோடு திருமக ளிந்தி ராணி
புத்திக்கே யிரதி சாவி புகழன சூயை யாருஞ்
சத்திக்கூர் விழியார் தாமிவ் வணஞ்செய்தை யலராம் பின்னர். (சரு)

திருவளர் சிவிகை யேற்றி நகர்வலஞ் செய்வித் தார்பின்
வளைசெய்நல் லோரை யோர்ந்து மாங்குழை கூர்ச்ச மாதி
பொருள்கொடு சனக யோகர் வதுவைமண் டபத்துப் புக்காங்
கொருதவி சிருப்ப மாத ரொண்ணகர் வலம்போந் தாங்கே. [சசா]

§ ஓகாரம்- மயில்.

† பெரும்பாரம், பெரியகவசக்கட்டு.

$ கிங்கிணி, கலாபம், பருமம், மேகலை, காஞ்சி, என்னும் ஐவகையணிகளாம்.

* நூபுரம்- பொன்னுகிய உலோகத்தாற்செய்த சிலம்பு.

வதுவைமண் டபத்தி னுப்பண் மணியரி யணையில் வைகும்
விதுவணி நெடுங்கோ டீர விநாயகப் பெருமான் பாங்கர்க்
குதுகுலித் திருந்தார் மன்றற் குரவனா கமத்தி னாற்றாற்
புதுமணத் தினர்க்குச் செந்தேன் பொருவிறீங் கனிபா லீய்ந்து. (௪௭)

பிரமனை நோக்க வன்னோன் பிரணவ வடிவா னையிற்
பொருவில்சீர்த் தனது சித்தி புத்தியா நங்கை மார்தங்
காதல மலர வைத்து வாய்மனுப் பகரக் கையாற்
சிரகநீர் மாரி பெய்யத் திருமண மகனங் கேற்றான். (௪௮)

சிவநெறிச் சனகன் வேள்விக் குண்டத்திற் செந்தீப் பெய்து
குவடென வெவ்வே றாச்செய் சமித்தினைக் கொளவ ருச்சித்
தவியினை வார்ப்ப மாந்தி வலஞ்சுழித் தகடு வீங்கித்
தவனதே வொலியி னார்த்துந் தருக்கொடு நிமிர்ந்து நிற்ப. (௪௯)

அரம்பையர் நடன மாட விஞ்சைய ரமுத கீத
நரம்பிசை மீட்டிப் பாட நற்றவ *ரரவென் றார்ப்பப்
புரந்தர னாதி வானோர் புளகமெய் போர்ப்ப மற்றோர்
கரஞ்சிரங் குவித்தா னந்தக் கடலிடைப் படிந்து மன்ன. (௫௦)

அந்தண ராசி செய்ய வமரர்பூ மாரி பெய்யச்
சந்தநான் மறைமு ழங்கச் சாற்றியத் திரட ழங்க
‡வந்தியர் நீட மானார் மங்கலம் பாட வானார்
துந்துபி யதுங்க றங்கத் தொனிசெய்சங் கம்பி றங்க. (௫௧)

சங்கையில் கேள்வி சான்ற சனகமா முனிவ னென்போன்
மங்கலச் சடங்கு வேத வரன்முறை தவறா தாற்ற
நங்கையர் திருக்க ளந்தி வலங்கொண்மங் கலநாண் சாத்திச்
செங்கையைப் பற்றி னானெந் தேவனாங் கணேச வள்ளல். (௫௨

அணுவதா யண்ட மாவா னண்டமா யணுவ தாவா
னிணையிலி யாவுந் தானா யிருப்பவ னுலகம் யாவும்
புணர்வுறு போக மூழ்கிப் பொற்பின்வாழ்ந் துய்யு மாறு
மணவினை முடித்தா னென்ன வழங்குவர் மதிநூல் வல்லோர். [௫௩]

---

*அரவென்றார்ப்ப- ஹராஹரா என்று தோத்திரிப்ப.
‡வந்தியர்- மங்கலப்பாடகர்.

பின்னரங் கிசைச்சூழ் வந்து பீடமீ தினிது வைகிப்
பன்னிய ரோடும் வேள்வி பாங்கினின் முற்றக் கையாற்
பொன்னனார் பாத சாலம் புலம்பிடப் பாத மம்மி
தன்னிலே தூக்கி வைத்துச் சாலியை யெதிரோ காட்டி. (ருச)

தந்தைதாய் செம்பொற் பாதந் தேவியா ரோடுந் தாழ்ந்து
இந்தையி னார்வத் தன்னார் திருமுக மலர்ந்து வாழ்த்தப்
பந்தவே ரறுக்கு மையனைப் பகவனும் பங்கில் வாழுஞ்
சுந்தர மாதர் தாமு மணவறை துன்னி னாரால். (ருரு)

கண்ணுத றிருக்கண் ணோக்காற் கன்னனம்மா வெனந்த ராதி
விண்ணவர்க கணிமபால் றாசு மெல்லிலை முதல நல்க
வெண்ணிறுக் கரிய கற்ப காதிகண் மற்றோர்க் கெல்லாந்
தண்ணடை காய்முன் னன தருபரி சளித்த மாதோ. [ருசா)

சிறுமதி சடையிற் சூடுஞ் சிவபிரான் மதலை மன்றல்
பெறுவிழாக் காண வந்தோர் பெருங்கலை ருதி பெற்ற
முறையொரு வியப்போ யாரு முன்னிய வனைத்து மெய்த
லுறுவரோற் சுமுகர் வீதி யுலாவுறு விபவஞ் சொல்வாம். (ருஎ)

அன்னையர் சித்தி புத்தி யணிமணிச் சிவிகை மீது
மன்னெழிற் சுமுக மூர்த்தி யிராயிர மருப்பிற் றூங்க
பன்னயி ராவ ணத்தும் பவனிவந் தனாவின் றுன்னார்
மன்னறை பொழிமந் தார மலர்கள்சிந் தினரெண் ணில்லார். [ருஅ)

மேலொலி யுருமே றென்ன விறங்கொள்பல் லியங்க ளார்த்த
சாலவிண் ணகடு முற்றுந் தண்மதிக் கவிகை போர்த்த
வாலவட் டங்க டிக்கார்ந் தசைந்தன கொடிவான் றூர்த்த
பாலலை நரலை யென்னப் பாங்கெலாங் கவரி சேர்ந்த. [ருகூ]

வஞ்சிதேய் மருங்கு னல்லார் மங்கல மொழியெ டுத்தார்
விஞ்சைய ரமுத கீதம் வீணையிற் செவிம டுத்தார்
பஞ்சடி யரம்பை மாதர் பாடலா டல்தொ டுத்தார்
ரஞ்சநீர் நந்தி யாதி வேத்திரந் தணிய டுத்தார். [சாய]

பாஞ்சசன் னியத்தோ டூதி யாவரும் பரிவின் மொய்ப்பக்
காஞ்சன மணிப்பூ ணீள்கைக் கடவுண்மா முகத்தெம் பெம்மா
ஞஞ்சில்சூழ் நகரின் வீதி நடுவா மடந்தை மார்நீ
ராஞ்சனங் கொண்டு முந்துற் றுவலிற் சுழற்றி னாரால். (சாக)

வாசமென் மலர்க ணெல்லின் மலர்பொரி யொலிவ யங்குங்
காசவண் கன்னற் றண்டங் கதலிமா வாதி யாய
மாசில்செங் கனிகண் முன்னேன் மூர்ந்துற மடநல் லார்கள்
வீசினர் தாழ்ந்தார் மோக வெள்ளவா ரிதியி னூழ்ந்தார். (௬௨)

ஏவிழி சிலைபு ரூா மெனவெலற் கெணிக்க ணேச
தேவயிற் செல்லீ ரென்னுன் றேசெழிற் படையெ திர்ப்பி
†ஞவுநன் ஞறு மன்ன வுரைத்துக்கால் பிடிப்பா ரொப்பச்
சேவடிச் சிலம்பொ லிப்பச் சென்றனர் மறுகிற் சில்லோர். [௬௩]

தாதவிழ் குழலோர் மாது தந்திமா முகன்பா லுள்ளத்
தூதுபோ யிருப்ப தென்று சொல்லமற் றொருத்தி சீறி
யீதொழி யுய்த்தி வேண்டி னென்னுள முனந்து தாச்சென்
றோதிய தென்று ளற்று லுற்றன விவர்க்குட் பூசல். [௬௪]

செம்மைசேர் சித்தி புத்தி திருமுக நோக்குங் கொங்கை
யும்மையி ..வர்செய் நோன்பா லுவாமுகன் காஞ்சேர் வுற்ற
விம்மியென் முகத்தைப் பார்க்கி னென்பயன் விளையு மென்ற
*னம்மமே நோற்றி லேற்கென் றழுங்கின ளொருத்தி யம்ம. [௬௫]

சீதமென் குழலோர் மாது தேவர்மா னவர்மற் றுள்ளோர்
போதால் வேறு வேறுப் புந்தியிற் காணு ளான்ற
மாதவர் போலக் கண்ட வடிவெலா மதிசேர் வேணி
நாதனுங் கணேச வள்ள னல்லுரு வாகக் கண்டாள். (௬௬)

ஆவன்முற் றுறவே ரம்ப னுகந்தீண் டார்க ரத்து
மேவிடே மெனல்போற் சில்லோர் கைவளை கழுவி வீழ்ந்த
பாவனை யின்பங் கொள்வா ரிடைப்படிற் பயன்யா தென்று
பூவயிற் செல்லல் போலச் சோர்ந்தன பொலந்தூ சம்ம. (௬௭)

சந்திர காந்த மேடை தன்னினின் றைங்கை நாதன்
சுந்தரப் பவனி நோக்குந் தோகைய ரவன்கட் கண்ணுஞ்
சிந்தையுஞ் செலுத்தி வேறு செயலொடு மொழிதல் செய்யா
தூந்துமட் பாவை யோடு முருவம்வே றற்று நின்றார். (௬௮)

பருவமங் கையரு ளாயன் பவனியை நோக்கிச் சென்னி
யிருகரங் கூப்பி னொரு மிலகுமெய் தாணி மீது [௬௯]

† ஓவும்-ஒழியும்.
* அம்மம்-கொங்கை

மருவ லீழ்ந் திறைஞ்சி னோரும் வினைகலை காம ருங்கு
மொருவுத லற்று ரேனோ ரொருவுத லுற்று ரம்ம. (௬௯)

இன்னண மைய னுற்ற $வெழுபரு வத்தி னோர்க்கு
மன்னிய மற்றை யோர்க்கும் வள்ளல்வண் கருணை பூத்து
நன்னர்மிக் கமைந்த வீதி வலம்வந்து நால்வா யூர்தி
தன்னினின் றிழிந்து செம்பொற் றனித்தவி சிருந்தா னாக. [௭௰]

மாதவ ராதி தேவர் மாதவ மோன யோகர்
பூதல ரேனோர் தாமும் பொருந்துநல் விருந்த யின்று
பாதவந் தனைசெய் தேதம் பதிபுகுந் தனரார் வங்கூர்
வேதனு மிறைஞ்சி வேண்டும் வரம்பெற்றான் விமலன் றன்பால். [௭௧]

மூவிரு முகத்து வள்ள லாதியர் முன்னுங் கெய்தும்
யாவருங் கணேச னருண் மவரிரு பாங்கர் வைகுந்
தேவிக டாமுஞ் சூழச் சிவபிரா னுமையி னோடு
மாவளா கைலா யத்து வந்தனன் மறைக ளார்ப்ப. [௭௨]

அம்மலை மீதெம் பெம்மா னருளின்வீற் றிருப்ப வைங்கைச்
செம்மலுந் திரும ணஞ்செய் சித்திபுத் தியாய மாதர்
தம்மொடும் பெருவ ளஞ்சேர் தன்னுல கதனைச் சார்ந்து
கொம்மைவெம் முலையார் போகங் குளித்தினி திருந்தான் மன்னோ. [௭௩]

திருமணப்படலமுற்றுப்பெற்றது.

ஆகப்படலம் அ-க்குத்திருவிருத்தம். (௩௱௪௰௩)

## விண்டுவுபாசனைப்படலம்.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

முன்னவ னைமையா ளும்பன் முகன்சித்தி புத்தி யாமெம்
மன்னைய ரிருவர் தம்மை யருங்கடி மணஞ்செய் தாண்ட
நன்னல மிதுவாம் விண்டு நவில்சடக் காத்தை யோதிப்
பன்னலங் கணேசன் பாங்கர்ப் பெற்றமை பகா லுற்றும். (௧)

---

$ எழுபருவத்தினோர்- எழாட்டைப்பேதையர், பதினோராடடைப் பெதும்பைய ர், பதின்மூவாட்டை மங்கையர், பத்தொன்பதாட்டை மடந்தையர், இருபத்தைந்தாட் டை அரிவையர், முப்பத்திரண்டாட்டைத்தெரிவையர், நாற்பதாட்டைப்பேரிளம் பெண்கள் இவர்களாம்.

புயல்வணை னொருகா லத்துப் பாற்கடற் பொங்கரத்தி யங்கண்
டுயில்பொழு தவனொண் காதிற் றோன்றின ரிருவர் தாங்கு
வயமுடை யவுண வீரர் மதுகயி டவர்க ளென்னும்
பெயரினர் கொடிய ரார்க்கும் பீடைசெய் தனரா லற்றால். (௨)

அரியவர்த் தெறம லைந்தாங் கடலிழந் தோடி நன்கு
புரியர னடிதாழ்ந் ததெல்லாம் புகன்றன னதுகேட் டெம்மான்
விரிகமழ் கொன்றை வேணி விநாயகற் போற்றா வாற்றாற்
பரிபவ மடைந்தா யன்னாற் பாவிநல் லருளெய் தென்னா. (௩)

நவிலுமா றெழுத்தா னாய நன்மனு வுபதே சித்தோ
துவிதமு மருள வையன் றனையடி மீண்டு மாறாழ்ந்
தவனியிற் சித்தி யாவு மளிக்கிடுஞ் சித்தி யென்னுந்
தவவில் *கேத் திரத்தை நண்ணித் தண்மலர்ந் தடநீ ராடா. (௪)

பூசினோர்க் கினிய நல்கும் புனித வெண் ணீறு பூசி
வாசநீர் புரோக்க ணித்து வசுந்தரை சுத்தி செய்தே
யாசிலம் புலித்தோன் மேவி யன்றிசை நேரி ருந்து
பேசு†தா னாதி யைந்து சுத்தியும் பிறங்க வாற்றி. (௫)

வாங்கெழி லொருகோட் டானை வார்ந்தரு மிருகா தானைத்
தேங்கருள் விழிமூன் றானைச் செவ்விய நால்வா யானை
யோங்குகை யைந்தா னானை யுயர்முடி யாறா னானைப்
பூங்கடுக் கையைவேய் வானைப் புரிவொடு வழிபா டாற்றி. (௬)

உரனெனுந் தோட்டி கொண்டங் கோரைந்து பொறிக ளென்னுந்
திரனுறு கயங்க ளெங்குஞ் செலவிடா தடக்கிக் காத்து
வரனருள் சடக்க ரத்தை வருடநா ரோதி வைகப்
பரனெனைத் தடுந்தா ளாங்கைப் பண்ணவன் கருணை பூத்து. [௭]

செங்கண்மான் முன்பு தோன்றித் தெரிசனந் தந்தா னாகப்
பங்கய மலர்த்தாண் மாயன் பணிந்துபல் வரமுங் கைக்கொண்
டைங்கரன் றனக்கோர் கோயி லமைத்தவ னுருவங் கண்டு
துங்கநூ லாக மத்திற் சொல்விதி முறைபூ சித்து. (௮)

---

* கேத்திரம்- க்ஷேத்திரம்.

† தானாதியைந்து சுத்தி- தானசுத்தி, இலிங்கசுத்தி, திரவியசுத்தி, மந்திரசுத்தி, பூதசுத்தி என்பன.

அடர்துய ரகலச் சித்தி தந்ததா லனைய செம்மற்
கிடரொழித் தருளுஞ் சித்தி விநாயக னெனப்பே ரிட்டுக்
கடவுணற் கருணை யாலே மதுகயி டவனைக் காய்ந்து
புட்டிவா னுள்ளோர்க் கெல்லாம் பொருவிலின் பளித்தா னன்றே. (௯)

வேறு

இன்னநெடு மால்பரசு ராமனு மவதார மெடுத்த வேலை
யன்னையினும் பெருங்கருணை யளித்தருளே ரம்பன்மல ரடிக ளேத்தி
மன்னவர்தங் குலமனைத்து மாய்த்தவனி யந்தணர்க்கு வழங்கிப் பின்னும்
$தென்னுலகி னித்தியனா யிருந்துபனற் கரியதவஞ் செய்கின் றானால். [௰]

விண்டுவுபாசனைப்படலமுற்றுப்பெற்றது

ஆகப்படலம் ௬-க்குத்திருவிருத்தம் (௩௱௫௰௩)

# வீமனுபாசனைப்படலம்.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

திருமக ளுறையு மார்பன் றேவதே வாமே ரம்பன்
மருமலர்ப் பாத மேத்தி மதுகயி டவனைக் காய்ந்த
பெருமையின் னதுவாம் வீம னெனப்பெயர் பிறங்கு மன்ன
னொருவனை மருப்பி னானை யுபாசித்த தோது வாமால். (௧)

வாங்குதெண் டிரைக்கை வேலை வாய்ப்படு பவள மன்ன
பாங்கமை செவ்வா யஞ்சத் தொகுதிகண் படுக்குங் கஞ்ச
நீங்கலின் மடுவுந் தேன்றோர் ஞிமிறுக ளிமிர வான்றோய்ந்
தோங்குதண் பொழிலுஞ் சூழும் விதற்பமென் றொருநா டுண்டே. [௨]

அன்னதே யத்து வேள்வி யாற்றுமந் தணர்க ளாதி
மன்னுநாற் குலங்க ளேனை மாபுளார் வளமுஞ் சென்னல்
கன்னல்பூங் கதலி தேமாக் கனுலிய வளமும் பொங்கித்
தன்னைநேர் நகர்க வுண்டின் னியமெனச் சாற்ற வுண்டால். [௩]

§கற்பக மலைப்பா னல்கு கரத்தினன் வீம னென்பான்
கற்பக மலைப்பார் தோளான் கடிகொளந் நகர்வேந் தாய்நால
கற்பக மலைப்பான் வேட்பான் சாருகா சினியெ னும்பேர்க்
கற்பக மலைப்பாங் காவார் காந்தையோ டரசு செய்நாள். [௪]

$ தென்னுலகு-சேரனாடு என்னப்படுகின்ற மலையமா நாடாம்.

§ கற்பகதருவுமலைக்கும்படிகொடுக்குங்கையினன், மலையும் பிளக்கும்படி யுத்தஞ்செய்தலால் நிறைந்ததோளான், அகங்காரத்தைக்கெடுக்கும் பொருட்டு நான்கற்றலை விரும்புவான், கற்புடைமையென்னும் மனச்செல்வத்தைப்பக்கஞ்சுற்ற நிறைத்தமனைவி யோடரசு செய்நாள்.

தருமநற் றான மாதி சாலநன் கிழைத்து மெச்ச
மருவலில் வறுமை யானீள் வனஞ்சென்று $கோசி கப்பே
ரிருடியை யடைந்தில் லோடு மிறைஞ்சித்தன் குறையி யப்பப்
பெருமுனி வானுங் கேட்டுப் புத்திரப் பேறுண் டென்று. (ரு)

பின்னரு நவில்வான் வேந்தே பெரிதுநின் முன்னோ றொல்லாந்
தன்னிக ரில்லா முக்கட் டந்திமா முகப்பி ரானை
நன்னரின் வழிபா டாற்றி நன்குற்றார் நீகை விட்டா
யன்னதான் மகவி லாது யிளையம் துனைப்பக் கேட்டி. [சு]

சீர்மலி கருநா டப்போர்த் தேயத்துப் பானு வென்னு
மோர்மலி நகரா ளவேந்தன் வல்லவ னைம்பா னின்றன்
பார்மலி யேழாம் போன் பகர்மனை கமலை யென்னுங்
கூர்மலி வேற்க ணாளோர் குழவியைப் பயந்தா ளன்றே. (எ)

மறுவிலாள் பயந்த சேய்கான் மலர்விழி செவிவாக் கின்றிக்
கறைசொரிந் தசும்பார் புண்கள் கலந்தரு வருக்கு மெய்யுங்
குறளதா யிருத்த லாற்கை கொடுபெற்று ணஞ்சுண் டாள்போற்
றறைமிசை புரண்டு ருண்டா டணிவிறுன் பிணிமரு ருண்டாள். [அ]

அதுதெரிந் தீன்றோ னங்க ணடைந்தகங் குலைந்து தேறி
விதியினை வேறல் செய்வார் வியன்றலத் தெவருண் டிந்தத்
திதிவிதி யுண்டேன் மாறுந் தெளிமதி யின்னே யென்னச்
சுதனைநீ ராட்டி னளத் தோகையுந் தெளிந்தோ ராறே. [கூ]

சாதக மாதி கன்மந் தாதைபின் னியற்ற மைந்தற்
கோதினன் றக்க னென்று வொருபெயர் நயப்பா ட்டைய்ந
மாதரார் தருமந் தான மருந்துமந் திரமற் றியாவுந்
தீதறப் பன்னீ ராண்டு செய்தொரு பயனுங் காணான். (ய)

மனையவ டனைச்சே யோடு மனையைவிட் டகலச் செய்தா
னினையவம் மாது மீச னிணையடி தஞ்ச மென்றுத்
தனையனோ டகன்றாள் வெங்கான் றன்னிலங் குறையுஞ் சோரர்
புனைகலன் பிறவுங் கிட்டிப் பொள்ளெனக் கவர்ந்த கன்றார். (யக)

பணிமுழு திழந்தா ணீங்காப் பசியொடு தாக மென்னும்
பிணிநனி வருத்தி வாட்டப் பெறுமகற் கொண்டோர் சீறா

---

$ கோசிகப்பேரிருடி- விசுவாமித்திர முனிவர்.

ரணுகியங் கொருசார் பிள்ளை யம்புலி யறுகு கொன்றை
மணியுமிழ் பணிமி லைச்சு மகேசனார் கோயில் சார்ந்தாள். [௰௨]

சிறுவனை யாங்கு வைத்துச் சிலபக லன்ன சிறார்
குறுகியுண் பலிகை யேற்றுக் கொடுவந்தூட் டிடுவா ளோர்நாட்
பெறுமக னொடுப லிக்குப் பெயர்தரு மாற்றி னேன்பின்
மறுவின்முக் கலனார் மேனி மருத்துவி சனுமைந் தற்கு. [௰௩]

விண்டவாய் கேட்ட காது விழித்தகண் ணடந்த கால்கள்
சண்டனை யுதைத்த சண்டன் றளிணைக் கன்பு பூண்ட
தொண்டர்மான் மியமென் சொல்கேன் சுருப்புநாண் மதனோ வேளோ
கொண்டன்மே னியனோ வென்னக் குழகனாய் நின்றா னங்கே. [௰௪]

இருகணுங் குளிர நோக்கி யெடுத்தணைத் துச்சி மோந்தா
டிருநிகர் கமலை யன்ன *சினகரம் பூசிப் போனல்
லருளினன் னவர்க்கு நால்வா யைங்கரன் மனுவு ணன்கு
தருமெழுத் தெட்டா னுய தருமனு வுபதே சித்தான். [௰௫]

விதிமுறை கணித்தா ரன்னார் விநாயகப் பெருமான் முன்னர்
மதிமுக மாது தன்முன் வந்திவட் கருளிச் செய்முன்
றுதையுமோர் தாண்மே லோர்தா டேக்கிவைத் திடுகோ லத்தோ
டெதிர்தல்கண் டிறைஞ்சத் தக்க னேற்றெந்தை மகிழ்ந்து சாற்றும். [௰௬]

முக்கல முனிகாற் றுன்மெய் மோதிடக் $குரூபந் தீர்ந்தாய்
மிக்கவற் சாரிற் போக மேவுநிற் கெனம றைந்தான்
றக்கனித் தவன்பாற் சென்று தாழ்ந்தெலாம் புகலக் கேட்டுப்
பொக்கமில் கணேசற் கண்ட புனிதவீட் டின்புற் றுயால். [௰௭]

எனவவன் முதுகு தைவந் தீறிலான் மனுவி னுள்ளே
நனியருள் பொழியு மேகாக் கரமனு நவின்று தக்க
வினியிமை யவர்கோ மான்போ லிருந்தர சாள்வை யென்றப்
புனிதமா தலன வின்று னென்றுகோ சிகன்பு கன்றான். [௰௮]

இக்கதை கேட்டு வந்த விலங்கயில் வீமன் றாழா
முக்கல னுடற்கா றேய முதலவன் றோன்ற வன்ன
தக்கன்முற் றவப்பே றென்னே சாற்றுக தவத்தோ யென்ன
மிக்கருள் விளைக்குங் காதி மகனவை விளம்ப லுற்றான். [௰௯]

* சினகரம்-கோயில்.

$ குரூபம்-அருவருக்கத்தக்க வடிவம்.

எழுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்

செல்வமோ ரெட்டு மோங்கவெண் டிருவாழ் சிந்துதே யத்துமா ணமைந்த
பல்லிய நகர மொன்றுள ததனிற் பகர்வினும் பயன்பெறப் பயிலு
மல்லல்வா ணிகஞ்செய் குலத்தினிற் பிறந்த மாதனன் பெயர்கலி யாண
னில்லவ ளிந்து மதியவள் வயிற்றோ ரிளவல்வல் லாளனென் றுதித்து. ()

மகாரொடு விளையாட் டயர்பரு வத்தோர் வைகலோர் காவகத் தெய்திப்
பகாதுறு மும்மை நல்வினை வசத்தோர் பைஞ்சிலை தனையெடுத் தும்பன்
முகாவெனைக் காவென் றினிநபி டேகந் தெழின்மலர் மோகமாச் சாத்தி
யுகாவுளத் திறைஞ்சி மீண்டபின் னுளு முன்புபோ லுவந்தியற் றினனால்.

இன்னணஞ் சிலநா ளியற்றுபு வருவா னிளைஞர்தங் குழுவொடு மொருநா
ளன்னகான் புகுந்நெம் மிறையவன் பூசை யாற்றினன் மீண்டில னிரவு
மன்னிபு மற்றோர் குரவரீ தறிந்நவ் வணிகனுக் குரைத்துநின் மகற்குத்
துன்னிடர் புரிதி யிலையெனி லையற் கியம்பிநிற் றுரத்துது மென்றார். ()

அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

கலியாண னதுகேட்டுப் பொறிகலங்கி வனம்புகுந்து காத லன்செய்
நலியாத பூசனையை நாட்டமுற்று நாட்டமில்லா நமனைப் போன்றம்
மலிவாச மலர்ப்பந்த ரழித்தமல மாமுகனை மண்மீ தெற்றி [தி (உ௬)
மெலியாதோர் தடிகொடு$நெயந் தோர்வடியத்தன்மகன்றன் மெய்யின்மோ

சிந்தைநனி யல்லலுற வவற்பிடித்தோர் மரந்தியாத்துத் திரும்பும் வேலை
மைந்தனெனைக் கட்டவிழ்த்து விடுதியென மிகவிரப்ப வன்கட் சிலத்
தந்தைமத கரிமுகத்தோன் பணிபுரிந்தா யவனேநின் றளாவு நீக்கிப்
பந்தனைசெய் கட்டவிழ்த்து நல்லுணவுந் தெளிபுனலும் பகிர்ந்து காக்கும்.

எனமொழிந்து பின்னுமவ னில்லமெய்தா தொழியினுயி ருயந்தா யெய்தின்
மனவுறுதி யாகநினை யுயிர்மாண்டா யெனவுமுரை வழங்கிப் போந்தா
னனையவிழுங் கொன்றையணி நாயகனே நினைமுழுது நம்பு நாயேன் [றல்.
றுனியுறின்விக் கினந்துரக்கு நாதனெனச் சொலறகுமோ வென்று தோன்

எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

ஈதுரைப்பா னெவனொருவ னெந்தைக் கா†மந் திரத்தையழித் தன னோவவ் விறைமூர்த் தத்தை, கோதலுற வெறிந்தனனோ வவற்கு நிந்தை நுவன்றனனோ வெஞ்சினத்தி னெனது நொய்ய, பூதியமெய்த் தோரொழு கத் தடியி னுலே புடைத்தனனோ யாத்தன்னோ வவனே பொல்லாப், பா தகனுமவனேயன்றி யுல்கின் வேறு படுபாவி யுள்ளாகப் பகரொ ணுதால் .()

---

$ நெய்த்தோர்- இரத்தம்.

† மந்திரம்- கோயில்.

ஆகையினு லிவையியற்றுங் கொடிய பாவி யாகமது குறளாகி யதிற் சே ந் நீர்சீ, வேகமொடு பெருகிட மெய்ம் முழுதும் புண்ணுய் விழிகுருடாய்ச் செவி†வெதிராய் விள்வாய்பேசா, மூகையதா யுறுகவழி யடியார்க் கெல்லா முன்னுமுனல் லருள்பொழியு முதலை நாயே, ஞேகைமொடு பணிபுரிமெ ய்யடிமை யேவீ துண்ணுமெயனச் சபித்திறையை யுளத்துட் கொண்டான்.

அழிபடுமெய்ந் நாரதனு லசைக்கப் பட்டா லழியாத வுளத்தினுக்கே னவல மந்தோ, வழிபடுமெய்ந் நாரதனுன் மம்மர்நோயை மாற்றியவர் மனத் திருந்து கருணை மாரி, பொழிபமொ முகவாவென் றூர்வ மூரிப் புரியைம னத் திசைத்துயினைப் போக்கு மன்று, பழிபடுநீ மையினகன்ற சிறுவன் மாயைப் பாசத்து மகன்றுண்மைப் பரிவு பூண்டான். (உஅ)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

வல்லையெம் பெருமா னங்கோர் மறையவ னுருவங் கொண்டு
செல்லலார் பிணிப்பிற் றளருஞ் சிறுவன்முன் றோன்ற யாத்த
வல்லலும் பிறவி த்துன்பு மறுபடக் களித்து மைந்த
னல்லநங் கணைச னின்று னெனநயந் தேந்த வெந்தை. [உகூ]

மைந்தநீ கவியா ணற்கு வகுத்திடு சாப முற்று
முந்துறு நினது வேட்கை மொழிகவிம் மலைநீ யென்னச்
சிந்தையி லன்பு மீக்கூர் சிறுவனு நின்றூட் கன்பு
தந்தெனக் கிவணீ யென்றுந் தங்கநல் லருள்செய் யென்றான். [௩0]

எண்சீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

அருமையிற்பூசனைபுரிவல் லாள னிவ்வா றறையமறை யோனருள்கூ ர்ந் தன்ப னேநீ, கருதியவா றெம்பானீங் காவன் புல்பாற் கதுவிடுநின் பேர்நம்பேர் முதலில் வைத்துப், பெருகவழைத் திடநாமிங் கமர்வேம் பி ன்னர்ப் பிறங்குசின காமியற்றி யெவரும் பூசை, புரிதரவல் லாளகண பதி யென் னுமம் பொருந்துமெமக் கெனமூர்த்தம் பொலிந்தாங் குற்றான். (௩க)

எழுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

அந்தண னுருவாப் போந்தவன் மூர்த்தி யாயபின் னவர்க்குவல் லாளன்
சிந்தையன் பொழுகப் பணிபுரிந் தனனச் சிறுனிடு சாபமா னவைதான்
றந்தைமெய் யடைந்திற் புகவின நிகழ்வு சாந்தவ ரானுணர்ந் தின்றுள்
வந்துட னழைத்தான் மறுந்தலுங் குரவர் வாயுளா மறுத்திட லழகோ. (

† வெதிர்- செவிடு.

அருஞ்சுத வெனவுன் கொழுநனுற் றிடுதீங் கிம்மையாத் திரங்கொலம் மையினும், வருந்துடர்ந் தவனை யப்பொழு தவனுன் மகனென வுதித்திரண் டாறுப், பொருந்துறு வயதி லவனுட னினையும் போக்குவ னம்மைநின் கணவன், பெருந்துய ருற்று முக்கல முனியாற் றணிவிர்செல் கெனப்பெயர்ந் தனளால். (௩௩)

தாயகன் றிடவல் லாளனுஞ் சிறுவன் றந்திமா முகத்திறை யவனை, நேயமுட் பெருகப் பூசனை பண்ணு ணியதியிற் புரிந்திறை நோக்கா, லாயிடைக் கணங்க ளொளிர்விமா னத்தோ டடுத்தழைத் திடவதி னேறி, நாயனு ருலகிற் புகுந்தவ னம்பொ னகைமலர்த் தாள்கலந் தனனால். [௩௪]

நந்தனன் சபித்தாங் கியம்பிய வணமே நாய்கன்வா ணுண்முழு வதுமோர், புந்திநை திறந்து வருபிறப் பதனிற் புனையிழை மனையனை யாக, வந்தவள் வயிற்றோர் மகவென வுதித்து மாண்புறு தக்கனென் றுஞன், முந்தைநல் வினையி னுனை சாய்ச்செங் கே னடாத் தியமுறை மொழிவாம். []

முக்கல னெனுமா முனிவரன் மொழிந்த முதன்மையா மனுவினை யேற்றத், தக்கவற் பணிந்து வியன்கவுண் டின்னி யெனுமொரு தனிநகர்ப் பாங்கர், விக்கினங் கெடுத்தாள் பவன்சின கரத்து மேவியீ ராறெனும் வருடம், பொக்கறக் கணித்தா னிருந்தன னுகப் புகர்முகத் திறைவனின் னருளால்.

மருவளர் பொழில்சூழ் விநற்பதே யத்து மன்னவன் சந்திர சேன, னுரிமைசெய் மகவின் றுயுயி ரிழந்தா னுவன்மனை சுலபையென் பவடான், றுரிசெனுங் கடலிற் படிந்துபின் றேறித் தோன்றறன் கருமகன் கியற்றித், திருமலி யரசு செயற்கெவற் கொணர்து மென்றுதெள் ளியரொடு தேர்வாள். [௩௭]

அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

அன்னபொழு தருந்தவத்து முக்கலனு முனிவனணைந் தணிகூர்ங் கோட்டுக், கன்னமதப் பொருகளிற்றை யலங்கரித்து மணிமாலை கரத்தீந் தின்ன, பொன்னகரும் வெளிப்புறமும் போதவிடுத் ததுசுவலிற் கொடுபோந் தானை, மன்னுலகா ளரசனெனக் கொள்கவிது வேதுணிபு மதியின் மிக்கோய். []

எனமொழியச் சுலபைமன மகிழ்வொடுசே வகத்தினி‡லத் தேழுங் கந்தோய், வனமலிந்த †ககனமெனு மதகரியை யலங்கரித்து மணிசெய் மாலை, தனையதன்கை யளித்தின்ன நகராயினி தாளவொரு தகுதி யான, வினையிவண் கொணர்தியென வினியவுரை தொடுத்துவிடுத் திட்டா ளன்றே. []

§ நிலத்தேழுங்கந்தோய்தல்- நாலுகால், வால், துதிக்கை, கோசம், என்னும் இவ் வேழுங்களு நிலத்தில், தோய்ந்திடல்.

† ககனம்- பட்டத்து யானையின் பேர்.

திணியார்கற் புடைமாதர் விதியால்வேட் டிடுபதிதோ டீனப்ப தல்லா, தணியார்மற் றொருகானை யென்செயினுங் கொள்ளாரவ் வாறே வாய்மை, த ணியாமும் மதகரிகா கரிகமைவிட் டேழ்வழிக்கான் சார்ந்து தன்கை, மணியா ரங் தக்கனுக்கே சேர்த்த டார்த் தனர்நறும்பூ மழைவா னோரே. (சம)

எழுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்

அக்கண மதிநூ லமைச்சு மற்றெவரு மடிபணிந் தனர்மணி யானத், திக்கெனு மொழிநற் றுய்தனை யிருவி யெங்களே ரம்பனைப் பாவித், தக்க னம் புரசைக் களிறுகைத் தளவி றனைசூழ் தரமினர் நடிப்பச், சொக்கெறி தகைசா னகர்வலம் போந்து தலநகரி யணையிருந் தாண்டான். [சக]

பொங்குள மகிழ்விற் றக்கனு நிருபன் புவிபுரந் திடுபொழு தொருநா, ளோங்காப் பெருமான் வீரசே னப்பே ராசன்றன் கனவில்வந் திறைவ, மங் கையிற் சிறந்த நின்மக ளோன்பாற் றக்கனை மணந்திடப் பெறுவ, ளங்க ளி மனத்தோ டீகுதி யெனலு மவ்வணந் சுதையைநல் கினனால். [சஉ]

என்னையா ளுடைய கணேசனின் னருளா லிசைமிகு தக்கமன் னவற் கு, நன்னர்செய் பிரகற் பானுவென் றுதித்தா னற்றவத் தாலவ னிளவல், பன்னருங் கட்க தானவற் குதித்த பாலகன் சுபாலனு மவன்சேய், துன்ன லர்ச் செறுத்தா ளதாகா னவற்குத் தோன்றினான் வபுத்திரத் தன்னே ()

அத்தகு வபுத்தி ரத்தனு மிறைவற் கணிமிகச் சிறந்தநந் தனனுஞ், சித்திர சேனன் பிறந்தன னவற்குத் திறமலி வீமநீ யுதித்தாய். பத்தியிற் சிறந்த நினதுமுன் னனை பார்த்திவ ரறுவரும் பரிவி, னித்தநின் மலனுங் கணபதி பூசை நியதியி னடவிநன் கடைந்தார். [சச]

ஆதலிற் பணிவோர்க் கருள்புரி தடக்கை யைந்துடை யண்ணறன் பூ சை, கோதறப் புரிதி முற்றுறு நினது கருத்தெனக் கூறியம் முனிவன், வேதமீ ரிரண்டு மளப்பரி தான விமலனே காக்கா மனுவை, யோதின னரசன் செவிக்கலி தெண்ணு முறைமையு முணர்த்தியே யிப்பால். [சரு]

கோசிக முனிவன் விடைகொடு வீமக் குரிசிறன் னகரடைந் தகன்ற, காசினி வியப்பத் தக்கனுன் முன்னர்க் கண்டிடு கோயில்சென் றோர்சோட், டீசனை நினைந்தே காக்கா மனுவை யெண்ணியத் தேவனின் னருளான், மா சில்பொன் வடிவத் தொருமகப் பயந்தான் மன்னவ ரனைவரும் வழுத்த. ()

உருக்குபொன் னிறத்த வடிவொடு முதித்த வுயர்தவப் புதல்வனை வீம, னுருக்குமாங் கதனென் றழைத்தனன் மகனு மொளிவளர் பிறையென

வளர்ந்தான், றிருக்கிலம் மகற்கோர் சிறந்தவோ ரையினிற் றிருவளர் தன் றிரு முடியை, மருக்கமழ் மாலை மணியொடு சூட்டி வழங்கினன் புவியர சாட்சி. [சஎ]

தன்னர சுரிமை நந்தனற் களித்த தராபதி பரகதி விழைவின், முன்ன வன் மலர்த்தா ளினைந்தவன் மனுவை முறைப்படி செபித்தினி திருந்தான், பொன்னிற வுருக்கு மாங்கதன் றனது பிதாவினும் புழைக்கைமா முகவ, னன்னையை யனையான் பதத்தன்பு செலுத்தி யகலிட மகிழ்வுறப் புரந்தான்.

வீமனுபாசனைப்படல முற்றுப்பெற்றது.

ஆகப்படலம் (ம) க்குத்திருவிருத்தம். [சாஎக].

---

# உருக்குமாங்கதனுபாசனைப்படலம்,

எழுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

விண்ணவர் மதிக்கும் விற்றழும் புழைகை வீமமன் விநாயகர் பூசை, ப ண்ணிநன் மகப்பே றடைந்ததின் னதுவாம் பகருமக் கொற்றவன் மைந்தன் புண்ணிய வொழுக்க நெறியின னுருக்கு மாங்கதன் புகர்முகத் திறைபா, லுண்ணிறை பேரன் புடையவன் கதிபெற் றுய்ந்தவா றினியெடுத் துரை ப்பாம். [க]

இன்னண முருக்கு மாங்கத விறைவ னிறைமைநன் கியற்றுநா ளொரு நாட், பன்னுபன் மிருக மாரணி யத்துப் பயிரழிக் கின்றவா றறிந்து, துன் னுதா னையினே டங்கடுத் தெதிர்த்த $சூகர மாதிபல் விலங்கின், மன்னுயிர் செகுப்பான் கவிமுனி வனத்து வந்தன னீர்விடாய் தணிப்பான். (உ)

அனையமா முனிநீ ராடமுன் னேக வவன்மனை முகுந்தைமற் றுங்கே, தனிமையா யிருந்தாள் பா§வமு திரந்தான் றன்னெழி லேக்கிமிக் காவன், மனநினை நிகர்க்கும் வனப்புடை யவரிம் மண்ணினும் விண்ணினுங்காணே, னெனைவருத் தனங்கன் கணையிற விறைவ வெனைக்கலந் தின்பளித் திடுதி.

என்றுகை வளைக ணழுவநுண் ணிடைசே ரெழில்கலை சரியமெய் ப சப்ப, நின்றன ளவள்பால் விரகநோய் வளரு நிலைமைகண் டிறைவன்மா *னி னியே, மன்றவன் பனையோ ரிறைப்பொழு தேனு மருவியின் புறுதனல் ல றமா, மன்றிபு மரைய னுயர்குல மகளை யணைந்திடன் முறையல வின்னும்.

---

$ சூகரமாதிபல்விலங்கு- பன்றிமுதலிய பற்பல மிருகங்கள்.

§ அமுது- நீர்.

* மானினி- பெண்.

கரிமுகக் கடவுண் மலரடிப் பூசை கருதியா னெரிமுனர் வேட்ட, வரி
வையை யலதோ ரரிவையை விரும்பே னென்னவா டவனை நல்லாரோ, புரி
தன்முன் னுகங்க ளிரண்டினும் விதியாப் போதனே தவினினை வலிந்தேன்,
பரிவினெற் புணர்தி மறுக்கின்வெஞ் சாபம் பகர்வலென் றவற்றமு வி
னளால். [௫]

கற்பழி மடவார் கருதவா வினுக்குக் கரையில வேயெனும் பெரியோர்,
சொற்பிற ழாமை யறிந்தன னெனமன் றோகையை வீழ்த்தவன் னவளும்,
பொற்புயர் வேந்தே குட்டநோ யுனக்குப் பொருந்துக வெனவது பொருந்
த, வெற்புறழ் புயத்தான் வெட்கிநீண் டைங்கை விமலனை நினைந்திது வி
ளம்பும். [௬]

அடியனின் பணிசற் றுயினும் பிழைத்தே னலனறி யாதியற் றிடினு
ங், கடியவி ழிதழி முடிமிசை மிலையுங கணேசனே பிறன்மனை விழை
தல், கொடிதென மறைக ணெடிதுரைத் திடலுட் கொண்டனை வீவிது
தோள் பற்றும், பிடியன மாது முயக்கநீக் குதலாற் பெரும்பிணி யடைந
லோ பேறே. (௭)

என்றொரு §வடத்தி னருகுற்றான் வேட்டைக் குடன்வந்தா ரிறைவ
னைக் காணு, தொன்றனு ரொடுதம் பதிபுக மன்ன னுறுபிணி காணுக றரு
ம, மன்றென வென்றா ழெண்ணினன் போன்மே லளக்காழ்ந் திடவிருட்
டொகுதி, துன்றிய வைங்கைக் கடவுள்செம் பாதத் துணைமலர்க் கன்பிலா
ருளம்போல். (௮)

சாலவெம் பசியுந் தாகமும் வருத்தத் தளர்ந்திராப் பொழுதொழித் தர
சன், காலையி னித்தக் கடன்முழு தாற்றிக் கவிந்தவா னிழலிருந் தனனவ்,
வேலையின் வேலை முளைத்தெழு கதிர்போல் விசும்பிடை நாரதன் றோன்ற,
வோலமா தவவெம் பிணிதவிர் மருந்தே யோலநிற் கோலமென் றிரந்தான்.

மண்டல மதிக்கு மன்னவற் கருள்வான் மாசிலா முனிவர னடுத்துப்,
புண்டவழ் பெருநோய் வரவறிந் தொன்னார்ப் பொருபுயத் திறைவநின் னாட்
டிற், கொண்டல்கண் படுக்கு மதுமலர்ச் சோலை குலவுமோர் கதம்பமா நக
ரிற், கண்டன னின்றோ ரதிசய மதனைக் கழறுதுங் கருத்துறக் கேட்டி. (௰)

அன்னதொன் னகரத் தொருதனி வயிற்சிந் தாமணி விநாயக நாமம்
பன்னுமோர் மூர்த்தி யுளரவர் திருமுன் கணேசகுண் டப்பெயர் பகருந்,
தன்னிகர் தருமோர் தீர்த்தமுண் டதன்பாற் சான்றொரு குந்திமன் விருத்த,

§ வடம்- ஆலமரம்.

னின்னல்செய் ‡தொழுநோய்ப் புரத்தினன் றீர்த்த யாதநிைக் கேகுவான் போந்து (கக)

படிந்தெழில் விகடர் திருவுருவடைந்தப் பண்ணவ னுலகடைந் தன னத், தடம்படிந் தோரம் பனிவழி படினின் றனக்குறு பிணியொடு வினை யுங், கடந்திடு மிதனை யலதொரு மருந்து காண்கிலே னெனவுரைத் தாங்கே, நெடுங்கைமா முகனை வழிபட முதலி னிறுவினேன் பெறுவா னிகழ்த்தும்.

அறுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்.

ஐந்தெனும் புலனை வென்றோ ராற்றலை யளக்க வேண்டி
யிந்திரன் றானே சாலுங் கரியென விம்ப ரும்பர்
முந்தைநாண் முதல வாக மொழிகுவ ரன்றோ வன்ன
விந்திர னகலி கைப்பா லிழிசெயல் புரிந்த வெல்லை. [௰௩]

அன்னவ கொழுந னான கவுதம னறைசா பத்தாற்
பொன்னகர்க் கிறைமெய்ம் முற்றும் பொருந்தலுற் றனபல் யோனி
பன்னொரு யோனி யெல்லாப் படையும் விளைதத லுண்மை
மின்னிடை யாரோ ரல்குல் வெளிப்படா துடையாற் போர்த்தும். [௰௪]

ஆடவர் தமைநேர் காணி னஞ்சுவ ரொளிப்ப ரென்றுற்
பீடுயர் விண்ணோர் வேந்தன் பிறங்குடன் முழுதும் யோனிக்
காடதா வுரினென் செய்வான் கலங்கிப்பொன் மலையின் பாங்கோர்
தாடுதை கமல வாவி சார்ந்தொளித் திருந்தா னிப்பால். [௰௫]

அனைத்தையு மமரர் கேட்டங் கறைகுவர் தத்த முள்ளே
தினைத்துணை யேனுந் தேரா தொருமகன் பிறனில் சேரி
னெனைத்துணை வலியுள் ளோனு யிருப்பினும் பயனென் னுகு
நினைத்தலுக் கரிய துன்ப நெடிதுவந் துறுமே யென்னு. [௰௬]

ஆன்றவ ரறையும் வாய்மைக் கமரர்கோ னடையுந் துன்பே
சான்றெனக் குழுமித் தங்க டனிப்பெருங் குரவற் சார்ந்து
வான்றனை நீத்து நோற்கு மாதவக் கவுத மன்பா
லேன்றுமன் னவன்றன் புன்மை யிசைத்தன ரிரக்கத் தோன்ற. (கஎ)

விண்ணவர் தாழ்மை யோடும் விளம்பல்கேட் டுரவோன் செப்பும்
புண்ணிய விரோதன் றூர்த்தன் பொய்யன்வெஞ் சினத்த னெற்றிக்
கண்ணனைக் காட்டா சானை யிகழ்பவன் கள்வன் மீது
னுன்னுவோன் கொலைஞன் காமி யுலோபன்கள் ளருந்து வோனே. (கஅ)

‡ தொழுநோய்ப்புரத்தினன்- குட்டவியாதிபற்றிய சரீரத்தான்.

இன்னபா தகக்கு மூங்கட் கிரங்கறீ தென்ன வேதம்
பன்னவிற் புருகூ தற்கியாம் பரிவுற லொல்லா தேனுந்
துன்னுமோர் பதகற் கான்றோர் தொகையிரங் திடினென் செய்த
வுன்னனன் றெனலா லன்னாற் குதவுவன் புலவீ ரென்று. (௧௯)

தேவர்தங் குரவற் கூவி யவனிருஞ் செவிப்பு லத்தே
தாவிலா றெழுத்தை யோதிச் செபிமுறை சாற்றி வானோர்
காவலற் குபதே சிப்பின் யோனிக ளனைத்துங் கண்ணு
மேவுமுன் னையினு மெல்லா மேன்மையும் விளங்க வாழ்வன். (௨௰)

என்றிமை யவரைப் போக்கி யிருந்தவ னிருந்தான் விண்ணோர்
பொன்றிகழ் மலைப்பாங் கோங்கு ‡புட்கர வாவி நண்ணிக்
குன்றிற கரிந்தான் றன்னைக் கூவலுங் குளத்தை நீத்து
நன்றருள் குரவன் முன்னு கண்டல னண்ணி னுல். (௨௧)

நண்ணினு னுடலி யாவு நணுகுபெண் குறிகள் காணூஉ
விண்ணினு ரருவ ருத்தார் வேள்விமன் செவியி லாசா
னண்ணலார் மனுவை யோத வல்குலத் தனையு நோக்குங்
கண்ணவா யினகண் டியாருங் களித்தன ரமரர் கோமான். (௨௨)

தேவர்பல் லோரைப் போக்கிச் சிலர்தனைச் சூழ்ந்து போதப்
பூவலர் பொதும்பர் சூழ்பொற் பொகுட்டுறை வாவி நீங்கிக்
காவளம் பெருகி யோங்குங் கதம்பமா வனத்துட் புக்கு
மாவெழில் வாய்ந்த பொய்கை வண்கரை மருங்கு நண்ணி. [௨௩]

பளிக்கினே ரால யத்தைப் பதனுற நிருமித் தார்ந்த
வொளிக்கொளி யாகின் றானை யொருவனை யிருதா ளானைக்
களிக்கய மதமுன் றானைக் கணிப்பினு லறியொ ணுனை
யளிக்கரு ணைங்கை யானை யவண்பிர திட்டை செய்து. [௨௪]

வாசமஞ் சனமுன் னை வான்பொருள் பலவுங் கொண்டு
பூசனை யாற்றி வஞ்சப் புலத்துளம் புகாத டக்கி
யாசறு சடக்க ரத்தை யாண்டொரா யிசஞ்செ பித்தா
னூசலி னுழல்ப வத்தை யொழித்தருள் சுமுகர் தோன்ற. [௨௫]

கண்டட னமரர் கோமான் கடிதெழுந் தச்ச மன்பு
மண்டிட வணங்கி வாய்மெய் மனமொன்ற னூற்றுப் பத்தெண்

‡ புட்கரவாவி-தாமரைத்தடாகம்.

தொண்டகண் களுநீர் வாரக் *குடந்தமிட் டசைந்து பாடத்
தொண்டறு ருழுவலன்பிற் றுவக்குறும் பிராணி ரங்கி. (உசு)

பொன்னகர்க் கிறைவ வேட்ட புகலுதி யெனலும் விண்ணுண்
மன்னவ றுயிர்க்கெ லாமுன் மலரடி சரண மென்னப்
புன்னுமா மறைக ளென்ன பதம்பணிந் தேத்தி னேனுச்
கின்னினிக் குறையொன் றில்லை யெனினுமெந் தேவ தேவே. (உஎ)

இணையடிக் குழுவ லன்பென் றென்றும்பா லித்தல் வேண்டு
மூணார் காற் கரிதா யிங்க ணெனிருன தூருவைச் சிந்தா
மணிவிநா யகனென் றியாண்டும் யாவரும்வழுத்தல் வேண்டுங்
குணனருள் பதவி நான்கு மவர்க்குநீ கொடுத்தல் வேண்டும். (உஅ)

இன்னதே யெளியேன் வேண்டத் தக்கதென் றிரந்து நிற்ப
வன்னவா றருளி னுமென் றவ்வுருக் கரந்தா னெம்மான்
மின்னுபூந் தடம்ப டிந்து மீட்டுநம் பிரானுர்ப் போற்றி
மன்னுவா னுலக நண்ணி வாழ்ந்தன னமரர் கோமான். [உகூ]

விரைசெய்தார் மார்ப வன்ன விமலனை வழிபா டாற்றிப்
புரைசெய்நோய் போக்கிப் பின்னும் பொருவறு வரமுங் கொள்கென்
றுரைசெய்மா தவன கன்று னூங்குற்ற தமர்க ளோடுங்
கரைசெயா மகிழ்வின் மன்னன் கதம்பமா நகாஞ் சென்றான். (௩0)

ஆங்கமர்ந் தருள்செய் சிந்தா மணிவிநா யகனை யேந்தித்
தீங்கறு தீர்த்தந் தோயத் தெறுதொழு நோய்போய் முன்போ
லோங்குதே சினனு னன்பின் னும்பன்மா முகப்பி ரானைப்
பாங்கொடு பூசை யாற்றிப் பல்பொருண் மறையோர்க் கீய்ந்தான். [௩க]

மன்னவ னின்ன வண்ண மகிழ்வுட னிருக்கு மேல்வை
மின்னெறி விமானத் தோடங் கருங்கண நாதர் மேவி
முன்னவ னுவப்பப் பூசை முடித்தனை யதனுன் மன்னு
வின்னபொன் மானத் தேறென் றியம்பமன் பணிந்தி யம்பும். (௩உ]

எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

ஆதிநடு வந்தமிலான் மறைக ளாலு மளந்தறிய வொண்ணுதா னகி லாண்டத்துச், சோதியுரு வாய்நிறைவா னனுக்க டம்பிற் றூயவனு வாயு றைவான் றுன்பின் பில்லா, னேதுமிலான் யாவுமுளான் காட்சிக் கெய்து மொழிவுருவு மருவமுமா னிரண்டு நீத்த, போதனிறை யானந்த னுலக மெய்தப் புன்மையே னென்னதவம் புரிதலுற்றேன். (௩௩)

* குடந்தமிடல்- நாலுவிரன்முடக்கிப்பெருவிரனிறுத்தி நெஞ்சினிடைவைத்து நின்றுடுமோர் கூத்து.

உம்மையினு னுஞற்றுபெருந் தவத்தி னுனு மோதருமித் தடமபடிந் தவுறுதி யானு, மிம்மைநும்மைக் கண்டுதொழ வெளிது பெற்றே னெனைப்பெறுதற் கெத்தனையோ கோடி காலஞ், செம்மையறம் புரிந்துபெற்று வளர்த்த தாதை செழுமுலைப்பான் மடிமிசைவைத் தருத்து மன்னை, தம்மையொளித் தொளிருமணி விமானந் தன்னிற் சார்ந்திடுத றகவாமோ தமியே னென்றான். (௬௪)

நலன்புரியுங் கணநாதரிவ்வா றோது நரபதியை நோக்கியன்பி னவிலலுற்று, நலப்பொருவு தீணிதோளா யுனையின் றோணை யுண்மையொடு தியானித்தல் வுறதற் றாடிற், புலன்புகுதாப் புலமுடைய ரயன் றேரும் பொழிமதவா ரணமுநவன் புனித தெய்வந், நலன்புகுவா ருடனெனவாங் கவனு மன்றேனர் தமைநினைந்து தடங்குடைந்தான் றகவி னன்றே. (௬௫)

அவ்வணையன் றனைநேடி யடைந்த வீர ரனைவருமந் தடமூழ்கி யமலராகத், தெவ்வடுவேற் படையணையன் விமான மீது சேனையொடு மொருங்கேறிச் சேணு ளாவித், தவ்வலிலா மதில்சூழ்தன் னகரஞ் சார்ந்து தன்பலனைத் தந்தைதாய் தமர்க ளாதி, யொவ்வொருவர் களும்பெறவே பகுத்தானவ்வா றறவினர்கட் கியந்தனரவ் வீரர் தாமும். (௬௬)

திங்கண்முக நங்கைசித்தி புத்தி கேள்வன் றிருவருளா லொளிபரவு மணிவி மானங், †கங்கிலவா யங்குவர வீம னாதி கடிநகர்வா ழனைவோருங் கடிதி னேறிப், பொங்கொளிசேர் பிங்கலநேர் நிறத்த னான புகழுருக்கு மாங்கதநூ பால னோடுந், துங்கமறை துதித்திளைப்ப வோங்கு மைங்கைச் சுமுகருல கடைந்தின்பந் துன்னி வாழ்ந்தார். [௬௭]

உருக்குமாங்கதநூபாசனைப்படல முற்றுப்பெற்றது.

ஆகப்படலம் ௪௧-க்குத் திருவிருத்தம் (௪௱௬௮)

# திருச்சமதநுபாசனைப்படலம்.

எழுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்

மன்னர்மன் னுருக்கு மாங்கதன் சிந்தா மணியெனு மைங்கரக் கடவுள், பொன்னடி வணங்கி யிருமுது குரவ ராதியர் புரத்துளா ரெவருந், தன்னொடு போத முன்னவ னுலகஞ் சார்ந்ததின் னதுகிருச் சமத, னென்னையுந் தடுத்தாள் விநாயகர் மலர்த்தா ளேத்திய திறமினி நவில்வாம். (௧)

---

† கங்கிலவாய்- அளவிறந்ததாய்.

### எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

முன்னுருக்கு மாங்கதற்குச் சாப மீந்த முகுந்தையவ ளெழிலுருவை முன்னி முன்னி, யுன்னரிய துயர்க்காமக் கடலின் மூழ்கி யுளமெலிந்தா ளஃதறிந்த வும்பர் நாட்டு, மன்னுருக்கு மாங்கதன்போல் வடிவு கொண்டம் மாதினொடு கலந்திளைத்து வான்மீண் டானா, லன்னவளு முளந்தழைந் தாள் கருவுங் கொண்டா ளையிரண்டு திங்களிலோர் மகவை யீன்றாள். [உ]

உருச்சமஞ்சொல் லரியவளா முகுந்தை மைந்த னுயர்மதன்போல் விளங்குமுனி வரனுந் தாதை, கிருச்சமத னெனமகற்கோர் நாம மிட்டான் கிளர்மதிபோ லவன்வளர்ந்து நூல்கள் கற்று, மருட்சியொழித் தருள்செய்க ணானாந் துவாவென் மாமனுவைத் தாதைமகிழ்ந் தோத வெண்ணித், தெருட்சியுறீஇச் சாபானுக் கிரகஞ் செய்யுந் திறலுடைய னுலகிற் சிறப்புற் றானால். (ங)

இன்னவனாங் கிருச்சமதன் வாழ்நா ளோர்நா ளெழிலிதவ மெயிலோங்கு மகத நாட்டு, மன்னவனாஞ் ரூமனென்போன் பிதிர்கட் கூட்ட வசிட்டாதி முனிவர்தமை வருவித் தானாக, குன்னரிய தவக்கிருச்ச மதற்கு மற்றை யுறுவர்க்குங் *கலைமலைவு வலிதி னோங்க, வன்னவரு ளத்திரியா மிருடி †வேறற் காற்றிலனாய்க் கவிமகனை யழன்று நோக்கி. [ச]

அந்தணன்கா தலனலைநீ யரசன் றோன்ற லாதலினிச் சவைக்கருக னன்றே யென்றான், சந்நமுறு வெண்பொடிபூத் தொளிர்மெய் தாங்குந் தவக்கிருச்ச மதன்படிவர் தமைநேர் நோக்கி, யிந்நவையை யிடத்தெனைநீ ரவம தித்தீ ரிதுதீர நுமைமாய்ப்ப னெனக்க லங்கி, சிந்தவுருத் தாங்க கன்று கடிதுதன்னைச் சிரமமடைந் தனைபாற்றன சென்மங் கேளா. (ரு)

அரசனுக்குந் தான்பிறந்த வரலா றெல்லா மறிந்தனையைச் சினந்துவனத் திலந்தை யாதி, §விரகிலியே யெனக்கொடிய சாப மிட்டான் வெகுண்டவனு முன்றனக்கோர் மகன்வெய் யோனாய், வருமெனவே வலித்திலந்தை யானா ளன்பு வளர்கிருச்ச மதன்றானோர் மண்ணாண் மன்னன், றருபுதல்வ னாயினனென் றடங்கொ ணாத சஞ்சலவம் பரம்படிந்து தளரு மேலவை. (சு)

---

* கலைமலைவு—கல்விப்போர்

† வேறற்காற்றிலனாய்—வெல்லவலியில்லாதவனாய்

§ விரகு—பத்தி

சிந்துரமா முகப்பெருமா னருளாற் றேவேந் திரற்குதித்தா யெனக் காய வாணி யொன்று, வந்ததுகேட் டவ்வறவோன் மனத்தி னுரு மம்மர்சி றி தொழித்தலனை வருவித் திட்ட, வந்தவனைத் தினைநீத்து வழாது வேள்வி யாற்றுமருந் தவரீட்ட மடர்ந்த செந்தே, னுந்துபொழி லோங்கயலோர் வனம்புக் காங்கே யுஞற்றுதவ ரனைவருநல் வரவேற றய்பப. (௭)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

அக்கிருச்ச மதனரிய தவம்புரிவா னனியாரவ வனமதி னோர்பாற்
புக்குவலக் காற்பெரிய விரலைநிலத் தூன்றியைந்து புலன்க ளாறுந்
திக்கெவையுஞ் செலுமுளத்தை யிலைநிறுவி மூலமெனந் திகழா தாரச்
சக்கரநான் கிறந்தமூன் றுகோண்வடி வாக நணிப்பீடந் தன்னின் மன்னே()

தேசுறுமோங் காரகண் பதிதன்னை யெழுந்தருளச் செய்தன் பென்னுங்
காசகன்மஞ் சனமாட்டிப் பத்தியெனுங் குளிரார்க் களபம வேய்ந்து
பாசமறுத் தமுதமுறக் கஞ்சூ , வாவென்னப் பல்சான் றோரும்,
பேசுமனுத தியானமதே மலராகத் திருவடியிற பிறங்கச் சாத்தி. (௯)

$அன்னமய முதற்கோச மைந்தையுநி வேதனஞ்செய் தகங்கா ரத்தைத்
துன்னறிய தூபமுமா வபிமானந் தீபமுமாத துலங்கக் கோட்டி
மன்னு†பனை முதலைந்து சத்தியைய ரத்திசுற்றி வாய்த்த மெய்யு
முன்னுளமு மொன்றுறமு வைந்தெழுமா யிரவருட முபாசித் தானால்[௰]

வேறு.

ஞானமே கிரியை யென்ன நவிறரு சித்தி புத்தி
மானனு ரிருவர் பக்க மருவமா வதனங் கொண்டு
பானிற வயமா வூர்ந்து பாறகரத் தொகையோர் கோடி
யானதோ ருருவுற் றற்போ லறிவனமுன் னெமமா னின்றான். (௧௰)

கவிமகன் கண்க ளாரக் கண்டுதாழ்ந் தெழுந்து சூழ்ந்து
குவிகரஞ் சிரமீ தேற நின்றுபல் புகழ்கொண் டாடத்
தவவலி யுடையோய் வேட்ட சாற்றுதி தருது மென்னப்
பவவினை தவிர்த்தா ளீச னருளனும படிவர் கோமான் [௰௨]

---

$ அன்னமயமுதற் கோசமைந்து என்பது- அன்னமயகோசம், பிராணமயகோசம், மனோமயகோசம், விஞ்ஞானமயகோசம், ஆனந்தமயகோசம் என ஐந்துகோசங்களாம்.

† பனைமுதலைந்து சத்தி என்பது - அநுக்கிரகிக்கும்பராசத்தி, திரோபவிக்கும் ஆதிசத்தி, சங்கரிக்கும இச்சாசத்தி, இரக்ஷிக்கும் ஞானசத்தி, சிருஷ்டிக்கும் கிரியாசத்தி எனப்பஞ்சசத்திகளாம்.

உரையுணர் விறந்து நின்ற வொருபொரு ளாய நின்றன்
விரைமலர்த் தாள்கண் டேற்கு வேண்டுமோர் பொருள்வே றுண்டே
திரைபுனற் கங்கை வேணிச் செம்மலே வேண்டற் பாற்றுன்
மரைபுரை பாதத் தன்பே யெனமிக வழுத்த லுற்றான் (௰௩)

கலிப்பா.

கூற்றுவனைப் போன்று கொடுமை பலபுரியுந்
தேற்றமிலா வைவர் சிறுநெறியிற் சேராதம்
மாற்றலரை வென்று வரோதயனே நின்றாட்குப்
போற்றும் புரிவருள்வான் புண்ணியனே நீயிரங்காய் [௰௪]

ஈரானை போர்செய் யிடையின் மசகமெனக்
கூரார் புலவேடர் கொள்போரி னையாமற்
பாராதி யண்டப் பரப்பாவாய் நின்றாட்குச்
சீரார் பரிவருள்வான் செல்வனே நீயிரங்காய் (௰௫)

மத்தினுறு வெண்டயிர்போன் மாழ்கி மனங்கலங்க
நித்தியமு மென்னை நெருக்கும் புலவேடர்
தத்ததனின் மீள்வான் றயாபரனே நின்றாட்குப்
பத்திமிக வருள்வான் பண்ணவனே நீயிரங்காய் [௰௬]

பையா ரகலல்குற் பைந்தொடியார் பாழ்முயக்கிற்
பொய்யாற் ‡குறளையினாற் பொன்றேட மூட்டிவிக்கு
மையார் புலவேடர் வஞ்சனைதீர்ந் துன்னடிக்குச்
செய்யார்வ நன்கருள்வான் சிற்பரனே நீயிரஙகாய். [௰௭]

ஐயலரை வாளி யனங்கன் விடுத்தடர்காற்
றையலரை நீரே தமியேற்குத் தஞ்சமென்பேன்
பொய்யலரை யாளும் புனிதா நினதடிக்கு
கையலறு மன்பருள்வா ளுதனே நீயிரங்காய். (௰௮)

தூண்டி லுறுதசைமீன் றுய்த்திறத்தல் கண்டுமனங்
காண்டகைய மாதர் †கவிரிதழ்வாய்த் தேனுகர்வை
வேண்டல் பொருளா மெலிவெய்தும் புன்மதிவிட்
டாண்டகைநிற் போற்ற வடியேற் கருளாயே. [௰௯]

---

‡ குறளை—கோட்சொல்லல்
† கவிர்—முண் முருக்கு

விட்டி லொளியால் விளிதறனை யோர்ந்துமனம்
பொட்டுமையு மிட்டுப் புனைந்துமால் செய்மகளிர்
கட்டழகை நோக்கிக் கவர்நெறிசெல் கட்புனல்விட்
டிட்டநின் றாட்செய்த வெளியேற் கருளாயே. [உ0]

தும்பி பரிசத்தாற் றொலைவதனை யோர்ந்துமனம்
‡வம்பிறுகுங் கொங்கை மடவார்தோ டோய்ந்துதுன்ப
வம்பரத்தின் மூழ்கி யலமரா துன்றானை
நம்பு மறிவோங்க நாயேற் கருளாயே. (உக)

ஓசையான் மாய்த லுறு§மசுணங் கண்டுமனம்
பாசமார் வார்போற் பகர்நல்லா ரின்மொழியி
னேசமோர் காதி னெறிச்செல்லா துன்றிருத்தாட்
காசையா மாறிங் கயர்வேற் கருளாயே. [உஉ]

வாசனையாற் பூமருவி வண்டிறத்தல் கண்டுமனங்
காசிழைபூண் கொங்கைக் கனிமொழியார் சாந்தலங்கன்
மூசு மணநுகர்வை மூக்குவத்தல் கொள்ளாதுன்
றேசுறுதாள் வாழ்த்தச் சிறியேற் கருளாயே. (உ௩)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

என்னப்பன் முறைபழிச்சுங் கிருச்சமதன் வேட்டவர மீய்ந்தே யோர்சேய், முன்னாநிற் குதிப்பனிசை பெருகவென வுருக்காந்தான் முதல்வ னன்றோன், பின்னுமோர் கோயிலக்கா னத்தமைத்து வாதகண பதியென் பேரும், பன்னாநன் மூர்த்தியெழுந் தருள்வித்துப் பூசித்தான் பரிவு கூர்ந்தான். (உ௪)

கிருச்சமதனுபாசனைப்படலமுற்றுப்பெற்றது.

ஆகப்படலம் [௰உ-க்கு] த்திருவிருத்தம். (௪௱௬௰உ)

# விமலருபாசனைப்படலம்.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

ஒருகிருச்ச மதமுனிவ னரியதவ மெடுநாளா யுஞற்றி வீடாப், பெருமையுறப் பெற்றமையிங் குரைத்தனைய பெரியதவன் றவத்துப் பெற்ற, திரிபுரன்வின் னவர்க்குறுகண் செயக்கொடியோன் றனையமரிற் செகுப்பான் வாசம், விரியிதழி விநாயகனை விமலருபா சித்தசெயல் விளம்பு வோமால். (க)

---

‡ வம்பு- முலைக்கச்சு

§ அசுணம்—கேகய்ப்புள்

இருணிறையா ணவத்தழுந்து *மியமானன் பரிபாகத் தெய்து மேல்வை, கருணைமதம் பொழிவேழ முகன்வரத்தா லந்தணருங் கடவு ளோரு, முருகுளத்தோ டடிவணங்கிப் பணிபுரிய வலிமகத்துக் குபாத்தி யாகிப், பெருமைமகத் துவயோங்க வாழ்ந்தனனக் கிருச்சமதப் பெரியோன் மன்னோ. [உ]

இன்னவணங் கிருச்சமத முனிவரன்வாழ் வுறுநாளி லொருநா ளெம்மான், பொன்னடிதன் னுளத்திருத்திப் பன்னரிய யோகநெடும் போது ஞற்றிப், பின்னர்மிகக் கொடுநோக்கால் விழித்தனனந் நோக்கினின்றும் பிரளயத்துத், துன்னிடியும் வென்னிடவார்த் தோளிர்மேனி யோடொருசேய் தோன்றி னனால். [௩]

சுடர்நிலவு மழுங்கவரு தோன்றலைக் கண்டுமனந் துளங்கிப் பின்னந், திடவுடற்சேய் தனதுமக னெனவறிந்து பலியெனப்பேர் செப்பித் தானே,, தடமருசெம் மறுவையவன் செவிப்புகட்ட வன்னவனு மணியார் சோலை, தடமலியவ் வனத்திருந்து நந்திமுகத் தெந்தையிரு சரண முன்னா. (௪)

வேறு.

முந்திநோற் றிடலு மைங்கை மூர்த்திதண் ணளிபு ரிந்தே
யைந்திரு நூறு கோடி யாதவ ரொளிபோன் மெய்யுஞ்
சந்தமோ தகங்க ளிச்சி தாமரை மலர்சூ லஞ்சேர்
சுந்தரக் கரங்க ணன்குங் கொண்டவண் டோன்றி நின்றான். [௫]

இலகுபே ரொளிக்குக் கூசா திபமுகற் றொழுதெந் தாய்நின்
னிலையுண ராதேன் குற்ற நீக்கியா ளென்றான் முன்னோன்
மலையனின் னேன்பு வந்தேம் வழங்குதும் விழைந்த வென்னப்
பலிதொழு துலக மூன்றும் பரிப்பவும் வேட்ட யாவும் [௬]

வேறு.

முன்னா வுறவும் புருகூதன் முதலோர் தொழவு முன்னடிக்கன்
பென்நா ளினுமிக் கோங்கவுமூ ழெய்தி யிறப்பின் வீடுறவு
நன்னா யகநல் கெனவிரப்ப நல்கிக் கரும்பொன் வெண்பொன்செம்
பொன்னா லியன்முப் புரமுநினைப் பொருந்த வளிப்பேம் புரக்குதியால். ()

பந்த வெயிலம் மூன்றினுக்கும் பகரு நாமந் திரிபுரமே
யெந்த விடத்துச் செலவெணினு மெண்ணு முன்ன ரோகல்செயுங்
கந்த விதழித் தொடைப்பெருமான் கடவோர் பாணத் தழிவெய்து
மந்த வமையந் தனினீவீ டடைந்தின் புறுவை யெனமறைந்தான். [அ]

---

* இயமானன்—ஆன்மா

இலகு மொருவெண் மருப்புடைய விறைவ னருளா லினைபெற்றேன்
புலர்தன் முதன்முக் காலமுமேழ் புரவித் தேரோ னெடுபோர்செய்
யலகி லசுரர் தமைப்படையா லாக்கி நிலைமுற் றடிப்படுத்தி
மலைவில் லவர்க்குத் தம்மரசு வழங்கிப் புரந்தா னெம்பரினும். (கூ)

எழுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

கொன்னவில் வடிவேல் குலவுசெங் கரத்துக் குரிசிலாம் பலியெனும் பெயரான், முன்னரும் வலிசேர்ந் திந்திரன் பிரமன் முகுந்தன்வாழ் புரங்க ளு நிகரின், றென்னுமுப் புரங்கள் பெறலின்முப் புரனென் றியாவரு மி யம்பவாழ்ந் தனனு, லன்னவன் மறுத்துக் கரிமுத லமர ரஞ்சிமே ருவினெ ளித் திருந்து. [ம]

உன்னின ரேகரக் கரமனு வினைப்பல் லுருவினு லத்திற முணர்ந்தே, யென்னையாண் டிடுமே ரம்பன்முன் றோன்றி யினையலிர் நுமதுவாழ் வினு க்கு, துன்னடை புரிமுப் புரனைவென் றிடற்காஞ் சூழ்ச்சிசெய் குதுமது காறு, மன்னிறை களந்தெம் மிறையைவாழ்க் துதுமென் றறைந்தொரு மறைய வனுகி. [மக]

ஒருதிரி புரன்ற னவைசெல வவன்றாழ்ந் துயர்நவி சுநவிநீ யார்நின், வரவெவ னெனலு மறையவ னென்பேர் கலாதரன் வேட்டன வழங்க, திரிபுர நின்மாண் பென்றனர் கயிலைச் செம்மலார் பூசனை புரியும், பொருவி ல்சீர் சிந்தா மணிவிநா யகரைப் பெறும்பொருட் டுன்வயிற் போந்தேன். [ ]

என்றன னீதோ வரிதளித் திடுவ னெனச்சில தூதரை நோக்கி, மன் றநீர் கயிலை மலையடைந் திறைதாள் வழுத்தல்செய் தவருபா சிக்கு, நன்ற ருள் சிந்தா மணிவிநா யகரை நல்கவேண் டிடுமினல் காரேல், வென்றுமை யெங்கோன் கவருமென் றுரைத்து மீளுமென் றறைந்தனன்விடுத்தான் ()

திரிபுரன் விடுத்த தூதர்தஞ் செயல்பின் செப்புவ லொளிந்துறை வி புதர், புரிசெய றெரிக்கிற் புவியொரு தேராப் பொழிகதிர் மதிகளி ருருளா ப், பரிகளுன் மறையாப் பாகன்வே தாவாப் படைகணை யரிசிலை வரையா, வரிதினே னையவு மமைத்தெழிற் கயிலை யணிச்சின காக்கடை யமர்ந்தே[ ]

இறைஞ்சலு நோக்கி யெந்தைநுங் குறையென் னெனத்திரி புரன் செய லியாவு, மறைந்தன ருமது துயரற வவனை யடுதுமென் றுலயத்த டைகான், மறஞ்செறி மனத்துத் திரிபுரன் றூதர் வந்துதாழ்ந் தன்னவன் வகுத்த, திறஞ்சொல வமர்க்கே வருகென வருளிச் செய்துபுன் னகையுட னிப்பால். [மரு]

---

புலர்தன்முதன் முக்காலமென்பது—காலை, உச்சி, மாலை, யெனமுக்காலம்.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

வான்றிரி புரத்தை யிந்நாள் வன்னிவாய் மடுக்கு மாறிங்
கான்றவோர் சூழ்ச்சி தன்னை யமைத்தருள் செயவென் முன்ன
மேன்றநின் றுருவி னேய்க வென்றொரு மருப்புத் தேவை
யூன்றிகழ் சூற்கைத் தேவை யுறவின்றித் தியானஞ் செய்ய. (யசு)

வேண்டுவோர் முகத்தி னின்றும் வேழமா முகத்தோன் றேசார்
காண்டகு முகமோ ரைந்துங் கரங்களீ ரைந்து மெய்யிற்
பூண்டிகழ் தாளத் தாரும் பொற்பவந் துறக்கண் டீச
னுண்டகாய் நீயார் பேரியா தறைக வென்ன விடவே ரம்பன். [யஎ]

கறையணி மிடற்றீ சென்னைக் கருதிநீர் புரியார் வத்தும்
மறைதிகழ் முகத்து தித்தேன் வான்பெயர் கணேச னென்ன
வறைவ சொன் வேண்டு மென்ன வமலன்முப் புரனை வெல்லுந்
திறலுற நினது நாமந் திகழ்மறுப் பீசத தோடும். [யஅ]

எண்ணுமா றருள்க வென்று வியம்பலு மெழிற்க ணேச
னுண்ணிறை யன்பிற் றன்பேர்க் குரியமந் திரமும் பீச
வண்ணமு முறைப்பக் கேட்ட மறைமுதன் மண்ணும் விண்ணு
நண்ணுபல் கணங்கட் கீச னுதலி னினக்கு நாமம். [யகூ]

நனைசெய்தார் கணேச னென்ன நாதவென் றேத மக்கு
மனுவுரைத் தவற்குச் செய்கைம் மாறின்ன வழங்கு கின்று
னனகநால் வேத மங்க மாகம புராண மாதி
புனிதனூ லோதின் யாரு முதனினைப் போற்றி வாழ்க. [உய]

உலககா ரியங்கண் முற்ற வுவணகே தனன்முன் னோ
புலவர்மா னிடர்க ணின்னை விதியின்முற் பூசை செய்க
தலையின்யா ரெனினு மின்னைத் தாழ்ந்திடா தியற்று கன்மம்
பலவித விக்கி னத்திற் பாறலெய் திடுக வென்றான். (உக)

அன்னபோ தரிமுன் னோன வமரரு மிறைஞ்ச வேற்றெம்
முன்னவன் மறைந்தா னாக முப்புரன் றாதர் தங்கண்
மன்னவன் கழற்கா ளூழ்ந்து மலைமகள் கொழுநற் கெந்தா
யுன்னுமா யனைத்துஞ் சொற்று முவர்த்தவ னெப்பா னோசி. [உஉ]

காயரி கதறக் கரயுஞ் சிம்புள்போற் கனன்றான் மீண்டே
மாயின மென்னுங் கண்க ளழலெழ விழித்தன் னேனம்
பாயமுப் புரமுங் காப்பா ராதிபல் படைஞ ரிங்ங
னேய்கவென் றழைத்தன் னோர்வந் திடுதல்கண் டமர்க்கெ ழுந்தான். [உங]

விறல்கொண்முப் புரனிவ் வாறு வெஞ்சமர்க் குறல்கேட் டீசன்
மறமலி வேற்கை வள்ளன் மாமுகன் றருமி லக்கன்
றிறமலி வீர னாதி சேனைநாற் புறமுஞ் சூழ
நிறமலி யிரதத் தெங்க ணிமலையோ டிவர்தல் செய்தான். [௨௪]

கடலென வியங்க ளார்ப்பக் கவரிவெண் டிரையிற் றுள்ளப்
படர்கொடி யகல்வா னூர்ப்பப் பனிமதிக் குடைநி ழற்ற
விடையவன் சூர மைத்த வியனெடுந் தேரூர்ந் தேய்தல்
கொடியமுப் புரமன் கண்டு கொதித்தம ராட லுற்றான். [௨௫]

மற்றைய வவுண வீரர் தனித்தனி வந்து சூழாச்
செற்றசே யாதி வீரர் தமமொடு செருந டாத்த
முற்றட விழுந்து வாளுண் முடிந்துவா னுடுற் றாரால்
வெற்றிவெண் சங்க மார்த்தார் விமலர்தந் தானைவீரர். [௨௬]

எந்தைமுப் புரமன் றனை யாவையு முருக்க வன்றான்
சிந்தைநைந் திருந்தன் சேந்து திரிபுரங் கனாநி னைப்ப
வந்தது பொருதற் கேற்ப மாயைகள் பலபு ரிந்தா
னந்தமா யையினால் விண்மண் ணடையவு மருசிற் றம்ம, [௨௭]

வஞ்சக னியற்று மெண்ணின் மாயையா வையும்வெந் நியிற்
பஞ்செனத் தொலைத்துப போது பாணிந்தான் பரமன் வானோ
ரஞ்சியண் டங்க ளெல்லா மனைக்கணந் தழிப்போய் நாயே
முஞ்சிடு மாறோர்ந் திம்முப் புரனையின் றொழித்தி யென்றார். [௨௮]

எழுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

துடியிடை யுமையு மவ்வணம் புரிவான் றொழுமவ ரடியவர் துயரைக்
கடிகண பதிரன் மனுவையுச் சரித்துக் கனலுமிழ் முத்தலைச் சூலப்
படைவிட வதனைப் பார்த்திலர் பார்த்தார் பார்த்திவ னோடுமுப் புரம்வெந்
திடுதலை வானந் தநந்துதுந் துமியு மிசைத்தன கணங்களார்த் தனவே. []

வானவர் மலர்தூ வினர்விடு சூலம் வருமுனந் திரிபுர னென்னுந்
தானவ னமலன் மலரடி மருவித் தனிப்பர முத்தியிற் கலந்தான்
நாறு முளரி யயன்முத லமரர் துயர்செய்முப் புரனைமாய்த் தமைக்காத்
தேனவி ழிதழி யாற்கொரு நாமந் திரிபுராந் தகனென விசைத்தார். [௩௰]

என்னையாண் டருளுஞ் சிவபராஞ் சுடரோ னிருங்கயி லாயமெற் படைந்து
தன்னடி வணங்குஞ் சநார்த்தன னாதி தானவர் பகைவெல் லோர்க்கு
மன்னிய வரநன் கருளின னவரு மதிலொரு மூன்றுளா னவிந்த
கன்னிமா மதியின் பூரணை தன்னிற் கவின்றரு விழாநடத் தினரால். [௯௧]

பொன்னுறை மார்ப னாதியர் முன்போற் பொற்பமர் தம்பதி புக்கார்
முன்னவ ரியற்று விழாவுறு தினத்தை மொழிகுவர் பாகுளி யெனவே
யன்னபா குளியி லவரவர் தகுதி யளவரன் பூசனை புரிவோர்
பன்னரு மிடர்தீர்ந் தரும்பெற்ற பயனும் பல்கிட வாழ்குவர் சதம். (௯௨)

விமலருபாசனைப்படலமுற்றுப்பெற்றது.

ஆகப்படலம் [௰௯] க்குத்திருவிருத்தம். [௲௯௰௪]

# சதுர்த்திவிரதப்படலம்.

எழுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

தமனியம் வெள்ளி யிரும்பினு முனரு தழங்கெயில் பொடிசெய விக டர், விமலருக் குதவு சரிதமீ தன்ன விமலர்முன் றனைமணம் புரிவா, னுமையவ ளுவப்பின விநாயக சதுர்த்தி யுரைப்பினுங் கதியருள் விரத, மி மமலை யரையன் றெரித்திட வறிந்தாங் கியற்றிய வகையினி மொழிவாம்.[ ]

செக்கரஞ் சடையி லிளம்பிறை மிலைச்சுஞ் சிவபிரா னிடத்தமர் பவா னி, தக்கன்மா மகளா யுதித்ததிற் பவஞ்சேர் தனுவொரீஇப் புனிதையா மாறு, மிக்குய ரிமவான் புதல்வியென் பெயரின் மேவிய பொழுதுகங் கை யையங், நக்கனார் மணஞ்செய் முனந்தனை மணப்ப நாடிநொ டிருவுய மதனில்.

தந்தைபா லதனை நவின்றொரு விரதஞ் சாற்றுக வெனவரை யரைய ன், முந்துமா மயிலூர் முருகனுக் கிறைவன் மொழிந்தனன் னென்பது த னது, புந்திதோன் றுதலு முவகைமிக் கோங்கிப் பொருவிறன் மகட்கது புகல்வா, னந்துசீர் வெய்யோன் சிங்கம்வந் தெய்து நலமதிப் பூருவ பக்கம்,

நன்றுறு சதுர்த்தி யேகதந் தருக்கு நயந்தநா ளாயிருந் தலினா, லன் றுவை கறையி னுற்றுறு கடன்க ளனைத்தையும் விதிவழி முடித்துப், பி ன்றனி முதல்வற் காமயி டேகப் பெரும்பொருண் முதலிய வமைத்து, ம ன்றவன் பொற்பூ சனைசெயின் மனத்து விழைவெலாம் வல்லைவந் துறு மால்.

என்றன விரத நோற்றிடு முறையு மெழில்வளர் *மூர்த்தமொன் றாதி
நன்றருளோரா யிரம்வரை யமைத்தந் நாதனை வணங்கிடும் பயனு
மன்றுணை செயமா தன்னநோன் பியற்ற வவாவுளேன் பொருளெலாந் தந்தா
யொன்றுற வருளி யென்னலு மிமவா னுழையனைக் கூய்ப்பணித் தனனால்.

ஆட்டுதற் கமைந்த கங்கைநீ ராதி யடங்கலுங் கொணர்ந்தனர் சில்லோர்
சூட்டுதற் கமைந்த நொடைமல ராதி தொடுத்தன ராய்ந்தனர் சில்லோ
ரூட்டுதற் கமைந்த திருவமு தாதி யுநவிடச் சமைத்தனர் சில்லோர்
காட்டுதற் கமைந்த தூபதீ பாதி கவினுறத் திருத்தினர் சில்லோர். [கூ]

மணிகளா லுலோக வகைகளாற் பூசை மண்டப மமைத்தனர் சில்லோ
ரணியுற வதனு ளொளிர்மணி நறும்பூ வலங்கல்க ளூற்றினர் சில்லோர்
திணியதாட் கமுகு விரிதலை யரம்பை தீஞ்சுவைக் கரும்புக ணிறுவிப்
பணைதரு தெங்கின் கனிகுலை பிறபல் பழநகுவை கோத்தனர் சில்லோர்.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

இன்னவா றுழைய ரெல்லா மிருமபணி யியற்ற யார்க்கு
மன்னவான் கங்கை யாடி யருட்டிரு நீறு பூசிக்
†கன்னமா தியவா றங்கங் கவினுறல் லுருத்தி ராக்க
மின்னியார்ந் திடவ ணிந்து மண்டப மேயி னானால். [அ]

---

* மூர்த்தமொன்றாதி நன்றருளோராயிரம்வரை யமைத்தந்நாதனை வணங்கிடும் பயன்—ஒருமூர்த்தம் அமைத்துப்பூசிப்போர் தனதானிய புத்திரபந்துவர்க்கங்களையும், இரண்டு மூர்த்தம் அமைத்துப் பூசிப்போர் அளவற்ற காரியசித்தியையு, மூன்று மூர்த்தம் அமைத்துப்பூசிப்போர் மலைபோல நவரத்நங்களையும், நான்கு மூர்த்தம் அமைத்துப்பூசிப்போர் தருமமுதலிய நான்கு புருஷார்த்தங்களையும், ஐந்துமூர்த்தம் அமைத்துப்பூசிப்போர் ஏகச்சக்கராதிபதியாந் தன்மையையு, ஆறு மூர்த்தம் அமைத்துப் பூசிப்போர் சிருட்டியாதிமுத்தொழில்கட்குந் தலைமையையும், எழு, எட்டு, ஒன்பது, என்னும்மூர்த்தங்கள் அமைத்துப்பூசிப்போர் சருவஞ்ஞத்துவத்தையும், பத்துமூர்த்தம்அமைத்துப் பூசிப்போர் திரிகால ஞானத்தையும், பதினொரு மூர்த்தம் அமைத்துப்பூசிப்போர் ஏகாதசருத்திரர்கட்கும் அதிகாரத்தன்மையையும், பன்னிரண்டு மூர்த்தமுதல் நூற்றெட்டு மூர்த்தம் வரை அமைத்துப்பூசிப்போர் முற்கூறியவற்றிற்கு மேற்பட்ட பயன்களையும், ஆயிரம் மூர்த்தம் அமைத்துப்பூசிப்போர் மிகவுமேற்பட்ட பெரும்பயன்களையும் அடைவர்.

அன்றியும் எழு மூர்த்தம் அமைத்து மூன்று நாள் பூசிப்பினும், ஒன்பதுநாள்பூசிப்பினும், ஐந்துவருடம்வரை பூசிப்பினும், அந்தியகாலம்வரை பூசிப்பினும், ஒன்றற்கொன்று ஏற்றமானபயனையடைந்துவந்து கடைசியாய் விநாயகமூர்த்தியினது சாயுச்சிய பதவியையடைவர்.

இவற்றின் விவரம் விநாயகபுராணவிரிவிற்காண்க.

† கன்னமாதியாறங்கமாவன—காது, மார்பு, கை, தலை, தோள், கழுத்து, என்னும் இவை.

சிற்பநூன் குணர்ந்த தேவ கம்மியன் செம்பொன் றன்றால்
விற்பொலிந் திடவ மைத்த விநாயக மூர்த்த மொன்றும்
பொற்பமண் ணாற்செய் மூர்த்த மொன்றுநூற் புலவோ ரெல்லா
மற்புதம் பொருந்தும் வண்ண மளித்தன னமலை யங்கை. [௯]

ஐந்துசத் திகளு மாற்றி யங்கமை வேதி தன்னி
னந்தலி லரிசி தன்னை நலமுறப் பரப்பி மீது
சுந்தரத் துகில்வி ரித்துத் துன்னிழை சுற்றித் தேசு
சிந்துபொற் குடமு றுத்திச் சீதநீ ரதனுட் பெய்தாள். (௰)

தழைநறுந் †தளிரோ ரைந்துந் தயங்கொளி *மணியோ ரைந்தும்
வழுவில்பொற் கும்பத் துள்ளே மருவுறச் சாத்தி யாரும்
விழையுமேந் திரத்தை வைந்து விளிவில்செம பொன்னிற் செய்த
வழகமை விம்பந் தன்னை யிருத்தினு ளார்வ மோங்க. [௰௧]

பீடுயர் பொற்பீ டத்திற் பிறுதுவி மூர்த்தந் தன்னை
நீடவைத் தருகார் கங்கை யாதிநீர் நிறைபொற் கும்பத்
தேடவிழ் மலர்சந் தாதி யிட்டமெஞ் சனஞ்ச மைத்தாண்
மாடுபொன் மணிகு யிற்றும் வட்டகை களினீர் வார்த்தே. (௰௨)

பகர்குசை நுனிநெல் லாவின் பாலெள்வெண் கடுகு பூசந்
திகழ்விறண் டெலம்பெய் தெணணர்க் கியங்கண்மந் திரத்தாக் கிப்பின்
புகர்முகத் திறைபூ சைக்காப் பூக்கடுத் தூப தீபந்
திகழுவித் தருக்கி யந்தா டிருமுகஞ் சென்னிக் கீய்ந்தாள். [௰௩]

மணமலி தயில முன்னும வர்க்கமஞ் சனத்தோ டாட்டி
யணிசெய்பொன் னுடை சாத்தி யுரோசனை ?பளித மாரந்
§தணியமான் மதஞ்சேர்த் தப்பித் தருமணிக் கலன்பொன் னாற்செய்
பணிநறு மலர்ப்பன் மாலை பாங்குற வெடுத்த ணிந்து (௰௪)

திருவடி முதலா *மங்க பூசனை சிறப்பி னாற்றிப்
பரிமளப் ?பச்சை யாதி பத்திரத் தருச்சித் தோவா

---

† தளிரைந்து—அத்தி, ஆல், அரசு, மா, நாவல், இத்தருக்களின் தளிர்கள்.

* மணியைந்து—பச்சை, பவளம், வயிரம், பதுமராகம், மாணிக்கம் இவை.

? பளிதம்—கருப்பூரம்.

§ தணியவென்பது—தண்ணியவென் றதின் தொகுத்தல்விகாரம்.

* அங்கபூசனை—பாதம், முழந்தாள், தொடை, நிதம்பம், நாபி, வயிறு, இதையம் கண்டம், கழுத்தடி, தோள், உள்ளங்கை, நாசி, கண், காது, தந்தம், சிரம், இவ் அவயவங்களில் தனித்தனி பூசித்தல்.

? பச்சையாதி பத்திரங்கள்— மாசிப்பத்திரம், கரசராங்கனி, வில்வம், அறுகு, இலந்தை, ஊமத்தை, துளசி, நாயுருவி, சிறுவழுதி, வன்னி, மந்தாரை, மரு, அலரி கோங்கு, வெள்ளெருக்கு, மருது, விஷ்ணுக்கிராந்தி, மாதுளை, சாதிமல்லி, கண்டல், தாழை, என்னும் இருபத்தொருவகையிலைகள்.

மருவுறு தூப தீபா சமனமர்க் கியம்வ ழங்கி
யொருமருப் புடையார்க் கின்ன வுண்டிக ளூட்டப் புக்காள். (௰௫)

இருதலூண் சுத்த வல்சி கௌர்தநி யமலே ரே
மருவுறுக் கடுகின் மூரன் மாணில வங்கப் பொம்மல்
கருநிற வெள்ளி றுண்டி கரும்படு கட்டிச் சொன்றி
பிரியலோ தனமுன் றூன பிசைகள்சேந் தொளிர்ப ருப்பு [௰௬]

மாசறு மிளகு காய மல்லிசீ ரகமு மூந்து
தேசுறு மஞ்ச ளாதி செழும்பொருள் செறித்த மைத்த
பூசணி யாணை பேழைப் பூமுதிர் கனிகாய் தண்டு
பாசிலை கிழங்கி வற்று லட்டபா குகள நேகம். [௰எ]

கருணைபல் வறைய லூறு காய்கனி துவைவு வட்டுத்
திரடதி நெய்பா னீர்மோர் தேன்கருப் பிரதங் கட்டி
மருவற விளநீர் வெந்நீர் மாவெலு மிச்சை யாதி
தருமுதிர் சுவைப்ப முதநின் சாறுவா சனையார் தண்ணீர் (௰அ)

அலகறு வடைமென் றோசை யடைபொரி யுண்டை கஞ்ச
நொலையலா சக லபூப நுவலணேதேன் குழலமு றுசகுப
பலவகை யாய கண்டல் பயற்றெடு தெங்கங் காயு
முலைவில்சர்க் கரையுஞ் சோத்த வுண்டைமோ தகம நேகம். (௰௯)

கட்டிசே ரரிசி நிம்பா கமைந்தபல் பருப்புக் கட்டி
பிட்டவல் கிருதத் தோடு பிணைந்ரவுக காரி தித்திப்
புட்டதும் பரம்பை நாவ லுயர்தெங்கு வெள்ளி லாதி
மட்டறு கனிய நேகம் வாய்ந்தவெள் ளரிக்கா யற்றே. [உ௰]

இன்னபல் லுண்டி வர்க்க மியற்றுபல் கலங்க டம்மி
னன்னரிற் பெய்து நைவேத் தியமது நவின்று செய்வித்
துன்னியங் கரத்தாற் சுத்த சலமெடுத் துதவி யாச
மன்னிய மாதி மூன்று மனக்களிப் பொடுவ ழங்கி. [உக]

வாசமெல் லிலைகா யாதி மணப்பொரு ளெவையு நல்கித்
தேசொளி ரடுக்குத் தட்ட மாதிதீ பங்க ளோர்கோட்
டீசனுக் கெதிர்சு ழற்றி யெழிலாடி குடையே தோகை
காசறு விசிறி யால வட்டம்வெண் கவரி காட்டி. [உஉ]

---

* அபூபம்—அப்பவருக்கம்.
* நுவணை—இனமா.

மந்திர மாங்க ளனைத் துவாவெனத் தியானஞ் செய்து
மந்திர புட்பஞ் சாத்தி வளமருள் சிய சாத
மந்திர மதினி னீராஞ் சனஞ்சுற்றி மனுவுக் கெல்லா
மந்திர மூர்த்தி யானை வலங்கொடு மலர்த்தாள் போற்றி. (உ௩)

ஆறுற ழேழு கொண்ட வறுகினை யிருபத் தொன்றாக்
கூறுமந் திரத்தி ரண்டாக் கூட்டித்தாண் மிசையர்ச் சித்து
வீறுறு பூசை யாற்றும் பலத்தையவ் விமலற்கீய்ந்தே
யூறினல் லுளத்தோ டோங்கு தியானமு முனாற்றி னாளால். (உச)

பழுத்தநே யத்த வர்க்குப் பதமல ரருளே ரம்பன்
விழுத்தகு மந்தி ரத்துள் விழுமிதா மூல மொன்றா
றெழுத்தகத் தளித துமப வெண்ணினு ளுணவு றக்க
மொழித்தொரு மதியி னெல்லை யுற்றிருள் பூசை முன்போல். (உரு)

தருப்பண மாதி யாவுந் தகவுற நடவிப் பொன்பூ
விருப்பொடு பலதா னங்கள் வேதியர்க் குவப்ப நல்கிச்
சுருப்பினந் துதையுங் கொன்றைத் தொடையனை யொளிரு மொற்றை
மருப்பனை யனுதி யானை மனத்துளே யொடுக்கிப் பின்னர். (உ௬)

பெருகொளி பொன்னிற் செய்த பெட்பமர் மூர்த்தி தன்னைப்
பொருளொடு கொடுத்தா டங்கள் புரோகிதன் றனக்குப் பாச
மருளற மண்ணிற் செய்த மூர்த்தியை வரிசை யோடுந்
தெருளுற நீர்வாய்ச் சேர்த்தாள் சிவபா ரனோர்பாற் *காரந்தாள். [உஎ]

விருந்துற வினர்தம் மோடு மறுசுவை மிதவை யுண்டாங்
கிருந்தனள் பினரோ ரம்ப னின்னருள் பெறலா னம்பன்
முருந்துரு வுடைய ளான கங்கைக்கு முன்னர் நீலத்
திருந்துரு வுமையா டன்னைத் திருமணஞ் செய்தா னென்பர். [உஅ]

இன்னநல் விரதஞ் சந்தி ராங்கத னென்போன் கத்த
மன்னள னோற்று முத்தி மருவினர் மார னோற்று
முன்னரா னெக்கின் வெந்த மூரியா ருருப்பின் பெற்றான்
பின்னரு மாற்கே சேயாய்ப் பிரத்திம னெனும்பேர் கொண்டு. [உ௯]

தன்னிக ரில்லா நம்பன் சடைமிசை வதிகின் றேம்பா
மென்னவுட் டருக்கி னோர்காற் சேடனேய்ந் திடலு மன்னான்

* காரந்தாள்—கருநிறத்தினளாயிருந்த உமாதேவியாம்.

சென்னியா யிரம்பி ளப்பிற் சிதைவுறச் செய்தா னெம்மா
னன்னகா லையிற்ச துர்த்தி நோன்பவ னன்பி னோற்றான். [கூ0]

உரகமன் புரியு நோன்பிற் குவந்துவா முகத்தே வன்பா
திரமினின் சிரப்பி ளப்புச் சிரமொரா யிரங்க ளாக
வுரமொடு செருக்குஞ் சென்னி யொன்றைந்து சென்னி யாக
வொருதலை யாக நம்மையுவப்பச்செய் நோன்பா லென்றான் [கூக]

ஆதலாற் சேடன் சென்னி யாயிரங் கொண்டு பூமி
மீதுறத் தாங்க லுற்றான் விமலனைம் முகவே ணிக்கண்
மாதலை யைந்தோ டுற்றான் வளர்கண பதிய கட்டிற்
போதுட . தனமா யேக தலையொடு பொலிகின் றானால். (கூ௨.)

வானவர் தமக்கு மாறு மம்மர்நோ யிழைத்து வந்த
தானவ னான தாரு கனைத்தெறத் தனிவேற் கையா
றானனன் மதம்பெய் யா ன யானனன் மலர்த்தா ளுன்னி
யூனமில் சடக்க ரத்தை யோதினான் சின்னாண் மன்னோ. [கூகூ]

முன்னவன் பின்ன வன்றன் முன்புறீஇ வரங்க ணல்கித்
தன்னரும் பரிய தான தனிமட லளித்தான் பின்னோ
னன்னவ னுருவங் கண்டாங் கனியறு கிலக்கங் கைக்கொண்
டுன்னரும் பூசை யாற்றி யுவப்பமோ தகங்க ளூட்டி. (கூச)

எழுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

அன்னவற் கிலக்க விநாயக னெனப்பே ரறைந்தொரு மயூரமீ திவர்ந்து, துன்னருங் கொடிய தாருக னுயிரைத் தொலைத்திரும புவனமத் தனையு, நன்னலம் பெருகக் க. த்தனன் சாமி நாதனிவ் விரதமேன் மையினை, யின்னமும் பகரின் விரியுமெண் ணிலர்நோற் றிருமையும் பெருமையுற் றனரால். (கூரு)

சதுர்த்தி விரதப்படலமுற்றுப்பெற்றது.

ஆகப்படலம் (யச) க்குத்திருவிருத்தம். [ருஉயகூ]

# சங்கடசதுர்த்திப்படலம்.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

துதித்தல்செய் திடலில் லார்க்குத் துன்பினை விளைத்துந் தம்மைத்
துதித்தல்செய் குநருக் கின்பஞ் சுரந்துங்காப் பவன்ற னக்காஞ்
சதுர்த்தியின் விரத மேன்மை சாற்றினுஞ் சங்க டப்பேர்ச்
சதுர்த்தியின் விரத மன்னை றாளிணை பணிந்து சொல்வாம். [க]

தெண்டிரை நீர்சூழ் வைப்பிற் சிறந்தமத் தியதே யத்துக்
கொண்டல்கண் வளர வார்ந்த கொழுஞ்சுவை நறவ மாந்தி
*வண்டலெல் லினுமு ரன்று வண்டலுக் கியைந்து வான்றோய்
தண்டலை மலிநீண் மூதூர் சகத்திர புரியென் றென்றால். [உ]

அன்னதொன் னகர்க்குச் சூர சேனன்வேற் றரையர்க் கெல்லா
மன்னன்மன் மதனை வென்ற வனப்பினான் வணங்கார் தம்மைக்
கொன்னவில் வேற்கு ணாவாக் கொடுப்பவன் பணிவார் தம்மை
யின்னலொன் றின்றிக் காப்போ னிசைதிசை முழுதுஞ் சேர்ப்போன். ()

இருநில னுணா வோர்நா ளிருள்வலி யிரத மான
வொருபெரு விமான மன்ன வூரிடை யிறங்கக் காணூஉப்
பொருவிலம் மானப் பாங்கர்ப் போந்தத னுப்பண் டேவேந்
திரன்வதிந் திடுத னோக்கிப் பற்பல முகமன் செப்பி. (ச)

போந்ததென் னெனவ லாரி புருசுண்டிப் பெயர்மே லோனை
வேந்தகாண் டற்கு வந்தேன் மீண்டங்குச் செல்வே னிவ்வூர்
நீந்தெல்லை தொழுநோ யுற்று நிகழ்பவத் தினனோர் நாயக
னெய்ந்தகண் படலாற் செல்லா திழிந்ததிங் கெனது மானம், (ரு)

இழிந்தவிம் மான மைங்கை யிறைவன்சங் கடச துர்த்தி
வழங்குபூ சனைசெய் திவ்வூர் வதியுமற் றொருவ னன்மே
லெழுந்திடு மெனலு நன்றென் றியற்புரு சுண்டி யாரச
செழுந்தவன் புரிநோன் பியாது தெரித்தரு ளெனத் தெரிப்பான். (சு)

தண்டக மெனவி யாருஞ் சாற்றுமோர் வனமுண் டாங்கே
விண்டழல் சிதற நோக்கும் வேடன்விப் பிரத நாமங்
கொண்டவ §னாற லைத்துண் கோளனோர் மடுப்பாங் கோர்நாட்
கண்டனன் புலன்க ளைந்துங் கடிந்தமுக் கலமே லோனை. (எ)

அன்னவ னுடற ணிப்ப வடுபடை வாளை யோங்க
முன்னவ னுருவு தாங்கம் முனிவனோக் கிடலுங் கைசேர்
மின்னவிர் வாண்மண் வீழ யேவறி யாமை நீங்கி
நன்னிலை வெய்த மேலோ னறுங்கம லத்தாள் வீழா, (அ)

---

* வண்டலெல்லினு முரன்றுவண்டலுக கியைந்து என்பது—இரவும் பகலும் வண்டுகள் கீதஞ்செய்து மகளிர் விளையாடற்கேற்றதாகி.

§ ஆறலைத்துண்கோளன்—வழிப்பறிசெய்துண்ணுங் கொள்கையுடையோன்.

எனைத்தவ புரத்தி யென்ன விருந்தவன் வேட னுள்ள
நினைப்பையோர்ந் தத்த டத்து நீர்படிந் திடச்செய் துன்னி
னனைத்துநல் கிடுங்க ணேசா யநமவென் மந்தி ரத்தை
மனத்துய சொழிப்பா னேதி மருங்கொரு தண்டை யூன்றி. [உ௬]

இன்னது தளிர்க்குங் காறு மிரும்புனல் வார்த்தே ரம்பன்
றன்னடி நினைந்தியா னேதுந் தனிமனுத் தியானிப் பாயென்
றுன்னருந் தவன்சென் றனவ் வுபதேசப் படியே வேடன்
மன்னிய பத்தி யோடும் வருடமா யிரமி ழைந்தான். (உ௪)

தண்டிலை யாதி மொய்த்தோர் தருவுரு வாக வீது
கண்டுமுக் கலன் வியந்து கரகநீர் தெளித்து மெய்ம்மைத்
தொண்டுசெய் யன்பன் மெய்யிற் றாவலும் புருவ நாப்பண்
§சுண்டமொன் றெழுந்த தற்றாற் புருசுண்டி யெனச்சொல் வாரால்.

பற்றறுத் தருளே ரம்ப பரமன்போன் முகத்துச் சுண்டம்
பெற்றபக் குவனை நோக்கிப் பிறங்குட றைவந் தையன்
முற்றுநன் கருளு மேகாக் கரத்தையு மொழிந்தித் தாருக்
கற்பமா குகநீ யோவோர் கற்பம்வா ழுகவென் றன்னுன். [௩௦

வேறு

தன்னிடஞ்சென் றனனைய தருவொருகற் பத்தினெல்லாந் தாவற் றுகி
றன்[illegible]னியது புருசுண்டி யோரொ[illegible]த்தை யாயிரமாம் வருட மோத
வன்[illegible]வற்கும் பன்முகத்தெம் மண்ணலெதிர் தோன்றிநல னருளி னன்பின்
பன்ன[illegible]ருஞ்சங் கடசதுர்த்தி நோன்பினையப் புருசுண்டிப படிவ னுற்றி. ()

மீட்[illegible]டரிய நரகுழக்குந் தன்னினத்தா ரனைவரையும் விபுதர் வாழ்பொன், னாட்டி[illegible]டைச்சார்ந் திடவிடுத்தா னதலினு லவ்விரத நலனிற் றென்னக் காட்டுதற்கோ[illegible]ர் †காட்டிலதவ் விரதமின மொன்றுளது கதைத்தும் வேந்த கேட்டியென[illegible] தயிந்தியைக் கிழப்படுத்தும் வானவர்கோன் கிளக்க லுற்றுன். (௩௩)

வேறு,

அலைபுனற் காவி [illegible]க்கோ ராகர மான சைய
மலையின்மாட் டெ[illegible]திலு மிக்க வளமுமார் நகரின் மன்னு
மிலைமலி வைவேற் [illegible]சங்கைக் கிருதவீ ரியனு மேந்த
னலமலி சுகந்தை யெ[illegible]ன்னு நன்மனை யொடும்வாழ் நாளில், (௩௫)

---

§ சுண்டம்—யானை[illegible]த்துதிக்கை.
† காட்டு-உதாரண[illegible]ம்.

குற்றமுங் குணமாக் கொண்டடி யார்முன் குலவிடும் விக்கின ராசன்
பற்றுமுற் றெழித்தார்க் கருண்மயூ ரேசன் பண்புடைப் பாலசந் திரனே. சு

கதிதரு தூம கேதுநற் கணேசன் கணபதி பெருமகோற் கடன்மா,
மதியருண்டி வல்லபை கணேச னென்னவா றிரண்டுமேற் றவற்றுட்,
பதுமன்முன் மூவர் போற்றும்வக் கிரதுண் டப்பெயர் மூர்த்த†முன் பகர்ந்
தா, நிதிபொழி சிந்தா மணிவிநா யகன்சீர் நிகழ்த்துது மறிதரு மளவே. எ

வக்கிரதுண்டன் றிருவவதார முற்றுப்பெற்றது.

---

## சிந்தாமணிவிநாயகன் றிருவவதாரப்படலம்.

### அறுசீர்க்கழி நெடிலடி யாசிரியவிருத்தம்.

வளைவள நிரையார் முல்லை வளங்கடல் வளநீர் சூழ்ந்த
தளைவளம் பொலிவுற் றோங்குந் தண்டமிழ் நாட்டு வேந்தன்
களையில்சீ ரபிசித் தென்போன் குணவதி யென்னுங் கற்பிற்
புளையிலா மனைவி தன்பாற் கணனென்றோர் புதல்வற் றந்தான். (க)

அத்தகு புதல்வன் பால னாகிய பருவ நீங்கி
வித்தகத் தவமி யற்றி விதுமுடிப் பெருமா னல்கு
முத்தம வரத்தால் வேந்தா யுலகம்வான் பிலமும் வென்று
சித்தமீக் கூர்ந்து தேவர் திரட்கெலா மிடர்பு ரிந்தான். (உ)

புவிபுகழ் கணனிவ் வாறு பூபதி யாகி வாழ்நாட்
கவர்படு வேட்டம் போய்மீள் கால்வழி தப்பி யோர்காட்
டிவர்பரி சனரோ டும்ப ரொட்டும்வான் பொழில்வாய் மௌவ
லவிர்குறும் பந்தர் வாவி யருகுறல் கண்டாங் கெய்தி. (ந)

பலகலைச் சங்க நண்ணிப் பயின்றுணா ரறிஞர் மான
நிலைபெற வளர்ந்து வாச நிறைமலர்ச் சோலை நீங்கா
வொலிபுனல் வாவி மேவி யொளிர்முல்லைப் பந்தர் தாவி
யலர்மண முழுது முண்டாங் கசைந்தசைந் துலாந்தென் காலும். (ச)

மனமொழி வாக்குக் கெட்டா மறைமுத லொருவ னாய
வன்கனை யுன்னிப் பல்கா லருந்தவம் புரிந்து கற்றுச்

---

†முன்பகர்ந்தாம-என்பது உபாசனகாண்டத்தில் மூவருபாசனைப் படலத்திற்காண்க.

சினமிரிந் தடங்கி னோர்தஞ் சிந்தையின் றேற்றம் போலும்
புனறெளி கலுழி யுஞ்சேர் பொருந்துத னேக்கு தோறும். (௬)

புளகித மெழலா லன்ன பொரூற்பமை நதிநீ ராடித்
தளர்வகன் றிடலு மேவ ரூங்குவோர் கனிகாய் கந்த
மூலகொணர்ந் தளிப்பத் துய்த்தா னிஃதவ னுறைந்து நோற்கு
வளமலி கபில னோர்ந்தம் மன்னையீங் கழைத்தி யென்ன. (௬)

கலிநிலைத்துறை.

நின்ற சேடனை விடுத்திட மன்னவ னோர்ந்து
குன்ற னுன்பதம் பணிதலு மாதனங் கொடுத்து
வென்றி வேந்தநீண் டெய்தினோர் பசியொடு மீளா
ரின்று நீயுநன் கருந்தியே கெனவிறை யிசைந்தான். (எ)

பின்ன ரம்முனி *முன்னர்வா னிறைதரப் பெற்றுத்
தன்னம் மார்பணி யாக்கொள்சிந் தாமணி தனையோர்
பொன்னி னாசனம் வைத்துபா சித்திறை புசிப்ப
நன்ன ரார்விருந் தியற்றுக வெனநவின் றிசைந்தான். (அ)

அன்ன மாமணி நன்றென நகரமொன் றமைத்துப்
பொன்னி னற்கலம் பல்பொரு ளுணவமைப் போர்க
ளின்ன வாக்கிநான் குணவறு சுவைமற்று மியற்றி
மன்ன னாதியர் மிசைந்திட வழங்கிய தன்றே. (௯)

அறுசீர்க்கழி நெடிலடி யாசிரியவிருத்தம்.

மனமகிழ்ந் தயின்ற மன்னன் கபிலமா தவன்றாள் போற்றிப்
பனவருந் தவத்தி னெல்லா மனத்தினாற் படைத்துக் காத்துப்
பினாழித் திடவல் லோய்நிற் கெற்றிற்கிம் மணியே ராழி
புனையுல கோம்பு வேற்குத் தருமருள் புரிக வென்றான். (௧௦)

மாதவன் செவிக்கிம் மாற்றம் புகமிக வெகுண்டு மன்ன
கோதிலிம் மணியென் னாவி போன்றது கொடுத்த லொல்லா
தீதொழித் தெதுகேட் டாலுந் தருவலென் றிடப்பின் னெய்துந்
தீதுண ராதா னன்ன மணிவலி தினிற்ப றித்தான். (௧௧)

---

*முன்னர்வா னிறைதரப்பெற்றுத் தன்னம்மார்பணி யாக்கொள்சிந் தாமணி என்பது-முன்னொருகாலத்திற் கபிலமுனிவரிடத்துப் போந்ததேவேந்திரனுக்குச்செய்த விருந்துக்கு அவ்விந்திரன் உவந்து அம்முனிவரற்குப் பூஷணமாக வணியப்பெற்ற சிந்தாமணி.

ஐம்புலக் குறும்பொ ழித்தே யான்றவா லறிவன் கோயித்
தெம்பொரு டனைவ விர்றின் றபகரித் தனையித் தீங்கா
றும்பரோத் தெங்கோ வந்துன் னுயிர்தெறு மெனச்ச பித்து
வம்பவே கென்முன் னில்லே லெனமணி யொடும கன்று. (கஉ)

முனிவர னிட்ட சாப முனையென வளர வோர்பா
னனிவிருப் பெவையு மன்ன நன்மணி யுதவ வோர்பான்
மனமகிழ் வுற்றான் மன்னன் ‡மணியிழந் துழல்வி யாழு
மெனவுயர் கபிலன் றானு மயமபருந் துயரி னுழா. (கங)

வலிந்துதன் பொருள்கைக கொண்ட மன்னவ னெவ்வாற் றானு
நலிந்திட நினைந்தான் பளளி மறுசு துகெட் டுயிர்தது நன்மெய்
மெலிந்திடத் தவஞ்செய காலை மேருகு மாயா சத்தி
யலர்ந்தழ லுருவாய்த தோன்றி யறைந்திடுந் தவத்த னோறே. (கச)

முத்தொழில் புரிவோ ரானு முடிவுறு வரங்கொ ளிவ்வேந்
தித்தலத் தொழிதல் வேண்டின் விநாயகத் தேவிங் கெய்த
வித்தகத் தவஞ்செய் யென்றவ் விதியுநன் கியம்பி யேக
வுத்தம னவ்வா றேனோன் போமமற் றியற்ற வாங்கே. (கரு)

கலிப்பா

தேசவிர்மா மகுடமொடு திகழ்குழையு மணிவடமு
மாசகல்சீர் முக்கண்ணு நாற்கையு மங்கதமும்
பாசிழையா சித்திபுத்தி பாகமும்வாய்ந் தரியிவர்ந்து
நேசமுறத் தோன்றினனந் நீளிரவி னேரமயன். (கசு)

கத்தனுருக் கண்டிடலுங் கபிலமுனி மகிழ்ந்திறைஞ்சி
யத்தவென துறுகிளையோ டடியேனு முய்ந்தனனு
னித்தமுநின் னடிபோற்று நெறிநீங்கா தருள்கென்னச்
சித்தமகிழ்ந் திறைமுனிவ தெருமானின் னெடுந்தவத்தால் (கஎ)

நின்மனைப்போந் தனந்தேர்தி நினக்கிடர்செய் கணனென்னு
மன்னனையின் னேயட்டுன் மணிமீட்பா மெனக்கேட்டு
நன்மகிழ்வுற் றிருந்தானந் நாபதியோர் களுக்கண்டு
தன்னமர்தா தையையமைச்சர் தமைப்பிறரைத் தாவிக்கான் (கஅ)

---

‡மணியிழந் துழல்வியாழமென்-சேர்ந்ததை யிழந்து வருந்தும் சர்ப்பம் போல.

## அறுசீர்க்கழி நெடிலடி யாசிரியவிருத்தம்.

அந்திலன் னவர்வந் தெய்த வாசனுவர ளாக விழ்ந்து
சிந்தையா குலிந்தி ருந்தா னதுபொழு தபிசித் துப்போர்த்
தந்தையுற றைநயென் னென்னக் கபிலன்பாற் சாந்தோர் நாற்கை
மைந்தனென் முடிதுணிபபக கனுககண்டேன் மற்றந் நீர்மை. (கசு)

நுவலுமா றுமைய ழைத்தே னீண்டென நூல்வல் லோராய்த்
தவரவர்க் கேற்ற வண்ண மறைந்தன ரோர மைச்சன்
றவவலிக் கபிலற் கோற றகவெனக கனைன்கேட் டன்ன
பவநெறி யமர்கநெ ழும்பும் பான்மையிற் றீவி ரிந்தான். (உ0)

அறநெறி தவறுந் தானை யன்னதாச செயலை யோரா
விறனமிகு தனைய பார்ந்து விழிசிவந் தியமபு மைந
நிறையணி மௌலி விண்ணோர் நீள்பகை கொண்ட தன்றி
யுறுவர்தம பகையுங கொண்டா லுறுங்கன வபல மமா (உக)

ஆதலி னடன்மீக கொள்ளு மளவறு சேனை யோடு
போதலசெய் திடினும் வென்றி பொருந்திடாய விநைவி னந்
மாதவன் பானீ வவ்வு மணியினைக கொடுபோய் முன்னா
மேதக வளிததுப் பின்னர் வேண்டுகொள் ளவனை யென்றான் (உஉ)

இன்னணந் தாதை சாற்றும் வாய்மைய்ய யிறையுந் தேறு
தொன்னலர்க் காதி வையஞ் சுகமுற வாழ்வித் தோம்பு
மன்னனீ யேயா யிங்க ணிருப்பினு மானம் பொன்றிவ்
வுன்னுமை கொளேனெ னப்போர்க் குற்றன னனைய வேலை. (உ௩)

விருப்பொடு கபில மேலோன் விநாயகக் கடவு ளார்க்குத்
திருப்பளி யெழுசசிப் பூசை செய்திருந தானுக்கு ர் சிட்டா
தரிப்புறு தூரவோ யன்றான் றனிமணி பறிந்துப போன
யொருப்புறழ் திண்டோண் மன்னன் போர்க்குற்று னின்ப மென்றார்உச

முனிவரன் கேட்டொப் பில்லா முதல்வனு யிரகா மந்தாற்
றனிமலர் கொடுநாண், மீதர்ச் சனைசெய்து பூசை யாற்றி
யன்கவென் மணிக வர்ந்து மடவரு கொடியோன் கைகின்
றீனிடுத் தருளென் றேத்து மெல்லைவேந் தனுமங் கெய்ந்தான். (உரு)

[illegible] மெதிர்வா னைங்கைக் கடவுளுட் டுனலு மூழ்ந்தோர்க்
திண்மையல் ரடிதாழ்ந் தன்று விடமமர் சித்தி மாகங்

கணன்றுள் பெற்றுப் பல்வே றுபடை படைத்தம மன்னன்
றணிவில்சே னையின்வி டுத்தான் சார்தலு மனையான் பாலோர். (உகூ)

பலபல சேனை யோடும் படர்ந்து சபதங் கூறி
நவுரு தமர்செய் யேல்லை நாயகி படைமெ லிந்த
நிலைநுத றன்பா னின்றோர் திறலன்றேன் றிடுவா னுன்ன
வலியவோர் வீர னுமை யிலக்கனென் பவன்வந் தானால். (உஎ)

சித்திபால் வருவீ ரன்சென் றமைச்சரா தியர்தேர் மாக்கண்
மொய்த்திறத் தடர்த்தம் மன்சே யிருவரை மொய்ம்பிற் பற்றி
நித்தன்முன் னுய்த்தெந் தாயிக் கிருபமைந் தனைக்காத் தாள்வா
யத்தகு கணனும் வேந்தென் னுடைதீர்ந் தமரி யற்றுன். (உஅ)

ஆகையா லவனை நீயட் டடிநிழ லளித்தி வர்க்கவ்
வோகையா ரசளிப்பா யெனவிரந் தனனோர் கோட்டெம்
மேகனு மிசைய வேந்த னிகற்கெதிர்ந் தெம்மான் மின்னூர்
பாகனுய்ச் சிய மூரும் படிவனுய்த் தோற்றல் கண்டான். (உகூ)

எழுசீர்க்கழி நெடிலடி யாசிரியவிருத்தம்.

பண்டுசெய் தவத்தத் திருவுருக் கண்டும் †பால்வழி மறைத்தலிற் கபிலற், கண்டுணர் விலனுய்க் கருடனை நாகங் காதுமோ வேனிவற் கொணர்ந்தாய், துண்டமாக் குவனோர் கணைகொடிங் கென்றுன் குணக்குநாய் கடித்திடத் துணித, லுண்டுகொல் கணனே யெனத்தவன் சூளோ டுரைத்தலும் புழுங்கிய வுளத்தான். (கூ0)

வரிசிலை வளைத்தோர் சிலீமுகம் பவந்தீர் மாமுகத் திறைவனெற் றியினு, மிருகக மிரண்டு புயத்தினு மிரண்டு புதையிரு பதத்தினு மேவ, வெரிதரு கணைகள் குறியிழை யாதங் கேகிநீ ருயின வடலா, ரரியணை பகலா திருந்தவா றமல னனுப்பினன் றனதுகைம் மழுவே. (கூக)

அன்னது பரிதி பற்பல வொருங்கே யெழுந்தபோ லவிரொளி பரப்பித், துன்னல னுயிரைப் பொருக்கெனக் குடித்துத் துகளறு கங்கை தோய்ந்தெவர்க்கு, முன்னவன் காத்து மீண்டதங் கமரர் மொய்த்துநின் றலர்மழை பொழிந்தார், மன்னரு ளுலகுக் களித்தவற் றெழுவான் வருதல்போ லருணன்வந் துதித்தான். (கூஉ)

தந்தைபோர் திறந்த தனையனை நோக்கித் தனிவிறல் புற்மாற் றினனுய் வெந்தழற் பள்ளி யவனுடற் கிட்டு மீண்டுதன் வீடத்தமைர் தொளிசேர்

நந்தலில் சிந்தா மணியைக்கொண் டடைச்ச ரோடேநற் கபிலனுச்சிரமத் தெந்தைசந் நிதிவந் தடியின்வைத் திறைஞ்சி யென்னறு மறைகளாற் றுதித்து. (கக)

அறுசீர்க்கழி நெடிலடி யாசிரியவிருத்தம்.

கணமனைத் தினுக்கு மேலாங் கடவுளீ யென்ப தோராக்
கணமனிற் கெதிர்ந்து ஈய்ந்தான் கருணையங் கடலே யன்னன்
‡கணமனன் மணிநேரின்ன காதலர்க் கரச ளித்தங்
கணமனப் பரிவு நின்றாட் கண்ணெனக் குளவா மாறு. (கச)

வாமருள் கெனவி ரப்ப மதகரி முகத்தே ஹீவாதி
யாசெனு மபிசித் தோது முறையவந் தவன்சேய் சேய
ரிருவரு மவனோ டேக விடுத்தெழின் மணியை முன்னீத்
துாமிழந் திறைஞ்சி யேத்துங் கபிலனுக் குதவ வேற்று. (கரு)

முன்னவ னெந்தா ன்ன மணியென்பா லபக ரித்தோன்
றன்னைமாய்த் தித லாற்சிந் தாமணிப் பெயர் தாலத்தி
னின்னதா கவுமோர் பூணு யீதுநின் றிருமே னிக்கட்
டுன்னவு மருள்செய் வாயென் றிரந்தனன் சுமுக வள்ளல். (கசு)

எழுசீர்க்கழி நெடிலடி யாசிரியவிருத்தம்.

பணியெனக் கொளுமா றவன்பிரார்த் தித்த படிதிரு வுருவினச் சிந்தா, மணியினைத் தரித்தா னுதலாற் சிந்தா மணிவிநா யகன்றவக் கபிலன், றணிவின்மா மனைவந் தவதரித் ததனாற் கபிலன்றண் மலர்த்திரு முகநல், லணிதா வரலாற் சுமுகனென் றெவரு மறைந்தன ரவற்குமுப் பெயரே. (கஎ)

எண்சீர்க்கழி நெடிலடி யாசிரியவிருத்தம்.

தென்றமிழ்நாட் டரசனபி சித்தென் போன்சீர் சிறந்தமணி தரித்தவிநா யகனைப் போற்றித், தன்றிருமா நகரடைந்து பவுத்தி ரர்க்குத் தரணியளித் தினிதி ருந்தான் சுமுகவள்ள, னின்றகபி லனுக்கருள்செய் துருக்க ரந்தா னிகழ்த்துமிது நிற்கவினி யைங்கைப் பெம்மான், மன்றகஜா னனனுகி யுலகம் போற்ற வருமூன்று மவதாரத் திறன்வ குப்பாம்.

சிந்தாமணிவிநாயகன் திருவவதாரப்படல முற்றுப்பெற்றது.

ஆகப்படலம் (உ) க்குத் திருவிருத்தம். (சஎ)

---

‡கணமனன் மணிநேரின்ன காதலர்-அழகினால் நிலைபெற்ற நல்லகண் மணிபோன்ற புத்திரரிருவர்.

‡‡அபிசித்-கணவேந்தனது பிதாவாகிய வேந்தன்.

## கஜானன் றிருவவதாரப்படலம்.

### அறுசீர்க்கழி நெடிலடி யாசிரியவிருத்தம்.

முன்னொரு கற்பந் தன்னின் முளரியான் கொட்டா விப்பால்
வந்தனன் சிந்து ரப்பேர் மருவொரு புருடன் சென்னி
யைந்திரண் டோடு மன்று னழன்றெவர்த் தழுவி னூலும்
வெந்தவர் நீறு மாறு §விதியுழி வரம்பெற் றானால். (க)

பெற்றவ னவனி மேல்காற் பெற்றவன் வரஞ்சோ திப்பான்
மற்றவன் மாட்டு மன் னிக் கடல்களும் வறப்ப வானத்
துற்றபல் லுடுவு ந் சிந்த வுருத்தட்ட காசஞ் செய்தான்
முற்றுல களிப்பா னன்ன மூடனுட் கோனை நோக்கி. (உ)

எனதுட றழுவு தற்கோ வேடவிங் குற்றாய் நன்று
னினதுயிர் குடிப்பா னெந்தை நிருமல கணேசன் றோன்றி
மனுவென வுரைத்தே மால்வா ழிடம்புக்கவ் தியம்ப மால்கேட்
டுனியிதைம் முகந்தே வன்றி யொழிப்பதியா னெனுங்கால் வெய்யோன்

ஏலமா விடத்துப் போந்தா னிவற்கஞ்சித் திறலோய் நொய்ய
வாவிலை யொன்றிற் றங்கிக் காவல்செய் யரியான் போதன்
*காலிரு மூன்றுற் றூலுங் கரும்புளே றிடவுந் தாங்கா
வாலிதழ் மனைமேல் வைகு மெல்லியன் மறைக ளோதி. (ச)

ஆக்கல்செய் திடுவா னிவ்வா றலைபுன லனைய யாங்கண்
மேக்குய ரசல மன்ன நின்னொடு வெம்போ ராற்ற
வூக்கமெள் ளளவு மில்லை முயர்வரை வரையை நேர்ந்த
னீககமில் புகழே யன்றி மற்றென்னை நிகழ்த்து துங்கேள். (ரு)

உலகெலா மழிக்க வல்லா னுளனவ னிருபமோ வெளனிச்
சிலையவ னங்கை கொண்ட திகழ்கொடு மரமோ மேருங்
குலவிய யிடப்பா லுற்ற கோமளக் கொழுந்தா னோளா
மலைதரு புனல்வி மெய்யோ வன்னியா மின்னும் யாங்கள். (சா)

இருவரோங் கருக்கைப் பல்கா லிரிந்துளா னற்றன் மிக்கா
னொருவரு நிகரில லாதா னுவனுழை நீசென் றேங்கு
செருவினை விளைந்து வெற்றி பெற்றிடிற் றிசைகண் முற்றும்
பெருமைகொண் டாடு மென்னப் பிழைதழை மனச்சிந்தூரன் (எ)

---

§விதியுழி—பிரமதேவனிடத்து.
*காலிரு மூன்றுற் றூலுங் கரும்புள்—அறுகாலுடைய தாய்த்தீதஞ்செய்யுங்

அரிவிரி யுணாய னைத்து மமுதென மாந்தி வெள்ளி
வரையிறைப் போது பாய்ந்தாங் கமர்சிவை வதனங் கண்டிப்
புரையறு தேசி னாளைக் கோடுமென் றவணோர் புக்கான்
பரைபரி தயித்தி யோகத் துற்றமர் பாற்கீ தோறும். (௮)

கண்ணினு நகையி னானுங் காலினு ‡மொன்னார்க் காய்ந்த
வண்ணமேல் நினைத்தி யாணிப் பார்க்கரு ணீயோ கத்து
நண்ணுத லெற்றோ மென்ன நாதனும் விழித்தாங் குற்ற
வெண்ணலற் பொருவான் போந்தா னிரும்படை யாதி யோடும். (௯)

இன்னவேல் வைபிற்சிந் தூர னெம்பிராற் றழுவ நேர
வன்னபோ தைங்கை வள்ள லாங்கொரு மறையோன் போன்று
துன்னியோர் பாசு நாட்டித் துன்னல ளிரிவா னுற்ற
மின்னுவா ளனைய கூ.ங்கண் விமலையுள் ளுவகை பொங்கி. (௧௦)

ஆங்கவ்வே தியன்போன் றானை யாரைநீ புகறி யென்னத்
தீங்குநிற் கிழைப்பான் போந்த செறுநனைத் தெறுவா னன்னு
யீங்கொரு மகவாய் நின்பால் வருவனீ யஞ்ச லென்று
நீங்கினா னதன்பின் சிந்து ரப்பெய ரினனி லைத்தல். (௧௧)

மன்னுபல் லுயிர்க ளீதருன் வன்கையாற் றழுவி நீற்றிப்
பொன்னக ரத்தார்க் கூறு பொருத்தவந் திடலு மன்னார்
துன்னிநான் முகத்தோற் கோத வவணொடுந் தூய வேதாப்
பன்னுமைங் காப்புத் தேனைத் தியானித்துப் பரிசி னேடும். (௧௨)

வான்வளி யெரிநீர் வைய மதிதின காரன் மாவென்
றானவெண் வடிவ மாய்மண் ணாதிதத் துவங்க ளான்மாத்
தானுறப் புணர்த்தி ரண்டு வினையொப்பாஞ் சமையந் தன்று
ஞானமில் லாது சூட்டு முயர்கண பதியே யோலம். (௧௩)

என்றுதோத் திரிப்ப வோர்கோட் டிறையெதிர்ந் தஞ்ச லீர்றுந்
துன்றுதீ தொழிப்பச் சேயாய்ச் சிவைவயிற் றோன்று வோமென்
றன்றுமை திருக்க ருப்பத் தெய்தினா னாக வம்மை
நன்றமை பரியி லிப்போர் வனத்துநம் பாலோ டேய்ந்தாள். (௧௪)

இன்னண முமையாள் காவேட் டிருளையர் பாவ வாழ்நாண்
மூன்னவன் யோகில் வைக முந்தையின் மயேசு ரப்போர்

---

‡ஒன்னார்-மன்மதன், திரிபுரம், இயமன், ஆகிய இம்முப்பகைவர்.

பன்னுமோர் தருவன் றனு ரதமுனி பகர்சா பத்தான்
மன்னினன் வேழ மாயஃ தகலெல்லே வந்த டுப்ப. (கரு)

எழுசீர்க்கழி நெடிலடி யாசிரியவிருத்தம்.

தனைநிக ருமைவீற் றிருக்குமண் டபத்தைச் சார்ந்தொரு நாட்டைச் சாய்ப்பப், புனையிழை யஞ்சிப் பரமனுக் குரைத்தாள் பொள்ளெனக் கனன்றரைச் செருத்தே, யனையது சிவாய நமவெனு மனுச்சொற் றிறத் தலாற் கதியளித் தருந்தா, செனவத னுரித்துப் போர்த்துநல் லன்பிற் றென்றதன் சென்னிபூ சித்தான். (கசு)

மதகரி யுரிமெய் போர்த்ததாற் கிருத்தி வாசனென் னுமமூற் றுங்கே முதல்வியோ டமர்ந்தா னிதுநிற்க வொருபான் முகமுடைச் சிந்துர னோர்நாள், விதியொடச் சுதன்மற் றெவரு மென்றனக்கு வெரின்கொடுத் த வரென வவைக்கண், ணிதயிலான் மதயிக் குரைப்பவோர் வாக்கந் தரத் தெழுந் ததுமதி யில்லாய். (கஎ)

என்னைநீ செருக்கோ டியம்பினை சிவைபா லிபமுகக் கடவுடான் கருவாய், நின்னைமாய்த் திடவுற் றனனஃ துணர்தி யெனவவ னடுங்கி நீள் வனஞ்சென், றன்னையா முமைகண் வளர்தல்பார்த் தகட்டின் மருத் துரு வாயடைந் தாங்கண், மன்னிய கருவின் சிரமரிந் தகன்று விந்தமால் வரையினை யடுத்து. (கஅ)

நருமதை நதிபால் வைத்துட னகன்று னம்பிரான் சிரமுறு மிடத்துப் பெருகுசெம் புனல்செல் சூழலைச் சோண நதியெனப் பேசுவ ரன்ன, சிரமொடு புவனி குழிந்ததைக் கணேச குண்டமென் றியம்புவர் சிறைசார் வரையதிற் சரிந்திவ் வுலகெலாம் வணங்க விநாயக ருருவின்மன் னியதே.

இறைதிரு வுருவம் பெற்றவச் சுயம்பை யாவர்பூ சனைபுரிந் திடினு, மறமுத லன்கு பொருளையு மடைவ ரந்நதி படிந்தவர் விழைந்த, பெறுவர்சிந் தூரன்செய் யரியவிச் சூழ்ச்சி யவனுமெம் பிரானுமோர் குவர் பின், னிறைகரு வுயிர்த்தா ளுமைதலே தவிர்சேய் கயிலைவெற் பேகியந் நிலையே. (உ0)

ஆன்மகோ டிகட்கு மருள்விநா யகர்வே றம்பிகை கண்களித் திட வோர், பானெனுங் காம்பூண் படைதரித் திலங்கச் சித்திபுத் தியர்கள்பா லுறப்பஞ், சானன மிவர்ந்து தோன்றியா னன்று யனைத்துயிர் கட்குநின் றனக்குந், தினமோர் தருசிந் தூரனைத் தெறநின் றிருவயிற் றுதித்தன னென்று. (உக)

விண்டட னேயவ் வுருக்கரந் தேக விமலையுண் மகிழ்ந்தன ளெனினு, முண்டமற் றுதித்த கான்முளை தனைக்கண் டினைந்தனண் முதல்வனு முவப்புட், கொண்டமொழ் கினன்போன் றிருப்பமா லமரர் குழாங்கட்கு நந்தியம் துணர்த்த, வண்டரா தியர்வந் திறைஞ்சியம் மகப்பார்த் தலைகடல் வீழ்த் துமா றறைந்தார். (௨௨)

அன்னவர் தன்மையே தாமிகக் கனன்றச் சுறுத்தியவ் வருண்மகப் பார்த் தெம், முன்னவ சென்னி யின்றியீண் டுதித்த தெவனென முகுந்தன் மெய்க் காதி, சென்னியம் தற்றேர் சேய்வளர்ந் திடலெவ் வாறுபே தாயென்றான் சிறுவ, னென்னவோர்ந் தனைகொன் முத்தொழிற் கிறைக் கியா திருந்தெனின் றுயினென்மாலே. (௨௩)

அறுசீர்க்கழி நெடிலடி யாசிரியவிருத்தம்.

குறைமதி யுடைய வானோர் கூறிய நொப்ப நீயும்
பொறியிலார் போலீ தோத னன்றென்றான போதன் பின்ன
ரறிவினு ளறிவா யெல்லா மறிபவன் செவிவா யாதி
செறிதலை யிலாதி ருந்துஞ் செப்புவா னிம்த யற்கு. (௨௪)

†முந்தியாஞ் சிருட்டி தந்த முறைமையி னெவ்வா றெம்மைப்
புந்தியோ டன்பு பொங்கக் கண்டுநீ போற்றல் செய்தா
யந்தவா றுமைபா லும்வந் தவதரித் திடலா லின்றுஞ்
சிந்தையா குலம்விட் டோடத் தெரிசிக்கப் பெற்றாய் போதா. (௨௫)

வெய்யசிந் தூர னென்னி வீட்டிநல் லோரைக் காக்க
வையைபாற் றோன்றுற் றியார்க்கு மன்பனைப் போற்ற னன்கென்
றுய்வகை தெரிப்ப வீச னுவந்துபோற் றிபமு கத்துச்
செய்யதா னவன்வீழ் சென்னி நம்முருச் சேர்த்தற் கென்றே. (௨௬)

சிரமிலா துதித்தோ மென்று சிரந்தவிர் விதமுஞ் செப்பி
யருளமுன் னிறைவன் பூசை யாற்றுசென் னியுமாங் கெய்தித்
திருவுரு வொன்ற லான்மா வதனமுந் திகழ்முக் கண்ணும்
பரிவின்வாழ் சித்தி புத்தி பாகமுங் கொண்டு தோன்ற. (௨௭)

---

†முந்தியாஞ் சிருட்டி தந்த முறைமை-என்பது வக்கிரதுண்டவிநாயகராய், பிரமா, விஷ்ணு, ருத்திரர், என்னு மூவரையும்படைத்துப் பிரமாவுக்குச் சிருஷ்டிவிதியை, சித்தி, புத்தி, என்னுந் தமது சத்திகளால், தெரிவித்தகாலவிலைமையாம்.

அன்னமூர்த் தங்கண் ணேம்ப சாதிய ருவகை பொங்கி
முன்னரோந் தரித்த வேத மனுக்களான முறையி னேத்தி
யின்னநா டொட்டெங் கோவே கயானன னெனும்பே ரிற்கு
மன்னிவிக் கினங்கள் யார்க்கும் வராவணா மருளுந் தேவாய். (உ௮)

இம்பரிற் சிறக்க வென்ன விரந்தன ருமையா ளோடு
நம்பனு முத்தி சித்தி நல்குவான் விழைந்த நீவான்
றம்பதந் தொழுவார்க் கின்ன றவிர்த்துமே லையர்க்குந் தந்து
மும்பர்சேர் விக்கி னேச னெனவுரைத் துபாசித் தாரால். (உ௯)

கண்ணுதல் பூசை யாற்றிக் களித்தநா ளிரவி சிங்க
நண்ணிய மதிமுன் பக்கச் சதுர்த்தியா மற்று லந்நாள்
விண்ணவர் மண்ணோ ரெல்லாம் விநாயக சதுர்த்தி யென்று
திண்ணமா வருடந் தோறும் பூசிக்கச் சிறந்த தாமால். (௩0)

திருத்தமா மிந்நாட் பூசை செய்பவர் பேறெண் ணின்றாற்
பொருத்தமின் மனச்சிந் தூரன் புவனிபாற் சுமுக வள்ள
லொருத்தன்மா முகங்கொண் டிவ்வா றுதித்தமர்ந் திடறெ ரிந்து
‡கருத்தறை போய்ப்பின் றேறிக் கயிலையம பொருப்பி னேறி. (௩௧)

தரியல னெனக்கென் றீங்கே தங்கிய சிறுக னிள்கைக்
கரிமுகன் றலைது மித்துக் கடிதுகொண் டேக யானோ
ரரியென வந்தே னென்னத் தன்புக ழுரைத்து மோதிப்
பொரவழைத் திடலு மெந்தை பொள்ளென வவன்முன் றோன்றி. (௩உ)

அச்சுறு †தறைகூய் நின்றோ யரிமுதற் றேவர் போலுன்
§பிச்சுளத் தெமையு மெண்ணிப் பேசினை யாமே நின்னை
முச்சகம் பழிச்ச வின்னே முடிக்குதுங் காண்டி யென்ன
விச்சுவ ரூபங் காட்டி வீட்டிமுத் தியுமீய்ந் தானால். (௩௩)

மலர்மழை பொழிந்தார் வானோர் விகடன்றோல் வடிவின் மன்னி
நலமலி சூல மீச னல்கவேற் றலரோன் றண்பூச்
சலபதி பாச மற்றோர் தத்தங்கைப் பொருடந் தேத்தக்
குலிசனன் விருத்த கீதம் புரியக்கொண் டுருக்க ரந்தான். (௩௪)

‡கருத்தறைபோதல்—விவேகங்கெடல்.
†அறைகூவல்—போர்க்கழைத்தல்.
§பிச்சுளம்—மயக்கம்பொருந்திய மனம்.

இந்தமான் மியம்பு கன்றோ ரொழின்மக மின்பம் வெற்றி
புந்தியின் விழைந்த யாவும் பொருந்துவ ரீது நிற்க
வெந்தைவிக் கினரா சப்பே ரியைநான்கா மவதா ரத்தி
னுந்துமான் மியத்தை யன்றோ னருள்கொடிங் குரைக்க லுற்றும். (௩௫)

கஜானனன் றிருவவதாரப்படல முற்றுப்பெற்றது.

ஆகபடலம் (௩) க்குத் திருவிருத்தம். (அ௰)

## விக்கினராசன் றிருவவதாரப்படலம்.

அறுசீர்க்கழி நெடிலடி யாசிரியவிருத்தம்.

பனிவளை விந்த மென்னப் பகரிரு வரைக்கு நாப்ப
ணனிமலர்ப் பொழில்சூ ழேம வதியென்றோர் நகராள் வேந்தன்
றனியபி நந்த னன்றன் றகவினோர் மகமி யற்ற
வனையனை மகத்தி னோடு மழிப்பவா னவர்கோ னுன்னு. (௧)

உன்னரும் விக்கி னங்க ளுளுற்றிடுங் கால ரூபி
தன்னையங் கேவ வன்னோன் சார்ந்தபி நந்த னப்பேர்
மன்னொடு மகம ழித்து மாயவே டங்கொண் டாங்காங்
கின்னல்செய் தேகி வேள்வி யியற்றுவோ ரையுங்கெ டுத்தான். (௨)

பாருளார் கால ரூபி செயல்கண்டு பதைப தைப்பச்
சீருளார் பலரு மாற்று மகமெலாஞ் சிதைந்த வாற்றா
லருளா ராய வேத முனிவரோ ரிடத்து நண்ணி
யேருளார் விகடன் பொற்றா ளிணைதுணை யென்னத் தேறி. (௩)

ஆதியாய் நடுவா யீறு யவையொரு மூன்று நீத்த
சோதியாய் நானு வாகித் தோன்றுயிர்க் குயிரா யார்க்கும்
பேதியா யன்ப ருள்ளம் பெருந்திருக் கோயி லாக்கொண்
ணீதியாய் புவிதாங் கொண்ணு விக்கின நீத்தல் வேண்டும். (௪)

பாவலர் மாலை நின்பொற் பதத்தினில் வேய்ந்து வாழ்த்து
நாவலர் தமக்கு வேண்டு நலநிலத் தருளிச் செம்பொற்
பூவடி நிழலு நல்கும் புராதன தேவர்க் கெல்லாந்
தேவவை யகங்கொ ளாத விக்கினந் தீர்த்தல் வேண்டும். (௫)

எனத்துதித் துருக வாங்கே யேரம்பப் பெருமான் றோன்றி
யனைத்திட ரொழியின் றாய்நி னமர்தரு *வரேணி யன்றன்

*வரேணியன்—ஓரரசன்.

மனைக்கண்வந் தவத ரித்து மாற்றுது நமது புன்கண்
ணுனித்தமா தவத்தி சென்ன னோவகன் றிருந்தா ரிப்பால். (௬)

கலிநிலைத்துறை.

முடிவி லாதவின் பருளிய வேரம்ப மூர்த்தி
நெடிய மாதவ நிரப்பிய வரேணியன் மனைவி
படியி லோவியப் பாவைபுட் பகையெனும் பெயராண்
மடியி லார்கருப் புகவவண் மகவுயிர்த் திடலும். (௭)

உயிர்த்த சேயுரு மறைந்திய முகத்தொடா யுதநான
கயிரா ந கைகளுஞ் சிறியதா ளொடுபெருந் வயிறு
மியற்ப டந்திகழ் வடிவுமுற் றிருத்தல்கண் டிருந்தோர்
பயிர்ப்பி னஞ்சியோ டினரன்னை.. கவன்றுளம் பதைத்தாள். (௮)

அறுசீர்க்கழி நெடிலடி யாசிரியவிருத்தம்.

அன்னதம் மடந்தை கேள்வ னறிந்¶துவ ளகத்துச் சென்று
தன்னிக ரில்லா முன்னோன் றயங்கெழி லுருவு கண்டு
மின்னன்மேல் விளக்கு மிச்சே யெனவுளத் தெண்ணி வீரந்
துன்னுபல் வீரர்க் கூய்க்கைக் கொடுத்திது சொல்ல லுற்றான். (௯)

திடவுட லுடையீ ரின்ன சேயையிவ் விரவே சோலை
யடர்மடு வரையிட் டொல்லை மீளுமி னென்ன வன்னோர்
கடகரி முகத்தே வாஞ்சேய் தனைக்கைக்கொண் டேகிப் பாசத்
தொடர்பொழி பராசு வப்பேர்த் தொன்முனி சாலைப் பாங்கர். (௧௦)

நன்றுறு மடுத்தீ ரத்து நறுந்தளிர் மிசைக் கிடத்திச்
சென்றன ரிறைவ னைக்கை நீண்டமுன் னவர்செய் நோன்பு
மன்றநன் மனைவி பாற்றன் மனையவ தரித்துந் தீங்கா
மென்றிட வரோணி யன்முன் பிழைத்தபா வமுமென் னென்கேன். (௧௧)

தளிரணை மிசைக்கி டந்த தம்பிரான் றமது மெய்யி
னொளிசிறி திலகச் செய்ய வுதயவர் கோடி யொன்றாய்
வெளியில்வந் ததுபோ லெங்கும் வெயில்விரிந் திருளி ரிந்த
நளினம்வாய் மலர்ந்த வாம்ப னகைமுகங் குவிந்த வன்றே. (௧௨)

அற்புத மடைந்தா ரும்ப ராரக விடத்தார் தங்கள்
பொற்பமை யிரதி போன்ற பூவையர் சேக்கை நீத்தங்

---

¶உவளகம்-அரசன்றேவியிருப்பிடம்.

கெற்பொழு தகன்ற தென்னு வெழுந்தனர் பொழில்வாழ் புட்கள்
பற்பல விருக மெல்லாம் படர்ந்தன விரைக டேர்வான். (கங)

பராசுவ முனியுஞ் சந்தி பண்ணுதற் கமையம் வந்த
திராவகன் றதுநன் கென்ன வெழுந்துதண் மடுப்பாங் குற்றங்
கராவணி சடில னென்னை யாள்விநா யகத்தே வைங்கைப்
புராதனன் றளிரின் மீது பொருந்தல்கண் ணாகக் கண்டான். (கச)

ஆடின னடுத்து விமந்த னருளுரு நோக்கி நோக்கிப்
பாடின னின்ப வெள்ளம் படிந்தனன் மறைக ளொன்குந்
தேடியுங் காணொ ணாத சிற்பர னுன்முன் செய்த
நீடிய தவத்தின் றேய்ந்தா னெனவெடுத் தேகி நேரே. (கரு)

பொருவிறன் மனைப்பு குந்து புலர்பொழு தாகக் கற்பின்
திருமனை யவள்கை யீய்ந்தியாஞ் செய்தவப் பேற்று விச்சேய்
வருதல்கா ணெனக்க ளிப்பின் வாங்கிமா முகத்தே வென்றோர்ந்
துருகலுந் தனஞ்சு ரப்ப வூட்டின ளிவனேன் பென்னே. (கசு)

வேறு.

இவ்விதமாய்ப் பராசுவனு முனிமனைவி வற்சலைபா லெழிற்க ணேசன்,
செவ்விதமர்ந் திடமுன்னு ளிமவரைப்பாற் சவுபரிப்பேர் முனிவன் சீர்
சான், மௌவனகை மனோமயையாந் துணையொடுவாழ் பவன்புனற்றேய்
வான்செல் லோர்கா, லவ்விசும்பார் கிரவுஞ்ச னெனுமொருகந் தருவனவ
ளழகாற் போர்ந்து. (கஎ)

கரம்வலிப்ப வவள்வெருளுங் காலையினீர் குடைந்துசெல்கா லவன்
கண் டக்கந், தருவனைமிக் குருத்தருங்கற் புடையவள்கை நீண்டினை
தகவித் தீங்கா, விருணிறமு டிகமாகென் றிட்டனன்வெஞ் [illegible]ன்
னிடருற் றெந்தாய், தெரிதலிலேன் கரம்வலித்த பிழை [illegible]
கெனவணக்கஞ் செய்ய மேலோன். (கஅ)

காந்தருவர் காவலனே நீர்வெம்மை தீதண்மை காணு மேனு, நாந்
தருவெஞ் சாபமொழி யாதுசர ணடைந்ததனு னவில்கேம் பினவட்,
சாந்தமுனி பராசுவர்தம் மனைவயினே ரம்பனெழுந் தருள்வா னன்றே,
கேந்துநல்வா கனமாயுய் குவையென்று னகைதவ்வா றெய்து மேல்லை. (ககூ)

துன்னலின்மு டிகமாகிப் பராசுவப்பேர் முனிமனைக்கட் சுலவிப் பல்
வே, றின்னல்வினைத் திடத்தவத்தோன் வருந்தலுமெம் பெருமான்கண்
டினைய லீது, தன்னையடக் குவலென்க்கைப் பாசம்விடுத் தாருசெலுங்

தான மெங்கு, முன்னைவினை போற்றொடர்வித் தீர்த்தல்செய வயர்ந்தெங் தை முன்வந் தன்றே. (௨0)

அடியார்தம் பவந்தொலைக்கும் விநாயகன்சன் னிதியினிவ்வா றடைந்த வாகு, படியார விறைஞ்சித்தன் வரலாறு சொலக்கேட்டெம் பரியா கென்று, முடியார்பொன் னிதழியந்தார்க் கணேசனதி னிவர்ந்துலக முற்று ஞ் சென்று, கடிதாங்குற் றதின்வலிதீர்த் தலும்பரா சுவமுனிவன் களிப் பிற் போற்றி. (௨௧)

எழுசீர்க்கழி நெடிலடி யாசிரியவிருத்தம்.

பொக்குறு மனத்து விக்கின னென்போன் புவிக்கெலாந் துயர்செய் தின் றனனவ், விக்கினந் தவிர்த்தா னையவென் றிரந்தான் வேண்டுகால் வசிட்டரா தியர்வந், தக்கொடி யவன்றீங் கியம்பலும் விமல னபயமீய்ந் தாகிவர்ந் தங்கை, தொக்கவர் குசத்தை விடுத்துவிக் கினனைக் கொணர் கென்றான் றாய்த்தவர் களிப்ப. (௨௨)

அறுசீர்க்கழி நெடிலடி யாசிரியவிருத்தம்.

அங்குச முலக மெல்லா மஞ்சவல் லேகி வீரந்
தங்குவிக் கினனைப் பற்றித் தம்பிரா னெதிரே யுய்ப்ப
வெங்கணு நிறையே சம்பன் மூடிகத் திருந்த வாறே
யங்கணின் றழலெ ழுப்பார்த் தனுமவ னமர்கு றித்தே. (௨௩)

விண்ணவர் முனிவர் மற்றோர் வெருவப்பல் லுருக்கொண் டார்ப்போ
டண்மி வெஞ் செயலி ழைத்தா னவையெலா மையன் மாய்ப்ப
நண்ணும்விக் கினனின் னுனை நயந்தன்றி வாழே னென்னு
வெண்ணிமுன் னுருவுற் றேத்தி யிகல்செய்தே னெவர்க்கு நிற்கும். (௨௪)

அடிகளே பொறுத்தாட் கொள்ள வேண்டுமென் றிரப்ப வையன்
கொடியவ னமைத்து திப்போர் கும்பிடு வோர்நி னைப்போர்
புடையுறே லேனோர்க் கின்னல் புரிந்தா சியற்றின் றேனீ
கெடுவையென் றருள வவ்வா றியற்றுவ லெனக்கி ளத்தி. (௨௫)

எழுசீர்க்கழி நெடிலடி யாசிரியவிருத்தம்.

அனுதினின் பெயரென் பெயரொடேய்ந் திருப்ப வருளென விக்கின ராச, விநாயகப் பெயரோன் றுறுகவெற் கின்று முதலென்றான் விமலன் விக்கினனுந், தனுதுள மகிழ்ந்து பூசைசெய் தகன்றான் றண்மலர் தூர்த் தனர் வானோர், ‡மனுதியால் வழிபா டியற்றிவேண் டியபல் வரங்கள் பெற் றனர்தவ முனிவர். (௨௬)

---

‡மனுதியால்—மனம், வாக்கு, காயம் இம்மூன்றாலும்.

மன்னவர் பெருமா னெனும்வரே ணியனீ தறிந்துதன் மனையொடு போந்து, தன்னிக ருயர்வொன் றிலாதவ னடிக டாழ்ந்துநல் வரங்கொ டங் ககன்றான், முன்னவன் றலைமைத் தவப்பரா சுவற்கு முலையமு தருத்திய வனைக்கு, மன்னிய வரமீய்ந் துலகுய வுயர்வான் சிவபுரம் வந் துவீற் றிருந்தான். (உஎ)

சரணம்வந் தடைநந்தோர் யாவரா யினுமன் னவர்பிழை தவிர்த்தருள் செய்யும், வரதன்விக் கினனென் பவன்புரி யரந்தை மாய்த்தவன் பெய ருந்தன் பெயர்முன், விரவவைத் துலகந் துதிசெய விதித்த திருமயூ ரே சனுய்க் கமலா, சுரனுயிர் தொலைப்ப வருமவ தார மைந்தினை யினிச்சொ ல லுற்றும். (உஅ)

விக்கினராசன் றிருவவதாரப்படல முற்றுப்பெற்றது.
ஆகப்படலம் (ச) க்குத் திருவிருத்தம். (௱அ)

## மயூரேசன் றிருவவதாரப்படலம்.

எழுசீர்க்கழி நெடிலடி யாசிரியவிருத்தம்.

சிந்தையான் மொழியா லளக்கொணுப் பரமன் றிருவருள் வலியி னன் மலரோன், முந்தொரு கற்பத் தரவணை யுறங்கு முன்னவ னுந்தி வந் துதித்துப், புந்தியிற் றெளிவு பெறவரு மறையும் புராணமும் பொருவில்சாத் திரமு, மிந்துசே கரன்பாற் றெளிந்துல கனைத்து மினி தினிற் பண்டுபோற் படைத்தான். (க)

அன்னமா மறையா திகள்பொறித் திட்ட வரியபுத் தகத்தைநான் முகத்தோ, னன்னிய தியிற்பூ சனைபுரிந் திருக்கு நாளசு ரருக்குநற் சுரர்க்கு, மன்னுபோர் மூள வும்பர்தோற் றலினுன் மறைமனு வினைப்படை யாக்கிப், பன்னிய பிரமாத் திரத்தொடுய்த் தசுரர் படையெலாந் துரந்து வென் றனரால். (உ)

வலியமுி தருவர் வெள்கின ரிருக்கு நாளவர் மரபின்வெண் சங்கொத், திலகுமெய் யொருவன் பிறந்தனன் சங்கா சுரனெனும் பெயரின னிவ னிற், பலமிகு கமலா சுரனென்றோ ரிளவ றேன்றிமுன் னவன்பணிப் படிவாழ்ந், துலவல்கண் டிவர்பா லவுணர்யா வரும்வந் தும்பரான் மெலிந் தன முரத்தீர். (௩)

நமைபடர் புலவோர் தமக்கடு படைத்தோன் றிடநவின் மறைமனு வமைசெய்புத் தகங்க ளயன்புரி பூசை யகத்துள வவைகவர்ந்

திடனின், றிமையவர் கெடுவ ரென்னுஞ் சங்கா சுரனிள வலைவிட வவன்செல், சமையம்வே தாயோ குழந்தல்கண் *டருவிற் றனிச்சுவ டிகளெலாங் கவர்ந்து. (ச)

அறுசீர்க்கழி நெடிலடி யாசிரியவிருத்தம்.

சென்றவன் முன்னோன் முன்னர்ச் செறித்திட வுயப்பி னோக்கி
யன்றவன் கடலுட காவ விட்டன னவற்றை யற்று
னன்றருள் வேத நீந் நானிலத் துறுமை யாலே
துன்றுநல் ஞானி னுற்றார் தொல்லுல கத்தோ ரெல்லாம். (ரு)

விரியிதழ் மறைவா ழண்ணல் விழித்துழ் பூசை யாற்று
மரியபுந் தகங்கள் காணு ‡தலமந்து கயிலை யெய்தி
வரியா வணியெம் பெம்மான் மலரடி யேத்தி யும்பர்
தரியல னிழைந்த யாவுந் தளர்வொடு சாற்ற வெந்தை. (சு)

கண்படை நீங்கி மாயன் கயவருண் முன்னோன் றன்னைத்
திண்படை கொடுப நீத்துச் சிறந்தநின் சுவடி நல்கி
மண்படு துயா முற்று மாற்றிடு மதற்கு முன்னர்
விண்பட மலைக்கும் பின்னோன் றனைவிளித் திடுதல் வேண்டும். (எ)

அன்னவன் வலியோன் றேவ ரனைவரு மொருங்கு கூடித்
துன்னமர் புரிந்திட் டாலுந் தொலைவுறு னவனி ருப்பின்
முன்னவன் மாய்த ருனு மரிதுமுண் டகத்தோ யற்றான்
மன்னருள் புரியே ரம்ப வள்ளலைப் பணிதி யாயின் (அ)

தீதியற் றிடும்பின் னோனைத் தெறுதருந் திண்ண மென்று
வேதனை விடுப்ப வன்னோன் விதிமுறை தவறா தைங்கைப்
போதக முகத்து வள்ளல் புனைகழல் கருதிப் பூசை
காதலி னியற்ற நாளுங் கணேசனின் னருள்செய் தாங்கே. (கூ)

பாசமங் குசந்தண் கஞ்சம் பாசமர் நாற்கை யோடு
தேசவிர் சித்தி புத்தி சிறந்திரு பாலும் வைக
மாசறு வயமா லூர்ந்து வரவான் பார்த்துள் ளூறு
நேசமே லெழவா னந்த நேமியுண் மூழ்கி யிப்பால். (கo)

---

* அருவில் --உருவந்தோன்றுவண்ணம்புகுந்து.

கண்ணினீர் வார நெஞ்சங் கரையவெண் கரமுங் கூப்பி
மண்ணிடை வீழ்ந்தெ ழானுக் கிடப்பமா முகத்து வள்ள
றண்ணருள் சுரந்த யன்றன் றளிர்க்கரம் பிடித்தெ ழுப்பிப்
பண்ணிறை மறையோ னுள்ளப் பரிவுதேர்ந் தருளிற் பன்னும். (கக)

அருமைசான் மறைபு ராணஞ் சாத்திர மாமிம் மூன்றும்
பெருகொளி தருநம் மூன்று விழியிலும் பிறந்த தாகு
மருவளர் கமலத் தோய்மற் றவையெலா மாண்ட தாகக்
கருதியுள் ளினையன் முன்போற் கவினுற விளங்கச் செய்வேம். (கஉ)

பண்ணவர் முனிவ ரேனைப் பாருளா ரெவரு மின்ன
னண்ணவெவ் வினைக ளாற்றி நலன்றராக் கமல னென்னுந்
திண்ணிய வசுர னாவி செருநிலத் தியாமே கொள்வேங்
கண்ணனெம் மருளாற் சங்கா சுரனுயிர் காதும் பின்னர். (கந)

[illegible]ருரு மறையோ னுமி யிருமறை யாதி ¶கோசம்
வென்றிகொ டோளிட் டோது மாயிரம் வியன்மா ணாக்கர்
துன்றவந் தாத்தி னின்றுஞ் சுந்தராச் சிரம நோக்கி
வன்றனை யிழிந்தா னெண்ணில் வான்சுடர் வருத லேய்ப்ப. (கச)

சுந்தராச் சிரமத் துள்ள தொன்மைமா தவர்க ளெல்லா
மிந்தவா னொளியா தென்னா வுளத்திறும் பூது பூத்து
வந்தமா மறையோன் பாதம் வணங்கினின் றுய்ந்தே மெந்தா
யெந்தவூர் துமக்கு நாம மெவன்வந்த தெவன்கொ லென்றார். (கரு)

பலவினை தவிர்த்தா னங்கைப் பனவனார் கருணை கூர்ந்து
தவவலி யுடையீ ரெம்மைச் சாற்றுமல் லால ரென்ன
நவையறு மறையவ் வாறே யுலகமு நவிறல் செய்யு
மிவணரு மறைக ளோதன் மகங்களாற் றிடமி யற்கை. (கசு)

நித்தியத் தோடு நைமித் தியங்களு நிகழ்த லின்றி
முத்தலத் தோரு நோயுண் மூழ்கலோர்ந் தியாமுன் சொன்ன
வித்தையத் தனையுஞ் செவ்வே பொறித்தல்செய் துணர்வின் மிக்க
புத்தகங் கொணர்ந்தா மேற்றுப் பொருடெளி வுறவே கற்று. (கஎ)

பண்டுபோற் கிரியை யாவும் பயிற்றியின் புற்று வாழ்மின்
மண்டுசீ $ருறையு ளொன்று வளங்குமி னெமக்கிங் கென்று

---

¶ கோசம்--புத்தகம்.

$ உறையுள்-வீடு.

ரண்டரேத் தெம்பிரானு ரருளுநா திலைக்கொண் டாங்கட்
கொண்டதோ ருறையு ணல்கிக் கோதம் ஞதி மேலோர். (௧௯)

அருணிறை மறைகேட் டையந் தகன்றனர் சில்லோர் சில்லோர்
தெருணிறை புராண முற்றுஞ் செவிக்கமு தெனக்கேட் டுள்ளத்
திருணிறை மயக்க நீத்தா ரிணையிலா கமங்கேட் டுண்மைப்
பொருணிரு ணயமோர்ந் தாங்கே புலப் பகை வென்றார் சில்லோர். (௧௯)

இன்னண மனைத்துங் கேட்டுஞ் சிந்தித்துந் தெளிந்து மின்பிற்
றுன்னுதம் மாணக் கர்க்குத் துகளறப் பயிற்று வித்துந்
தென்னிறை கிரியை யாவும் பண்டுபோற் செய்து வந்தார்
முன்னவன் முன்வந் தெய்தின் மு வுருட் பொருளொன் றுண்டே. (௨௦)

வேறு.

வண்டுளருந் தண்டுளவ மணிமார்ப னுந்திவந்த மலரோன் முன்ன, ரண்டர்பிரான் றனக்குரைத்த முதனூலை நியதிமுட்டா தருச்சித் தேத்திக், கொண்டிருந்த தொழிந்ததென மனக்கவலை கொண்டிருந்துங் குலவு வேத, மெண்டிசையுந் தழைந்ததெனவோர்ந் தின்புற்றே ரம்பனடி யிறைஞ்சி வாழ்ந்தான். (௨௧)

தெள்ளுமறை முதற்றொன்னூ னெறியுலகி லிவ்வாறு செறிதலோக் கிக், கள்ளவுளக் கமலனெனுந் தீயவுணன் றனதுமுன்னோன் கழற்கா ருழ்ந்து, முள்ளளையம் புயத்துறையுந் திசைமுகதமே தான் சுவடியெலா முனர்யான் சென்று, கொள்ளைகொடு வந்ததனாற் பயனென்னை குணன் சிறிதுங் கொண்டேட மல்லேம். (௨௨)

சுந்தரநல் லாச்சிரமத் தொருமறையோன் சுவடியொடு தோன்றி யாங் கே, யந்தணர்தம் முளமகிழ மறைமுதனூற் பொருள்விரித்தா னவ்வூக் கத்தாற், சந்தமறை நெறியொழுக்க மாச்சிரமம் வருணமுறை தவறா தெங்கும், பந்தமுற வேவளர்ந்த மகநிமிர்ந்த வமராவிப் பாகம் பெற்றார்.

இனியெவரு நமைமதியார் வடுவிளைத்தே மொன்றின்முயன் றிடை யிற் றேற்ற, றனிவலியோ வெனவயர்விற் சாற்றலுமுத் தோனிளை யோய் தளர னம்பா, னனிதிறனே மியனுதி யமரரும்பொர்க் குன்னார் கைப் பலியே னுண்கொள், பணவனெதிர் பவனேபோ யவற்படுத்*தி லேகமெனும் பகுதி யாவும். (௨௩)

* இலேகம்-எழுதியபுத்தகம்.

## வேறு.

கவர்ந்திவண் மீடி யென்னக் கழறின னாகப் பின்னோ
னுவந்திருந் தும்பை சூடி யொருவயப் புரவி வெண்மீ
திவர்ந்தொலி கடல்போற் றானை யெம்மருங் கினுஞ்சூழ் போதத்
தவம்பயி லுரவோர் வைகுஞ் சுந்தராச் சிரமஞ் சார்ந்தான். (௨௫)

அன்னவன் வருதல் காயி லாணியா லறிஞர் கேட்டு
முன்னவன் மலர்த்தாள் போற்றி முகிழ்த்தகை சிரமே லேற்றித்
தன்னிக ரில்லாத் தீய தருவனுங் கமல னிங்கண்
டுன்னின னெனமையு டற்குத் தொகையறு தானை யோடும். (௨௬)

எவரினி யஞ்ச லென்றெம் மிருமபகை நீக்கு விப்பா
ரெவர்சரண் சார்வேஞ் சாரா திரியவோர் வழியுங் காணே
மெவர்வலி யவுண னேடிங் கெதிர்த்தவ னுயிரை யுண்பா
ரொவருமின் றழியு நாள்வந் தியைந்ததென் றினைந்து நிற்ப. (௨௭)

வரந்தரு பனவ மூர்த்தி மறுகுமா தவரை நோக்கி
யிரங்கலி ரொவரு நம்பின் னிருமினத் தருவன் றன்னைப்
பரந்தவெஞ் சேனை யோடும் படுத்துநஞ் சேவ கத்தி
னுரந்தனை நுமக்கின் றேகாட் டுதுமென்றா னங்கவ் வேலை. (௨௮)

எண்டவிர் படைஞர் தாமவ் விறையரு ளாற்¶றூ சோடு
மிண்டிவந் திறைஞ்சி யாஞ்செய் பணியெவ னெனமிக் கார்ப்பக்
†கண்டக வவுணன் கண்டு கனன்றுதன் படையை யுய்த்தான்
றிண்டிறற் படையி ரண்டுஞ் செருச்செயத் தொடங்க லுற்ற. (௨௯)

தேர்கரி பரிந டாய்வெஞ் செருச்செயும் வேலை வஞ்சன்
பேர்படு சேனை யஞ்சிப் பிறகிட வழன்றன் னொண்கைக்
கூரிய கட்கங் கொண்டெங் கோன்படை கலைத்து ரந்தே
யாருயிர்க் குயிரா னானை யடுத்தடு படைவிட் டார்த்தான். (௩௰)

விடுபடை யனைத்து நூறி விடையவன் படையை யெம்மான்
றொடுவிஃ தடுமென் றஞ்சித் தோற்றுமா யையினாற் றீயோன்
புடைபடு தன்னூர் புக்கான் பொன்றுசே னையையெ ழுப்பி
மிடல்கொடு மீண்டா னெந்தை சுந்தராச் சிரம மேவ. (௩௧)

---

¶ தூசு--படைவகுப்பு.
† கண்டகவவுணன்--கொடியவனான அசுரன்.

சிந்தூர முகக்கோன் பாற்செய் தியன்போர் பார்த்த 0தித
சிந்தூர முகத்தல் போன்மேற் சிந்துவின் மூழ்கி னு*னென்
றந்தவென் றடர்த்த தீதிற் றூசிறத் தெங்க ணும்ப
ரந்தவென் றடுத்து ளைத்தாங் கடர்ந்தது விசும்பிற் கங்குல். (கஉ)

அடுகளத் தொளித்தூர் புக்க வவுணனை முன்னோன் பார்த்தென்
மிடலெனின் றுளிசெய்த் தோர்பசர் விழினுமாங் கதினின் போல்வா
ருடனுதித் திடுவ ரன்ன தோர்ந்திலே மீண்டா யின்னும்
புடைபடை தொகச்செல் போர்மேற் பொருளெனன் மான மன்றோ. (கக)

எழுசீர்க்கழி நெடிலடி யாசிரியவிருத்தம்.

எனவவ னிசைந்து புலர்பொழு தெதிர்ப்பார்த் திருப்பயா வையு முண ரெந்தை, மனமகிழ் தவத்தோர்ப் பார்த்தற வீர்கம் மலேதலின் மலைந்து செல் லவுணன், சினமிகுந் தினியேற் றுலகெலா மளிப்பச் செல்வனன் ன வற்றெற வெமக்கோர், புனைமயிற் பரிதோன் றிடமகம் புரிவல் பொருந் ‡துப கரணநீர் கொணர்மின். (கச)

என்றருந் திருவாய் மலர்தலு மவர்வேண் டியவனைத் தினையுமாங் குதவத், தன்றுணை ஞானங் கிரியையி னுருக்கொள் சத்தியாஞ் சித்தி புத் திகள்வந், தொன்றவுன் னுதலும் மனையவர்போத வொளிர்மகம் விதி வழி புரிந்தா, னன்றருண் மகமு மதனுள பொருள்கள் யாவுமா மொரு தனி நாதன். (கரு)

அறுசீர்க்கழி நெடிலடி யாசிரியவிருத்தம்.

பாசமார் வேள்வி முற்றப் பசியவெற் பென்ன வாங்கோர்
கேகய மெழுந்தே யண்டங் கிழிபட வுரத்துக் கூவி
நாகமன் னவனுஞ் சேட னடுத்தலை நெரிய மண்ணில்
வாகுறு கால்கண் மாறி மாறிவைத் தாடிற் றன்றே. (கசு)

வருமயூ ரத்தி வர்ந்தான் வள்ளலன் றதனு ணும
மொருமயூ ரேச னென்ன வுரைத்தன ருறுவ ரின்ன
திருமலி நாமஞ் சொன்னோர் சிந்தித்தோர் திருவி னெய்வர்
தருணமற் றூகக் கிளைச் சாகாத் துதித்தான் வெய்யோன். (கஎ)

---

0 தித சிந்தூர முகத்தல்போல--திதைச்சிந்தத் தக்கவலிமைப் பாட்டை முகந்து கொள்ளுதல் போல

*என்று-சூரியன்

‡உபகரணம்-அங்கமானபொருள்

அன்னபோ தவுணன் முன்போ லளவறு தானை யோடு
தன்னவே ரம்பன் பாதத் துணையடி தொழுது புத்தி
யென்னுமா தைய யான்சென் றவுணனோ டிகற்போ ராற்றி
வென்னிட வென்றி கொண்டு மீள்வலெற் கருள்க வென்றாள். (௩௯)

அவ்வண மருளப் புத்தி யமர்க்களஞ் சென்று வேண்டுந்
தெவ்வடு படைசி ருட்டி செய்துய்ப்ப விருதி றத்தும்
வெவ்விய வீரர் பாய்மா வேழந்தே ராதி யாகத்
தவ்வலில் வகைந ' ாத்திச் சாரிசென் றமர்செய் தாரால். (௩௰)

செருமிக மேல்வை புத்தி சேனைவாள் வயவ ராற்று
தொருவிகின் றிடுத னோக்கி யுடவிழி சிவந்தா ளாங்கே
பொருபடை தரித்தோர் வீர னுதித்தவ டிணைத்தாள் போற்றி
யுருமைமா தவர்வாழ் புண்யாச் சிரமஞ்செ றைங்கைப் புத்தேள். (௪௰)

சீரடி தொழக்கண் டெந்தை திருவுள ந்து தொண்டர்
போர்மலி வினைய னந்தம் புதல்வனு மவனு னுங்கட்
கார்தரு மிலாப மிக்கா மிலாபனென் றழைமி னென்ன
வாரமுற் றழைத்துத் தாழ்ந்தார் மாதவ ரதன்பி னெங்கோன். (௪௧)

தன்னரும் புதல்வன் றன்னைத் தரையினின் றெழச்செய் தேபோர்க்
கின்னினிச் செலக்கு றிப்ப வேகினு னேக லோடு
நன்னர்மா தவரோத் தைங்கை நாதன்றன் சிறுவ னுட
லொன்னலர் முனையிற் காண்டு மென்றுட னேகி னன்பின் (௪௨)

அரிகரி குழாத்துட் புக்காங் கடுகளத் தடுத்த வீரன்
வரிசிலை குனித்து வாளி மழைசொரி தொறுமெ திர்ந்த
தரியலன் சேனை யாவுந் தளர்ந்துட லழிய வாவி
யெரியுமிழ் செங்கட் கூற்றா ரிம்மெனப் புகுந்த மாந்த (௪௩)

முன்னவ னருள்சே யிவ்வா றெதிர்படை முழுது மூறத்
துன்னல னுய சங்கா சுரன்றனக் கிளவ னோக்கி
யுன்னருந் திறத்தின் னூனை யுபாயத்தாற் படுத்தல் வேண்டு
மென்னவங் குன்னி மோகாத் திரமெடுத் துபயோ கித்தான். (௪௪)

மொய்த்தவப் படையாற் றூனை யனைத்தொடு முனிவர் தாமு
மெய்த்துவெஞ் சோகத் தேய்ந்தா ரின்னதீர்த் தருளே ரம்ப
மெய்த்தரு மூர்த்தி தானு மனையமா தவர்போன் மேவ
வத்திற லூறியா தாட விலர்புனப் படையை மீறி. (௪௫)

வானவ ரெவரு மெச்ச வஞ்சமர் புரியா நிற்பத்
தானவன் விடம்போற் சீறிச் சரமழை பொழிந்தா னன்ன
மானமிக் கிருவர் தாமும் வருகணை விலக்கிப் பின்னுஞ்
சோனையிற் சொரிவார் சாரி சுற்றுவா ரவனி நின்றும். (சசு)

விண்ணுல காதி சேடன் வீழ்பில மாதி கீழ்மே
லெண்ணறு தானந் தோறு மேன்றிரு மூன்று திங்க
ளண்ணள வுடற்றத் தீயோ னலிதளர் வொழித்தேய் வேனென்
றுண்ணினைந் தேகி ஞானம் தொத்திலா பனுமீ ளுற்றான். (சஎ)

மீண்டவன் கடைநாட் சீவர் சுழுத்தியில் வீழ்தன் மான
வாண்டறி வொருமற் றோரு மறிவொரீஇக் கிடத்தல் கண்ணுற்
காண்டது மிஃதென் னென்னக் கலங்கலு ரெய்திப் பின்னு
மீண்டரு மருந்தொன் றுண்டே யெனத்தெளிந் தியற்ற லுற்றான். (சஅ)

வெவ்வினை தவிர்த்தா ளெந்தை விநாயகர் திருநா மத்தை
யொவ்வவா றெட்டு வட்ட முளங்கொடொண் ணீறு வீசித்
திவ்விய மனுவை வீழ்ந்து சாம்பினர் செவிதோ றோத
வவ்வழி யெம்மா னன்றி யனைவரு மெழுந்தா ரன்றே. (சகூ)

அனையவ ரெழலுந் தாதை யெழாமைகண் டிலாப வண்ண
வினையது சரத்தா லன்றென் பிழையினேய் வுற்ற தாமென்
றுனியழன் மூட்டிப் பாயப் புகவுவா முகத்தே மைந்த
நினதுளஞ் சோதித் தேனற் பத்தியி னிறைந்தோ னீயே. (ருய)

என்றெழுந் தருமை மைந்தற் கின்னருள் செய்தே னோர்க்கு
நன்றுபா லித்தா னீது நிற்கமுன் னவியாப் போரிற்
றன்றளர் வகற்றச் சென்ற தருவன்மொய்ம் புற்றுச் சேனை
துன்றவெய் திடலு முத்தி தோய்விப்பா னினைந்தன் னோன்முன். (ருக)

மரகத மலைநேர் மஞ்ஞை யிவர்ந்தைங்கை வாத னிற்பக்
கருணைவெற் பினைக்கண் ணுற்ற கருதலன் றோன்று லென்முன்
0 குருவிவென் னிவர்ந்தி வர்ந்தாய் கொலைபயி லெனத யிற்கிங்
கினையுனை யிடுவே னென்ன வெந்தையுங் கனன்று கூறும். (ருஉ)

வக்கிர துண்ட ஞனே மூவரை வருத்தல் செய்வான்
பொக்கமில் கணமன் னுவி போக்கிடச் சமுக ஞனேஞ்

0 குருவிவென்னிவர்ந்து-மயிலென்னும் ஓர்பறவையின்து முது கின்மேலேறி

செக்கரார் நிறச்சிந் தூரத் தெறக்கயா னனனென் றேனை
விக்கினன் கொடுமை மாய்க்க விக்கின ராச னானேம். (ருங)

இன்றுன துயிரை வௌவ விம்மயூ ரேச னானே
மொன்றுநம் மவதா ரப்பாங் குணர்கிலை யுணர்வி றீயோய்
நன்றறி யெனவே $வீற்று நாண்முகி லெனப்பொ ழிந்து
நின்றன னவற்றோ டன்னோன் சேனையுஞ் சிதைத்தா னித்தன். (ருச)

கறைதிரை நதியா வோடிக் கடல்புகக் கழுகு சேனம்
பிறையெயிற் றலகை யுண்ணப் பிணக்குவை படலாற் சேனை
பொறியிலி யழன்று தெய்வப் படைதொட்டா னவற்றைப் போக்கி
யிறைவனோர் தண்டன் றனெஞ் சிடையுய்த்தா னிழியசெந்நீர். (ருரு)

இருநிலத் திழிந்த செந்நீர்த் துளிதொறு நின்றின் னோன்றோல்
வரமுறு செயலால் வீரர் வடிவமா தியிற்ற னைப்போற்
கனையில ருதித்தார் வானோர் கண்டாங் கையிற்சு ழன்று
ரரியயன் மகவா னஞ்சி யம்பொனோங் கலினொ ளித்தார். (ருசு)

எழுசீர்க்கழி நெடிலடி யாசிரியவிருத்தம்.

அரந்தைசெய் யவுண னொருவனுற் றலுக்காற் றுதயா மவனைநே ரநேகர்,
பரந்தன னெனினென் செய்துமென் றுள்ளம் பதைபதைத் தலமா லுற்றார்,
பெருந்தவர் பசிய பிணிமுக மூர்ந்தார்க் கிஃதொரு பெரிதுகொ லென்ன,
நிரந்தர மகிழ்ந்தான் பரமன்மற் றெவரோ நினையவு நிகழவும் வலரோ. (ருஎ)

உலகொரு மூன்று முய்யுமா றெம்மா னும்பரோ டிமபரும் வியக்கும்,
வலிமலி மயிலைத் திசையெலாங் கடவி வளந்தரு தசக்கரங் களினு, மலகி
லம் பகழி மழைபொழிந் துதித்த வசுரனைத் தெறுந்தொறு மவர்தங்,
தொலைவில்செல் குருதித் துளிகளி னின்றுந் தொகையறு தருவர்வந் துதி
த்தார். (ருஅ)

உதித்தவர் தமையுந் தெறத்தெறப் பின்னு மொழிவிலா தெழுவர்பல்
வீரர், மதிப்பற வவுண வெள்ளமிவ் வாறு வருதலை நதனைதொழு வோர்க்
கே, கதித்திற மருடே வருளிலா பன்றன் கண்டுமுன் றனையனை மாராய்,
விதித்திடுஞ் சித்தி புத்திக டன்பால் விளங்குற வுளத்திடை நினைந்தான்.

அறுசீர்க்கழி நெடிலடி யாசிரியவிருத்தம்.

அன்னவ ரிருவர் தாமு மாங்குவந் தொன்பான் கோடி
பன்னருந்திறத்தினோங்கு பூதரைப் படைத்துவிட்டா

---

$வீற்றுநாண்முகிலென-கற்பாந்தகாலத்துப்பொழியுஞ் சத்த மேகம்போல.

ரின்னர்பல் கசுரர் தம்மை யெடுத்துவாய் மடுத்து மண்ணிற்
றுன்னுசோ ரியையு நக்கத் தொலைவுற்று ருதிப்போ ரெல்லாம். (சுய)

சாலநா ளிழைத்த தூய தவத்தினும் பெருஞ்செல் வத்தை
ஞாலமீ தறஞ்செய் யாது நழுவவிட் டிடுவார் மான
மேலோநாட் டவத்தான் வாணுள் விளைந்ததை யோம்பா தந்தோ
மூலகா ரணற்ப ஸைகத்து ¶முடிக்குநா ளடுத்த தீயோர். (சுக)

தன்னருந் தளமு மேகத் தாங்குகைப் படையு மேக
வுன்னரும் வரமு மேக வொருவனாய் நின்று னன்னான்
மன்னுயிர் தனது செந்தா மரையடி புகவெம் மான்பின்
கொன்னவி றிரிசூ லத்தாற் றடிந்துமுட் கூறு கண்டான். (சுஉ)

மருமல ரிறைத்தார் வானோர் மாதவர் தொழுது நின்று
ரரிமுத லமரர் போந்தாங் கமலன்சீர் பரச லுற்றார்
பொருவினன் முகனு ரன்பிற் பூசை செய் தனனவ் வேலை
காகநீர் கவிழ்ந்தோ ராருய்க் கதழ்ந்தவ னோடிற் றன்றே. (சுந)

ஓடுநீ ணதியி னுடி யுறுவா ராரா தித்தார்
நீடுவான் கருணை பூத்து நின்மலன் மகிழ்ந்தெ வர்க்குஞ்
சேடுசேர் வரந்தந் திந்தத் திருநதி நதிகட் கெல்லாம்
பீடுசான் றெமக்கு ரித்தாய்ப் பிறங்குமிங் கமர்வோ மென்றும். (சுச)

என்னலுங் கமலத் தோனோர் நிகேதன மியற்றி விக்கத்
தன்னிக ரில்லா னங்கட் டங்கின னினைய வாற்று
லந்நதி படிந்தெம் மானை யருச்சித்தோர் தருப்ப ணாதி
துன்னுவித் தவர்சேய் செல்வம் சுகமுற்றுண் டமா ராவார். (சுரு)

வருமயூ ரேச னுய வணமிஃ தவனே பின்னர்
முருகுலாங் கொன்றை சூடு முக்கணர் வாம பாகம்
பிரிவுறு வுமையாட் கேமம் பெருகவோர் மகவாய்த் தோன்றிப்
பொருவிலா மஞ்ஞை யூர்ந்த புகழினி யுரைக்க லுற்றும். (சுசா)

மயூரேசன்றிருவவதாரப்படலமுற்றுப்பெற்றது.

ஆகப்படலம் ௫-க்குத்திரு விருத்தம். (ளஎயச)



¶முடிக்குநாள்-மயூரேசமூர்த்தியால் தான்முடிவடையப்பெறுங்காலம்.

# பிந்தியமயூரேசன் றிருவவதாரப்படலம்.

அறுசீர்க்கழி நெடிலடி யாசிரியவிருத்தம்.

மைக்கனந் தவழ்கா வோங்கு மைதல தேய மன்னன்
சக்கர பாணி யென்போன் றழைதரு கற்பி னல்லா
ளுக்கிரை யோடு செங்கோ லோச்சிமண் காக்கு நாளவ்
விக்கன மொழிமா தீன்ற மகவெலா மிறத்தல் காணு. (க)

பலபரி காரஞ் செய்தும் பயனின்றி வனத்துச் சேற
லலமெனத் துணியு மேல்வை நற்றவச் சவுன கப்போர்க்
குலமுனி வரத்தாழ்ந் துள்ளக் குறையுரைத் தலுங்கேட் டேந்தால்
கலைமதி முடியோன் வாழ்மண் டலத்தனுங் கதிரோன் றன்னை. (உ)

நன்மையிற் பூசை செய்யின் மகவுண்டா மெனநவின்று
ன்னனகட் டுரைக்கொண்டன் பார்ந்திறை பூசை செய்நாண்
மன்னொளி பரப்பா தித்தன் மகிழ்நனு யுருக்கொண் டன்ன
மின்னிடை பள்ளி கொள்ளும் வேலையிற் கனவிற் போந்து. (௩)

கோங்கரும் பெழில்க வற்றுங் குவிமுலை நலந்தோய்ந் தேக
வாங்கவள் கருப்ப முற்று ளவ்வழி யகட்டார் வெம்மை
நீங்கிடச் சிந்து வென்னு நெடுநதிக் கரைப்பாற் சென்று
பாங்கிய ரொடும்வாழ் நாளொன் பான்மதி செலச்சே யீன்றாள். (௪)

மடமயி றருசேய் கையில் வன்றிறற் சூல நேமி
யுடன்விழி மூன்று மாக விருத்தல்கண் டன்று ளோடும்
புடையமர் பாங்கி மாரும் பொருக்கென வெருண்டி ருப்பக்
குடதிசைத் தலைவ னங்கோ ரந்தண னுருக்கொண் டெய்தி. (௫)

சாற்றுசேய் தனைக்கைக் கொண்டு சக்கர பாணி யென்னு
மாற்றலி ருதைக் கீய வாங்கிநற் சாத காதி
யாற்றுவித் துவப்பி னுமஞ் சிந்துவென் றழைத்து வையம்
போற்றவை கினன்ப யந்த புதல்வனும் விறன்மீக் கொண்டான். (௬)

வேறு.

அனையன் செயல்கண் டிவன்சுரர்க்கோ ரரியென் றெண்ணிப் புகர்வேண்டு
மனுவஞ் செவியுய்த் தானைமுன்னி வனத்தி னேற்பான் விடுப்ப வவன்
பனியென் றாழ்மற் றெனைத்துமொன்றுப் பருவ மீரா யிரந்தவஞ்செய்
தினைய வீசன் றோன்றிவிரும் பெல்லா வரமு நல்கிப்பின். (எ)

பாமே யாய தலைமையுளா னருளே யிசைந்த வடிவமுளான்
றேமே றிதழி முடியுடையான் சிறுகண் வேழ முகமுடையான்
ரூமே தினியுற் றெதிரினல்லாற் றனுவும் வாமு மழியாயென்
றேமே லருளி யுருக்காந்தா னிப்பே றடைந்து மிறந்தனனால். (அ)

ஏழுசீர்க்கழி நெடிலடி யாசிரியவிருத்தம்.

இத்தகு வரங்கள் பெற்றசிந் துவுமீண் டெழிறிகழ் கண்டக புரத்துற், றொத்தசீர்த் துக்கை தனைமணந் துயர்க வுத்துவன் மித்திர னமைச்சா, வைத்தக னிலத்தா ரசுரரா தியரை வலிதின்வென் றும்பரை வெளவி, மெய்த்தகு சுரரோ டரியையுஞ் சிறையின் வீக்கினன் கொடியவன் வீரம்.

அழிவில்சீர் வேத யாதிநூல் கலையா றகன்மடிக் கடலினுய்த்தமார்; குழுவெலா மிறைஞ்சத் தன்னைநேர்த் துருக்கள் குயிற்றியீய்ந் தனன் முற சறைவித், திழிதொழு வினும்வே றியற்றின னுற்று திமையவர் குருவையுற் றெந்தாய், பழிபடு செயறீர்ந் துய்யுமா றெங்ஙன் பகரென விறைஞ்சலும் பாரா. (ய)

ஒண்ணிட ரனைத்துந் தெறும்விநா யகனை யுன்னியா ராதிமி னிவி, றெண்ணியாங் தெய்து மெனவவன் மொழிந்தாங் கியற்றினர் புகர்முகத் திறையோர்ந், தண்ணன்மா மடங்க விவர்ந்திரு மருங்கு மணியிழைச் சித்திபுத் திகளு, நண்ணவந் துமைசே யாகிநுந் தெவ்வை நலிக்குது மெனச்சுரர் மகிழ்ந்தார். (யக)

சிந்துசெய் துயரா லிரிந்தமா தவத்தோர் சிலர்திரி சந்திவைப் பிருந்து, கந்தரங் கறுத்த முதல்வனை யுளத்துக் கருதிநோற் றனரவர்க் கிரங்கி, யிந்துசே கரன்வெற் பரசியோ டெருதூர்ந் தெதிர்ந்தவ ருளாவினு யருள்வா, னந்திலாங் கியோகத் தமர்ந்தனன் மலைமா தையுநீஇ யெம்பிரா றபணிந்தே. (யஉ)

அறுசீர்க்கழி நெடிலடி யாசிரியவிருத்தம்.

நினையும்யோ கினர்க்கு நல்கு நிமலநீ யோகு முப்பென்
னெனவிஃ தரிய மன்*மந் தணமென்று னற்றே லெற்கு
மனையது தெளிய நல்கென் றிடவறைந் தோரொ ழுத்துட்
கனிவினோர் வித்தா னீரா றுண்டதைக் கணித்து நோற்றுள்.
மலைமக டிருமுன் னங்கை வள்ளலம் புயன்மா லீச
னலர்திரு முகங்கண் மூன்றும் வலமிட நடுவாக் கண்க

---

*மந்தணம்—இரகசியம்

ளிலகவே ழாக்கை யாறு வெலிகுமுத் தலைவேல் சங்கங்
கொலைமழு வக்க மாலை குண்டிகை யாறுந் தாங்கி. (௧௪)

வெண்ணிற முடைய ராய்வெள் விடையிவர்ந் தெதிர்நிற் பக்கண்
டெண்ணிறை யுவப்பி னோக்கி யொருவநின் பாலன் பென்று
நண்ணவெற் கருளென் றேத்த நயந்துநின் மகவாய் வந்தா
றெண்ணுசிந் துவைக்காய் வாமென் றிசைத்தகன் றனன் பிராட்டி. (௧௫)

உற்றவிப் பான்மை யெங்கைக் கோதிவாழ் தனுஞ்ச னூர்த்தி
பெற்றநாள் வரக்க ணேச னுருப்பிரு துவியி னாக்கி
முற்றளி யோடு பூசை முடித்தன ளதற்கு வந்தே
மற்றவ னெங்குந் தானு மருவுபே ரொளியாய் நின்றான். (௧௬)

நிற்றலு முமையா ளஞ்ச நிருமல னுறுப்பொவ் வொன்றுஞ்
சொற்றலுக் கொண்ணு வெண்ணந் துலங்கிடக் கொண்டா னாக
மற்றதன் னவள்கண் டைய வொருமக வாகி நீயிங்
குற்றிடல் வேண்டு மென்ன விரந்தன ளுவந்தெம் மானும். (௧௭)

மூவிரு கரமு மூன்று விழியும்வெண் ணிறமு முத்துக்
கோவையார்ந் திலகு மார்புங் குலவவோர் மகவ தாகித்
தேவிமுன் னின்றான் கண்டு திருவுள மகிழ்ந்தெ டுத்தே
யாவிநா யகன்றி ருக்கை யீய்ந்துதன் னங்கை யேற்று. (௧௮)

குளிர்புன லாட்டி யன்பு கூட்டித்தன் முலைப்பா லூட்டிக்
களிமிக விருந்தா ளாகக் கணங்கம்வா னறநீர் முற்றுந்
தெளிவுற வசந்தம் வீசத் தீய்ந்தநீ டருக்க ளெல்லாந்
துளிருறக் கறவை நீத்த சுரபிகள் கறப்ப வாக. (௧௯)

மூவுல கத்தி னோர்க்கு முடிவுறு மின்பந் தானு
மேவின வுருமே றென்ன விண்டுதுந் துபிக ளார்த்த
தேவர்நன் னிமித்தங் கண்டார் சிந்துநன் னிமித்தங் கண்டா
னோவிது பெரிதே யைய னுடலொவ் வொன்று மாயின். (௨0)

கண்ட@வுற் பாதத் தாலாங் காரியந் தேற வுன்னி
யண்டனாத் தலையிட் டாளு மடற்சிந்து வொற்றர்க் கூவித்
தெண்டிரை யுவரி ஞாலஞ் சென்றுசென் றதிச யங்க
ளுண்டெனி லறிந்து வம்மி னொல்லையி னெனவி டுத்தான். (௨௧)

அன்னவொற் றுவர்தஞ் செய்கை யறைதும்பின் வனத்தி னேற்ற
மன்னுமா தவரில் லோடும் வந்தா னுமைசே யாய

@ உற்பாதம்-துன்னிமித்தம்.

தன்னிக ரில்லான் பாதந் தாழ்ந்திறைஞ் சித்தி ருப்பேர்
பன்னினர் கணேச னென்னப் பரிவினற் றுக வோர்நாள்.

எழுசீர்க்கழி நெடிலடி யாசிரியவிருத்தம்.

அங்குயர் மரீசி முனிவரன் கணேச னடிதொழச் சென்றக வேலவை, தங்குமா தவரன் னவற்பணிந் தெமக்கோர் தளர்வுறு வகையுளை யெனவத், துங்கமா முனிவிக் கினந்தவி ரிறைபார்ப் பதிக்கொரு சுத னெனத் தோன்றி, யிங்கிருத் தவினென் ளார்ச்சியா யினுமவ் விறைமகிழ் கவசமொன் றுரைப்பன். (உ௩)

முதலுகத் தினிற்றோள் பத்துருப் பொன்மை முடங்குளை வாகன மிரண்டா, முதயு ... றுரு வெண்மை நொறின்மயில் வாகன மூன்றும், விதயுகத் தினிற்றோ ளுன்குருச் செம்மை மூடிகம் வாகனம் விரிநாற், பதயுகத் தினிற்றோ ளிரண்டுருத் தூமம் பாய்பரி வாகனமாகும். (உ௪)

இவ்வடை வினின்மா முகப்பிரான் வடிவுள் ளிருத்தியே யோகசாதனத்தாற், கவ்வையில் சிகையை விநாயகன் முடியை மகோற்கடன் கவின்றிகழ் நுதலை, யொவ்வுகா சிபன்வின் னிகர்புருவத்தை மகோதரன் னொளிர்தரு விழியைத், தெவ்வடு பால சந்திர னிதழைக் கெஜமுகன் செவ்விய நாவை.

உயர்கணக் கிரீட ஞுடியைக் கிரிசை சுதனுவந் தோதிய வாக்கைச், செயவிநா யகனன் னகையினைச் சிறந்த துன்முகன் கேள்விசால் செவியை, மயர்வறு பாச பாணிநா சியைச்சிந் திதார்த்தன்மா மதிநிகர் முகத்தை, யியல்கரு ணேசன் கழுத்தினைக் கணேச னிரும்புயத் தைக்கந்த பூர்வன். உ௫

முலையைவிக் கினவி நாசன்முன் னிதயந் தனைக்கண நாதன்மொய் வயிற்றை, நிலை செயே ரம்ப னேரிரு புறத்தைத் தராதர னிகழ்மிருட் டத்தை, யலைவறு சீர்விக் கினகர னிலிங்கத் தினைவியாட் பூடண னுங்கே புலனிலாக் குயத்தை வக்கிர துண்டன்சகனத்தை யனபன்புன் றொடையை

மங்களமூர்த்தி யிருமுழந் தாளை மகாபுத்தி வனசநேர் பதத்தைச், சங்கையி லேக தந்தன்றிண் காத்தைச் சார்ந்தகிப் பிரப்பிர சாத, னங்கையை யாசா பூரகன் விரலைப் பதுமவர்த் தனனணி நகத்தை, யிங்கித மருளும் விநாயகன் காக்க வியலுஞா னங்கல்வி மானம். (உ௬)

குலமதி தானந் தவம்புகழ் மெய்ம்மை கொழுநிதி தானிய மனுட்டி, பிலகுசேய் மனைநட் போடொற் கதியு மினியசர் வாயுதன் மேன்மை,

மலிபவுத் திரா தியவினை யனைத்து மாமயூ ரேசனுள் ளுயினை, நலமருள் கபில னுற்படை யதனை விகடன்வே தாளமோ கினியே. (உசு)

பிறவுயிர் களினுல் வருந்துயர் பற்பல் பெயருறு நோய்களு மணுகா, திறவுயர் பாசாங் குசதரன் காக்க வேய்ந்திடு நன்பகற் போது, மறமலி யேக தந்தனற் பொழுது மற்றிரு சந்தியு மாளுத், திறன்மலி தருவிக் கினகிரு துப்போர்ச் செம்மறண் ணருளொடுங் காக்க.* (கூய)

இந்திரன் றிசைபுத் தீசன்றீந் திசைசித் தீசனந் தகன்றிசை விணைப்ப, வந்தவி ருமாபுத் திரன்வரு நிருதி திசைகணே சுரன்வரு ணன்போற், றந்திசை விக்கி னவர்த்தனன் பவனன் றிசைகெச கன்னனூர் நிதிக்கோன், றந்திசை நிதிப னினியவீ சானன் றிசையீச நந்தனன் காக்க. (கூக)

என்றுயி ருடல்பஃ தஞ்செ யனலந்தீ திடம்பொழு தனைத்தினுங் காப்பான், மன்றநா டொறுமுப் போதுமவ்விறையை வழுத்தலா மிக்கவ *சத்தா, னன்றறி முனிவீர் போற்றுமி னிடர்போ நலமுறுஞ் சரதமீ தொழுக்கன், பொன்று மற்றவனை யன்றியார் செயினு மெண்ணியாங் குறுவரொன் றகன்றுன். (கூஉ)

அறுசீர்க்கழி நெடிலடி யாசிரியவிருத்தம்.

செப்புமீ திருக்கச் சிந்து செலுத்துதூ துவரொங் கெங்குந்
தப்புறு தேகிப் பின்னர்த் திரிசந்தித் தலஞ்சார்ந் தாங்கே
யெப்புவ னத்து மென்று மறியா விவ்வதி சயந்தேர்ந்
தப்பரி சொல்லை போய்த்தம் மரசனுக் கறையலுற்றார். (கூகூ)

செருவிரும் பிறைவ வண்சீர்த் திரிசந்தி வனமென் றென்றுங்
கிருவரூந் துருவ நீண்டோ னிமமலை வல்லி யோடும்
பொருவருந் தவத்தோர் பூதர் போற்றவாழ் கின்று னன்றி
யொருபெரும் புதுமை மேலு முண்டஃ துரைத்து மாதோ. (கூச)

கண்ணக னுலகின் றேம்புங் கவுரிநோன் பியற்றி னென்னற்
றண்மதி வாரத் துற்ற சதுர்த்தி *வை காசி நாளி
லெண்ணிலக் கனஞ்சிங் கங்கோ ளெழிற்சுதி னத்த வட்கோர்
விண்ணவர் புகழ்ந்தி றைஞ்சும் விமலநந் தனன்றோன் றுற்றுன். (கூரு)

---

§ஒழுக்கன் பொன்றுமற்றவனையன் றியார் செயினும் என்பது—பொருந்திய ஒழுக்கமும் அன்பும் இல்லாதவர் மிக்கதகுதியுடைய வராயினும் அவருக் கின்றி பொருந்திய ஒழுக்கமும் அன்பும் உடையவர் எளியதகுதியுடையவராயினும் அவருக்குப்பயன் படுமென்பதுகருத்து.

* வைகாசிநாள்-விசாகநட்சத்திரம்.

கண்ணொரு மூன்று நீண்ட கரங்களோ ராறும் வெள்ளை
வண்ணமு மாகத் தோன்றம் மகற்குப்பேர் கணேச னென்னத்
தண்ணளி சுரக்கும் வேத முனிவரர் சாற்றி யெண்டோ
ளண்ணலின் வணங்கு இன்று ரன்பின்முப் போது மென்றார் (கசு)

ஒற்றுரை கேட்ட சிந்து வுமாபதி திருவாக் கான்முன்
சொற்ற தோர்ந் தெமையித் தோன்ற றுலைக்கும்போன் மெனவுட் கொ
ள்கால், வெற்றிமல் இவனே நின்னைவிட்டிடு மெனவோர் வாக்கு,
மற்றவ னஞ்சுமாறு வானினின் றெழுந்த தன்றே. (கஎ)

அன்னசொற் கேட்டுச் செந்தீ யழன்றெனக் கனன்றிச் சேயை
யின்னினிப் படுத்து மீள்வ லெனவெழத் தடுத்த மைச்சர்
மன்னவர் மகவைக் காய்தன் முறையன்று மாயை வல்ல
துன்னெறி யசுர ராலே தொலைந்தல்பல பாகு மென்றார். (கஅ)

மந்திர ருரையான் மாயை வல்லபல் லவுணர்க் கூவி
நந்தவில் பொன்பூ ணுடை நனியளித் துய்ப்பித் தானீ
ரைந்ததன் மேலு மாம்யோ சனையெல்லை பருத்தோங் கன்று
ரிந்துசே கான்சேய் முன்ன ரெய்தினு ரிறப்ப தோரார் (கக)

எழுசீர்க்கழி நெடிலடி யாசிரியவிருத்தம்.

கிருத்திர னெனும்பேர் தரித்தவோ ரசுரன் கழுகதாக் கிளர்சிறை பரப்பு, மருத்தினுல் வரைக ணடுக்குறத் தருக்கள் வன்றரை சாய்ந்தி டத் துகள்வான், பொருத்திட வெழுந்து விண்படர்ந் துமையாண் முன்றிலிற் பூம்புன லாட்டி, யிருத்திய மகவை யிம்மென வீழா வெடுத்திரு விசும்பிடைப் பறந்தான். (சய)

அடிகண்மார் காணு வரற்றியேங் குற்று ரடன்மிகு பூதர்க டலைவ, ரிடியென முழங்கி விசும்பிடைப் பாய்ந்தா ரிதன்முனங் கணேசனு மிளஞ் சேய், கொடியபுட் களத்தைப் பிடித்திருங் கரத்து நெரிந்துமீண் டுலக னைத் தீன்ற, துடியிடை யமலை மடிமிசை யிருந்த தொல்லுரு வொடு பிறர் காண.

பாரிலவ் வசுர னிறந்துவீழ்ந் தனன்வீழ் பரப்பதீ னைந்தியோ சனைத் தா, யோர்தரு தருக்க ளொடும்பிதிர் வுற்ற திம்மெய்யும் மாயையும் வல்ல, சூரியொன் னலனைப் பிறந்தமூன் றுநாட் குழவிபோய் முடித்ததிண் டென்றுற், போதி சயந்தா னிதனினு முண்டே யெனப்பெருந் தவர்மகிழ்ந் திருந்தார்

பக*ரிரு திங்க டொட்டுப் பத்தெனுந் திங்கள் காறுந்
தகுவர்க ளெலிக ளாயுஞ் சாற்றுமார்ச் சால மாயு
மிகறரு புலத்தை வெல்லு மிருந்தவர் சிறுன்போ லாயு
நகைமலர் கனிகாய் பிஞ்சார் நச்சுமா மரம தாயும். (௬௩)

மகபதி மனைபோ லாயும் வலிமிகு கமட மாயும்
பகலவ னிவுளி யென்னப் பாய்பரி யாயு நஞ்ச
மிகுகனி தருவோ னுயும் வீங்குட லுக மாயும்
புகர்முகற் செகுப்பான் போந்து பொன்றினர் புகலற் பாற்றே. (௬௪)

எழுசீர்க்கழி நெடிலடி யாசிரியவிருத்தம்.

பதினொரு மதியிற் பழமறை முனிவர் பாவையர் புடைதொறும பொருளக், கதியெவ ரெவர்க்குந் தருமொரு முதலாங் கணேசநா மதனிசசேயை, மதிநுத விமவா னொருமக ளிருகை வாரிவைத் தலர்செறி பொழிலை வரய்ப், புதுமலர் பறித்துத் தென்றலி னுலாவப் போயினு ளாயிடை மாதோ. (௬௫)

அருத்தியோ டுமைப் புதல்வனை யெமையா ளத்தனை யாடலின் விடுத்தாள், கருத்தினே டழைப்பார் மடித்தலத் திருப்பான் கனிந்தவாய் முத்தநன் களிப்பா, னொருத்திதோ ளுகைப்பான் கைத்தலத் துயர்த்தி னுவந்தவள் கொங்கையி னடிப்பான், பொருத்துபூ ணணியைப் பிடிததிழுத் துகுப்பான் புணர்முலை வாரினைக் கிழிப்பான். (௬௬)

அடித்திடு மொருத்தி தனைப்பிடித் திழுப்பா னம்மைமுன் கொண்டுபோய் விடுப்பான், கொடிக்கிணை யிடையார் விழிப்படை புதைப்பான்

---

* இருதிங்கடொட்டுப் பத்தெனுந்திங்கள் காறுந் தகுவர்கள் என்பது—இரண்டாந்திங்களில் கேமாசுரன் குசலாசுரன் இவர்கள் எலிகளாயும், மூன்றாந்திங்களில் குரூராசுரன் பூனையாயும், நாலாந்திங்களில் பலாசுரன் முனிவர்சிறுன்போலாயும், ஐந்தாந்திங்களில் வியோமாசுரன் நச்சுமாமரமாயும், ஆறாந்திங்களில் சதமயிட பக்கணியெனும் ஓரசுரமாது இந்திராணியைப்போலும், ஏழாந்திங்களில் கமடாசுரன் ஆமையாயும், எட்டாந்திங்களில் கற்பாசுரன் குதிரையாயும், ஒன்பதாந்திங்களில் துந்துபியசுரன் விடத்திலை நாவற்கனிகளைச் சமைத்துக்கொண்டு ஒருமுனிச்சிறுன்போலும், பதாந்திங்களில் அசுகராசுரன் மலைப்பாம்பாயும், உருக்கொண்டுவர அவர்களை முறையேபகைஞனச பூனையுருக்கொண்டும் வேதங்களை நாயுருவாகச் செய்தும் தம்மியோயாட்டியாலும் [illegible] அலைத்துப்பிளந்தும் அரக்கி செவியைப் பிடித்திழுத்தும் காலினால் துவைத்தும ஙிளாவாய்ச்செலுத்தியும் மோதகத்தையளித்தும் விழுங்கியபாம்பின்வயிற்றைப்பிளந்தும், கொன்றனர்.

குறியின்றன் கண்புதைப் பாரைப், பிடித்திட விழிப்பான் மரத்தடி யொழி ப்பான் பினும்பல வாடலங் கிழைப்பான், றொடிக்கையின் மடவார் குழு நடு வாறு தோளுடை யண்ணலவ் வேலே. (சஎ)

மறமிகு சலபா சுரனொரு சரப மாய்வர மடலா ரிரிந்தா, ரறம் வளர்த் திடுதா யனையபுட் கஞ்சி யன்பருக் குரைக்கவோ டினளாற், றிரகர சிங்க மாயனை யடக்கச் சிம்புளா யுருக்கொள்சே வகனூர், விறன் மக வொருபுள் ளாமவு னுக்கு வெருவுமே யொருவுமே விடுமே. (சஅ)

வந்திடு சிம்புட் கால்களைப் பற்றி வச்சிரப் பாறையெற் றிடமெய், சிந்திமாண் டதுபன் னிரண்டெனு மதியில் வீமனென் றோர்திறற் றகுவ, னுந்திரு தகுவர் தமையிரு சிலம்பா வுளும்பியோர் ‡புனைவனு யிசந்து, தந் திமா முகன்பாற றுளவேற் றடியிற் றரித்துவந் தாடின னன்றே. (சகூ)

ஆடனு முலக மனைத்துமா டினபின் னணிசிலம் படியிணை மலர்நின், றோடிட வுதற விருகயித் திபரோ டொன்றிவீ மனுஞ்சிதர்ந் தொழிந்தா; னீடுமற் றொருநா ளுவிச னெனுமோ ரவுணனோர் கொடியகீள் கரியாய்த், தேடிநங் கணேச னுட்டயர் களத்துச சென்றன னதறிறந் தெரியா. (ரு0)

மடங்கலி னிவர்வான் கரியையென் செய்யான் மற்றதன் கவுளினங் குசங்கொண், டடங்கிடப் புடைத்தூர்ந் தியாங்கனு நடாத்தி யுழுவலி யட க்கவீழ்ந் திறந்த, தடங்கிடைம் புலத்தார் நோக்கிமுன் றந்தை யருமகத் தெழுகரி யட்டாங், கிடம்படு முடற்று னவமத கரியை யிகுத்ததிம் மக வெனக் களித்தார். (ருக)

கூடனென் றொருவ னுண்டிரண் டினிற்சேய்க் குழாத்தொடைங் கா ன்புனல் படிநீ, ரோகூடயின் விடஞ்சேர்த் தொளித்தனன் சிறார்தோய்ந் துயிரிழப் புற்றன ரதனை, நாடிநல் விடக்கண் ணோககலும் பிழைத்தார் நஞ்சொழிந் ததுதட மசுரன், வீடினன் றந்தை நுதல்விழிப் படுவேள் வெந்தன னெனினிதோர் வியப்பே. (ருஉ)

பின்னர்மூ வாண்டு வரச்சிறு ரொடுமெம் பிரான்பிறி தோர்வனத் தாடத், துன்னுபூந் தடத்து விகிர்தனென் றொருநா னவன்சுறு வெனச்சுழ னுதல் கண், டன்னதைத் தந்தை சலதிவாய்ப் படுத்த சுறுவெனக் கைக்கொண் டாங்கெறியச், சின்னமா யிறந்த தங்ககன் றுமைவாழ் திரிசந்தி வனஞ் செலு நெறிவாய். (ருங)

‡ புனைவனும்-கம்மியசாதியான்போன்று

மாயையாற் பொருப்பொத் திடும்பனென் றொருதா னவன்வழி மறித் தனன் *கவுஞ்ச, மாயவெற் படுசேய் முன்னவ னோர்நெட் டுயிர்ப்பெறிந் தனுவென வடர்த்துத், தாயின னண்டோர் நாலின்வெற் பாசி தருசிவ பூசையாற் றலும்பா, வீயென வவள்பாற் செல்வான் பூசை யியற்றள வுறேலென விசைந்தாள். (ருச)

அறைதரு தாய்முன் முகங்களோ ரைந்துங் கரங்களீ ரைந்துமான் மழுவுங், கறைதரு மிடறுங் கொடுசதா சிவமாங் கடவுளாய் நிற்பநேர் கண்டாங், கிறைவியேத் தெடுதகென் பிழைபொறுக் கெனலு மெம்மனை யிற்றைதொட் டியானிற், குறுகுகா லெல்லாம பாறரு கென்று குழவியா யமுதருந் தினனால். (ருரு)

அன்னகா லையினிற கருத்தம னெனுமோ ரவுணனண் டரியவிஞ் சையன்போற், றுன்னிமா தவர்தஞ் சிறுவாய் மடுத்துத் துணைக்கணா சியி ன்வெளிப் படுத்தான், மன்னுநீள் செவிகண் ணாசியின் வழியுட் பெய்து வாய் வழிவரச் செய்தான், பின்னைவந் துமைசேய் தன்னைவாய் வழியுட் பெய்தனன் விடான்விண்ணே கினனால். (ருசு)

முக்கணா யகன்சே யக்கணம் விமலை முகத்தில்வந் துதித்தவன் கவுளிற், கைக்கொளோர் புடைப்பாற் புவிவிழுந் திறப்பக் கண்டன னகவைவையந் தெய்தத், தொக்கமா தவரிற் றொறுஞ்சிறு குறும்பு செயவவர் தொடர்ந்து மைக் குறைப்பச், சிக்கெனச் சிறையிட் டனளதன் மேற்பல் குறும்பவ ரகஞ்செறிந் தனவே. (ருஎ)

அறுசீர்க்கழி நெடிலடி யாசிரியவிருத்தம்.

இணையவா றைய னட்டி னியல்பினை யறவோர் நோககிப்
புனிதநின் செயலோ ராது புலந்தன மெமைக்காத் தாளென்
றனையதம் மகங்க டோறும் பூசிப்பா ரப்ப மாதி
யினிதளித் தனுஞ்சி னார்கட் கிமிழ மிசைந்த தேய்க்கும். (ருஅ)

என்னவவ் வாறீந் திட்டா ரோரம்ப னுவந்தா னற்றன்
முன்னவற் கருத்து சிற்றாண் மூதன்மகார் தமக்க ருத்த
ன்னனொன் றெவரு மின்று நடத்துவ ரினும்$பல் வேறுத்
துன்னவு ணாயு மட்டான் மூவிரண் டகவை தோன்ற. (ருகூ)

---

* கவுஞ்சமாய வெற்பு—கிரவுஞ்ச மென்னப்படும் பருவதம்.

$ பல்வேறுத்துன்ன வுணாயு மட்டது என்பது—ஓட்டகமாய் வந்த கடகாசுரனைத் தூரத்தில்வரும்போதும், சாயைபிடிப்பதில் வல்லவனை சாயாசுரனை உருத்துப்பார்த்தும், முனிச்சிறுனுகிவந்த சஞ்சலாசுரனை விளையாட்டினலும்போராட் டினுலுங்கொன்றதாம்.

பொன்னகர் யவன னெம்மாற் போற்றிவெம் பாசந் தோட்டி
யின்னுமிழ் பாசு கஞ்ச மெனவிளம் பாயு தங்கொண்
டின்னவை கதிரோ னங்கங் கடைந்தது ளாற்செய் தேன்கொண
முன்னவ வெனவேற் றீய்ந்தான் முனிவிலா வரங்கள் பின்னர். (௩௪௰)

மேவினன் செந்நா யாக விருகனு மசுர னெந்தை
தேவகம் மியன்முன் னீயந்த வங்குசத் தவற்செ குத்தான்
றவிலாண் டேழ்வந் தெய்த வதிதிகா சிபர்தம் மோடாங்
கோவிலா தெய்தி யேத்தி யுறுவரம் பெற்றுள் பின்னும். (௩௪௧)

பெற்றனர் வரம நேகர் பெரிதும்வந் திறைஞ்சி யந்நா
ளொற்றிரண் டாளி யாகக் கிருதாந்தன் காள னென்பார்
துற்றலுந் துதிக்கை கொண்டூர்த் திரண்டுமுட் டமர்க்குத் தூண்டிச்
செற்றன னெந்தைக் காண்டெட் டுறச்சிசி யிவர்தல் சொல்வாம். (௩௪௨)

எழுசீர்க்கழி நெடிலடி யாசிரியவிருத்தம்.

ஓதுகா சிபப்பேர் முனிதுணை யரிற் கத்துரு வினதையென் போர்க்குள், வாதநேர்ந் ததனுல் வினதைபுத் திராகக் கத்துரு மைந்தராம் புயங்கர், பாதலத் திடைவன் சிறைசெயத் தாய்தன் பதிக்குறைத் தவர்த்தெற வோர்சே, யீதியெற் கெனது மவனின தகட்டோர் முட்டையேய்ந் திடுமின்னே யஞ்சேல். (௩௪௩)

அன்னதே ஊேயரா லன்றிமா முகத்தே வங்கையி னுகிர்நுதிக் கீற்றுற், பின்னமுண் டதிலோர் மயிலெழு மதையப் பிரானிவர்ந் துன்புதல் வனைமீட், டின்னறீர்த் தருள்வ னென்றவட் புணர்ந்தா னியல்கருப் பத்தினோர் முட்டை, மன்னிய துயிர்த்துக் காப்புழி யாங்கெம் வாதன்வந் தனன் விளை யாட்டால். (௩௪௪)

அங்கணே ரசுரன் கரியனு யிரத்தக் கண்ணனு யொருதலை யிரண்டு, பைங்குரன் மூன்று வத்திர நான்கு செவியைந்து மருப்பறு தோகை, பொங்கெழு விழியெண் டாளுடைப் புள்ளாய்ப் போந்துபல்கிறிசெய்து மருட்ட, வெங்கடம் பெருமான் கண்டுபின் றொடர்ந்தீர்த் திருத்தனன் பாசமுய்த் தவனை. (௩௪௫)

ஆங்கமர் வினதை தன்வயிற் றுதித்த முட்டைகொண் டடிக்கண் வைத் தேத்தக், தேங்கறற் சடையா னதன்வா வுணர்ந்து திருநகங் கொடுகீளந் ததனின், றோங்கல்போல் வருமா மயிலிவர்ந் துலாவி யொண்டொடி குறைவினு யருள்செய், திங்ககன் றுமையோ டெம்பிரா னமோச் சிரமஞ்சென் றிறைஞ்சியீற் றிருந்தான். (௩௪௬)

அன்றுதொட் டெந்தைக் கொருபெயர் மயூரேச் சுரனென யாவரும் புனைந்தார், நன்றுறு மனைய நாமமோ தினர்க்கெஞ் ஞான்றுமே லொன் பதா மாண்டி, னென்றுபல் சிறரோ டம்மயி லிவர்ந்தாங் கோர்சுனைப் புன ற்படி காலை, மன்றவா சுகிப்பேர்ப் 0புயங்ககன் னிகைதோ ழியரொடா டிடவவண் வந்தாள். (௬௭)

வருமட மயின்மரு முகப்பிரான் றுளில் வணங்கியெந் தாயெளி யேனிற், கருளினுற் றுற்று பூசைகொண் டாள்கென் றறையமுன் வினதைபா னல்கு, மிருவர முணர்ந்தாங் கேகிப்பூ சனையேற் றின்றவா சுகிதொழா மையினவ், மா மணாயைப் பறித்தனு மெதிர்ப்ப வுட்கவீர்த் தணிந் தனன் றேட்கே. (௬௮)

அன்னதோர் செயல்பன் னகவிறை யுணாந்து படையொடு மமர்குறி த் தடுப்ப, முன்னவன் பரியா மயிற்செவி யிடைநன் மனுமொழிந் தராத் தொகை முரணை, யின்னினி யட்டெய் தெனவிடப் படர்ந்தேற் றனந் தனைக் கொத்திவா யிடைக்கொண், டுன்னுமுன் றரப்பெற் றனையினு ஞக்கிப் பிறவரா வுட்கியேத் திடலும். (௬௯)

பரிவொடு மவற்றைத் தோளணி காதி னணியுரத் தணிபதத் தணி மேல், விரலணி யாதி யாத்தரித் தான்மெய்ம் மிலைதிருப் பணியின்மே தினியோர், பொருவறு தாதை புனைகலன் புதல்வர் புனைதனமாண் பெ னற் கொரு காட்டாத், திருவிளை யாடல் செய்தன னெம்மான் செயலெவ ரறியகிற் பவர்மேல். (௭௰)

வாசுகி தனையை முதலகன் னியர்க்கு வரநல்கி வினதைசேய் மூவ, ராசுறு சிறையும் விடுத்தனன் பின்னர்க் கோரனென் றேதுமோ ரசுரன், பாய்சிறைக் கொக்காய் முனிவர்தஞ் சிறாரை வாய்ப்பெய்தெம் பண்ணவன் வரல்பார்த், தேசறவிருந்தான் பரசினு லவனைத் தெறச்சிறர் பிழைத் திறைஞ் சினரால். (௭௧)

சாற்றுசம் பாதி சடாயுசே னப்பேர்ச் ‡சகுந்தங்க ளாமொரு மூன்றுங், கூற்றுதைத் தவன்றன் சுதன்விடை கொடுதங் குரவரைத் தாழ்ந்துவாழ்ந் திருந்த, தோற்றுபுத் தாண்டிற் காரள னென்போன் பன்றியாய்த் துன்ன

---

0 புயங்க கன்னிகை-நாகவேந்தன் புத்திரி.

ஒருகாட்டா-துர்திருஷ்டாந்தமாக.

‡ சகுந்தங்கள்-பட்சிகள்.

வங் கதனை, யாற்றல்சா ⁰லரியா மரியைவென் றவன்சே யஞ்சுமோ பாசம் விட் டழித்தான். (எ௨)

கலனொடு விகார னெனுமிரண டசுரர் காட்டுமே நியினுரு வாய்மெய், வலனொடு மெதிர்ப்ப மாமுகக் கடவுண் மாய்த்துயர் கமண்டல நதிதோய்ந், தலகில்சீர் பெற்ற பராசுரன் றெழுப்பல் வரநல்கிக் கார்க்கிய வறவோ, னிலகுமெய்ஞ் ஞானம் வேண்டலு நவின்றே பெழிற்சின கரத்தமர் காலே. (எ௩)

புறனமர் முனிவர் சிறுவரைவந் தூர்த்த கேசனுந் தருவமேனுர் புலியா, யிறையின்வாய் மடுத்துட் புகவவன் செவிமுக கீர்ந்துபற றகர்த்துனை போவுந், திறலனை யடைந்தெனவிடுந் தமுவை செருப்பமாள் சிறுசொ டிநம்முன், மறலியைக் கொணர்கென் றுய்ந்தனன் பாசப் படையையஃ தேகிமற் றவனை. (எ௪)

வலிதின்யாப் புறுத்திச் சிறுசொடுங் கொணர்ந்து விடுப்பவந் தகன்ன மகோற் கடவோ, நலனருள் பவவோ நாயினேன் பிழைத்த தின்றுதா னவப்புலி நலிய, வலைவொடு மென்முன் வந்தனா சிறுவ ரஃதடி யேன்றவ றெனினும், விலகுமா றருளென் றிரப்பவெம் பெருமான் விரைந்தருள் புரிந்திஃ துரைப்பான். (எ௫)

இற்றைநாண் முதனம் மடியரை யாமென் றெண்ணிநீ யணுகலை யணுகின், முற்றநின் றொழிலு மாவியு மிறுமே கெனமொழிந் தருளநன் றெனக்கூற், றுற்றனன் றன்னூ ரெந்தைமெய்ஞ் ஞான முரவனுக் குணர்த்தினீற் றிருந்தான், செற்றபுல் லவுணன் றன்னிழி விறைக்குச் செப்ப வேனையருமாங் குரைத்தார். (எ௬)

அறுசீர்க்கழி நெடிலடியாசிரியவிருத்தம்.

சிந்துமன் கேட்டு டன்று செருக்குறித் தனிகம் யாவும்
வந்திடப் பணித்து நூறேர் மந்திரர் சூழ்ச்சி யுட்கொண்
டந்தமில் வரங்கள் பெற்ற கனலனு மவுணன் போரில்
வெந்திற லினன்ற னைப்போள் மிக்கவீ ரியனன் றனை. (எஎ)

அழைத்தணி கலன்பொன் மற்று மளித்தெண்ணில் பதாதி யீய்ந்தே
தழைத்தநம் மினத்தோர்க் கின்னல் புரிதந்தி முகவ னோடும்

---

⁰ அரியாமரியை வென்றது-நரசிங்காவ தாரஞ் செய்த விஷ்ணுவைச் சரபப்பட்சியாக வடிவங்கொண்டு வகிர்ந்து நகத்தையணிந்து சொண்டதாம்

பிழைத்திடா வமர்செய் தாவி கொடுவென்றி பெறுகென் றேவ
வுழைப்பினன் சென்றெங் கோன்வை கிடமுற்றி யொல்லை யார்த்தான்.
கண்டருந் தவரி டும்பைக் கடற்படிந் தீசற் போற்றி
யண்டர்நா யகனே யோர்தா னவன்பெயர் கனல னென்பா
னெண்டகு தானை யோடீங் கிண்டினு னவற்காய்ந் தெம்மைத்
தொண்டுகொள் சரணீ யென்னத் துதித்தது முமாம கேசன். (எகூ)
படந்திக ழரவப் பைம்பூட் பாலக கணேசற் கூவி
யடர்ந்தநாற் றானை யோடு மனற்பெயர்த் தகுவ னீங்கே
படர்ந்துளா னவைய றவி படுக்கெனத் திருக்கைச் சூல
வுடம்பிடி நலகக் கையேற் றெந்நாற் படைக ளாக்கி. (அய)
வரைபுரை மஞ்ஞை யூர்ந்து மருவினன் றகுவன் முன்னர்த்
திரைசெறி கடனி கர்த்த விருதிறப் படையு நேர்ந்து
பொரவிர வலன்ப தாதி மாய்தலும் பொருன்வில் வாங்கி
யெரிமுத லியவே வேவி யெந்தைசே னையையட் டேற்றான். (அக)
பொருகன லம்பல் வாளி புனிதன்மேற் செலுத்த லோடும்
வருகணை யாவு மட்டெம் வள்ளலெண் ணிறந்த வாளி
யொருமுக மாக வேவி யுடற்ற வாற் றனின் றோர்ந்தே
யரியமா யாசா லத்தா னலதற் கொல்லா தெனன். (அஉ)
மாயைகள் பலவி யற்ற வருபவை யனைத்தும் போக்கிக்
காயன் வடவை மூன்றாக் கனுலிய தெனச்செல் சூல
நாயகப் படையைச் செம்ம னடாத்தலும் போயன் றேனைத்
தீயமாய் விகதுக் கங்கை தோய்ந்து சேர்ந் ததுகந் தேவை (அங)
மறந்திகழ் சூர் கைக் கொண்டெம் வள்ளன்முன் னிறந்தோ ரொல்லா
முடங்கினோர் களிமென முச்செய் துவப்பினெம் பரன்பா னண்ண
வறந்திகழ் சுரன்மெய் தைவந் தளவிலா வரிசை நல்கித்
துறந்தவர் தொழுமே னோர்கருஞ் சுரந்தருள் வழங்கி னால். (அச)
பின்னர்முன் னோன்முன் னெய்தப் பெற்றுளோர்க் கருளி வைக
மன்னனுஞ் சிந்து வின்பால் வந்தொற்றர் கனலன் மாண்டா
னென்னலு மழன்றே ரம்பன் றனைப்படை தொடாதெவ் வாறட்
டின்னரீர்த் திடுவா மென்றோர்ந் துளந்தெளிந் தினைய செய்வான். (அரு)

o சூல்-சூலப்படை

அருளொரு மேனி யாய வைங்கரன் வதியுங் கானத்
$திருள்வலி மதிவா னீர்கா லெரிபுகா வகைப ணிப்பப்
பெருவளங் குறைந்தாங் குற்ற தவர்செயல் பிறழ்ந்தவாற்றால்
வெருவியைங் காற்கு ரைத்தார் கேட்டுமுக் கணும்வி ழிப்ப. (அசு)

கருணைசெய் வல்க்கண் பானுக் கார்வழி தாவி டக்கண்
டிருமதி யொடுபைங் கூழா தியபொரு டாறு தற்கண்
டாமகக் குரிய முத்தீ யாவுமுன் னையிற்ற ழைப்பப்
புரிகரு மங்க ளாற்றிப் புன்மைதீர்ந் திருந்தா ரெம்மான். (அஎ)

தீயன வினைத்தா கம்பாற் செய்தனன் சிந்து வென்னக்
காயழல் போன்றுட் பொங்கிக் கண்ணுதற் பிரானைத் தாயோ
டேய்வுறப் போற்றி நிற்குங் குறிப்பறிந் திறைபல் வீரர்
§பாயசா ரதத்தூ சீந்தப் பதகனைத் தெறப்ப ணித்தான். (அஅ)

எழுசீர்க்கழி நெடிலடி யாசிரியவிருத்தம்.

தாதைதாண் மீட்டுந் தாழ்ந்தறு புயந்துத் தனிமுத றளிப்புறத் தணையக், காதுவேற் குமரன் பத்திர னிலம்ப கன்னனோ டிரணிய கருப்பன், றீதுறு விரத்த லோசன னந்தி திறற்பஞ்சா னனன்புட்ப தந்தன், மாதரார் பிருங்கி பிரமதன் சோமன் மாண்டதா வானல னரனே. (அகூ)

சாமளன் பூத ராசனெண் சபலன் சஙகனல் விகடனேழ் கோடி, யாமெணந் தருசா ரதரொடுந் தொக்காங் கடியிணை பணிந்தன ரவரை, மாமைசேர் தத்தம் விமானமூர் தாச்செய் தருந்தவா மகார்சிறை மருவ, வேமமார் தேரூர்ந் தயிற்கரத் திளவ லருகுற வெழுந்தனன் கணேசன். (கூ0)

‡ஆயிரத் திரட்டித் தடக்கையை யுடையா னுயிரம் வளையெடுத் தூதப் பாயிருட் படலங் கிழித்தொளி பரப்பும் பான்மதிக் குடைநிழல் கவிப்பத் தோயறற் றிரைபோற் கவரிக ளிரட்டத் தோகைவின் னுரிஞ்சவொன் றிரண்டு, வாயுடைக் கருவி யாதிபல் லியங்க டிசைதொறும் வாழியென் றியம்ப. (கூக)

---

$ இருள்வலி-சூரியன்

§ பாயசாரதத்தூசு-பரம்பியபூதப்படைகள்.

‡ ஆயிரத்திரட்டித் தடக்கையை யுடையான்—இரண்டாயிரம் கைகளை யுடைய பாணுசும்பன்.

தேசவிர் மணித்திண் டேர்கள்பல் வரைபோற் செலநடந் தொண்ணல னகர்க்கோர், யோசனை வரைப்பி னமர்ந்துசிந் துவின்பா லொற்றுரன் முறைவிடற் கோர்ந்தே, யாசினந் திசைக்கூஉய்ப் பாம்பான் வரநின் றிடவிழைந் திடினண்டர் சிறைநீக், கேசற விழையா யெனினமர்க் கெழுகென் றிசைத்துமீ டெவ்விடத் தென்றூர். (கஉ)

அப்பணி தலைக்கொ ணர்ந்தியீ சனைவெற் பாசியை யுளங்கொடு சூக்கத் தொப்பிலோர் வடிவிற் சிந்துவி னவைபுக் குவன்றவி சினுழுயர் பீடஞ், சுப்பிரத் தமைத்தாங் கிருப்பமாற் றுனஞ் சூழனீத் துற்றநீ யாரை செப்புக வந்த தெனமயூ ரேசன் றூதன்யான் வந்தது தெரிக்கின். (கங)

திருவறி வென்னு மிரண்டினு ளொன்று சேர்ந்தவர்க் கொன்றுமே சாதீ, திருநிலத் தியல்பா தலிற்றிரு வெய்து நினக்கறி வெய்தலின் றெனினு, நிருமலக் கடவுள் பானெடுந் தவத்தாற் பெறுவா நிலைப்பநீ செங்கோ, லருளொடு நடந்த விலையினை நினக்கோ தமைச்சுமின் றினித்திரு வேண்டின். (கச)

உம்பரார் சிறைநீத் தறநெறி செலுத்தி வாழ்தியின் றேலமர்க் குறுதி, யெம்பிரா னருண்மேற் கொண்டுரைத் தனனென் றனனிது சிந்துமன் கேட்டே, கம்பமொன் றிலனாய் நகைத்தெரி கண்கள் காலநந் தியைவெகுண் டிளஞ்சேய், நம்புநின் முதல்வ னவன்சொலான் மற்றைத் தானவர் போலெணி நவின்றாய். (கரு)

கந்தடு களிற்றைக் காய்தரு மரியென் காற்புண்மு னெவன்செயு மனைத்தாப், புந்தியில் பிறரைச் செயித்தன மெனத்தற் புகழ்ந்தவன் புகன்றனன் கொன்னீ, யுந்துதூ துவனிற் கோறன்மாண் பன்றே கொனநந்தி யுளம்பொறு திறையை, நிந்தைசெய் தனையே யெனவவன் சொலிமீ ளென்றலா னினையடி னையேன். (கசா)

இல்லையே னினது படையெலாங் கையாற் பிசைந்துசாந் தெனவிணைப் புயங்கட், கொல்லைபூ சுவன்காண் மதியிலா யெனவோ ருயிர்ப்பெறி தலுமதன் மருத்தா, னல்லெழிற் சபையின் வனையொடிந் ததுவிண் ணோரென நடுங்கியும் வியர்த்தும், வல்லையோ டினரங் குறைந்தவர் சிந்து மயங்கின னுடனவ ணகன்றே. (கஎ)

நடந்தவிவ் வனைத்து நந்திவந் துரைப்பக் கேட்டிள நகைசெய்தா னுதன், மடம்புய புட்ப தந்தனும் பூத ராசனுந் தம்பிரான் குறிப்போர்ந்

தடங்கலா விறற்பா ரிடரொரு கோடி யடுத்திடச் சிந்துவாழ் நகர்க்கு, நெடுங்கடி யெனச்செம் பொன்னினா லிழைத்து நிமிர்தரு மெயிற்புறத் தேகி. (௯௮)

அடுத்தெயிற் புறங்க ணான்கையும் புரக்கு மாளிமா முகன்புலி முக வன், கடுத்தமர் புரியுங் களிற்றுமா முகவன் காய்சினச் சீயமா முகனும், படைத்திறத் தவுண ரீரிரு வரையும் பாங்கமர் நாற்பது கோடி, விடத் தைநேர் மறவர் தமையுமோர் கொடியில் விட்டிமீண் டனரிஃ தாக. (௯௯)

கண்டக நகர்க்குண் மயங்கிய சிந்து தெழிந்தெழீஇ யொற்றரை கருதி, மண்டழல் விழிகான் றெழுவினை பொருது மாற்றலர்ச் செகுத் தவ ராவி, யுண்டல துண்ணோ னாற்படை களுமிங் குறுகவென் றடுசமர்க் கோலங், கொணடெழு கையிலவ் வெயிற்புறத் தவர்மாய்ந் திடுதிறங் கூறினா ரொற்றர். (௱)

நெருப்பிடை வறந்து கொதித்தெழு பாலங் நெருப்பிடை கவிழ்வது போலுஞ், செருப்புகு சினத்தோ டெழுந்தமன் மேன்மேற் சினங்கொ டு மதிற்புறத் தோம்பிப், பொரப்பல்வீ ரரையு மகத்தநே கரையு நியமித் தும் பூண்டுகில் பரிதேர், வரைப்பறு களிறு தியசில சிலர்க்கு வளங்கியுந் தேரிவர்ந் துய்த்தான். (௱௧)

அறுசீர்க்கழி நெடிலடியாசிரியவிருத்தம்.

கடலென வியங்க லிப்பக் கவரிதுள் ளுறப்ப தாகை
குடைகள்வான் றொடநி ழற்றக் கொடியனார் நடித்தி டப்பல்
படைகள்சே றலினெ ழுந்தூள் பரவுதல் யாண்டுஞ் சிந்து
மடிபொழு தடுத்தல் பூவா மடந்தைசென் றுரைத்த னேரும் (௱௨)

சிந்துமன் வருதல் கேட்டேந் தேவமர்க் கெழுத னோக்கி
நந்திதாழ்ந் தைய வீர பத்திர னானுள் விட்டோர்
வெந்திற லமர்செய் தாற்றன் மெலியினேற் றிடனன் றாகுங்
கந்தனு நீயு மென்ன விரத்தலுங் கணேச வள்ளல். (௱௩)

சிந்துவோ டமர்செய் வாஞ்சை சிறந்துளே மவன்ற னாவி
சிந்துவோம் யாமே னோரைச் செகுமினென் றருள்வா னுண்ணோக்
கந்தனை யாய்வுற் றூர்தி களினமர்க் கவின்கொண் டேவேற்
கந்தனை யாதி வீரர் கணேசமூர்த் தியின்பாங் குற்றார். (௱௪)

மெய்யறி வறியாச் சிந்து வேந்துசெய் கொடுங்கோல் வெப்பார்
வையகங் குளிர்ப்பத் தண்ணென் மதிவால் போலுந் தொங்க

ஓயணீண முடிநி முற்ற வவன்புக முலக மூன்றுஞ்
செய்யல்காட் டுதல்போற் றுள்ளுங் கவரிகள் செறிந்து மேல்கீழ். (௯௫)

சத்திய முளங்கொ ளாவெங் தயித்தியர் கோவாஞ் சிந்து
மித்திரத் துவஞ்செய் யாதும் பணைச்சிறை செயல்வி டுப்பா
னித்தின மவனை யெம்மா னொழிப்பனீ துணர்மி னென்பா
ரொத்தன வியோமத் தெல்லை யுராவிய கொடிக்கு ழாங்கள். (௯௬)

கருதல னிடையெம் மான்கொள் கோபத்தீ கருணை நீர்வந்
தருகிடி னின்னுந் துன்பத் தாழுமே யுலகென் றூற்றல்
வருநெறிக் குதவி யாய காலெழுப் பிடுவார் மான
முருகவி மூல வட்ட மிரட்டினர் முனைசெய் பூதர். (௯௭)

சிறுவனென் றிகழ்ந்து ரைத்த சிந்துவுக் கிறையே யென்ன
வறிவுறுத் திடமுச் செய்கை யயன்முதன் மூவர்க் கீய்ந்த
விறலினன் வந்தான் வந்தான் வெய்யனுங் கணமேவங் தாதி
தெறுநரைச் செறுத்த வண்சீர்ச் சேவகன் வந்தான் வந்தான். (௯௮)

என்றெமை யுடையான் சீர்த்தி யெடுத்திசைத் தனர்பல் பூதர்
மன்றவிண் ணாதி யெங்கும் வதிசரா சரங்கட் கெல்லா
முன்றெறு துயர னைத்து முடிந்திடுஞ் சோர்வு தீர்மி
னென்றுமின் பென்பார் போற்பே ரொலிசெயு மியமி யம்ப. (௯௯)

அவ்விடை நின்றும் போந்தே யமர்தொட வயிற்கைப் பெம்மான்
றெவ்வினுண் மித்தி ரப்பே ரமைச்சொடு செருந டாத்தி
யெவ்வமல் கமைச்சை யும்பின் னேலவந் தெதிர்த்த வீர
ரொவ்வொரு வரையுங் கூற்றூர்க் கொல்லையிற் புகுமா றுய்த்தான். (௧௦௦)

மிகுதிறற் றக்கன் வேள்வி யழித்திடு வீரன் வெய்ய
தகுவனுங் கவுத்து வபபே ரமைச்சொடு சமர்செய் தட்டே
யகல்விசும் புய்த்துச் சங்க மார்த்தனன் மற்றை வீரர்
தொகுபடை யொடுமெ மர்க்குத் தொடர்ந்தன ரனையர் தம்மில். (௧௦௧)

தனிப்படர் நந்தி புட்ப தந்தனம் பூத ராசன்
சினத்தெதிர் விகடன் வீரஞ் செறிதரு சபல னின்னோ
ரனற்கணார் வீர ராசன் றுவசனு காயன் றூர்த்தவ்
மனக்கிடர் புரிசார்த் தூல னிவர்தமை மாய்வித் தார்பின். (௧௦௨)

மும்மையு மருளு மெந்தை முனைப்படை தாங்கும் வீரர்
தம்முளே சங்கன் றன்னோ டிகல்சங்கா சுரனை வென்று
தெம்முனை சாய்த்தான் சோமன் றிறற்பிர சண்டற் கொன்று
னிம்மெனக் கோலன் றன்னை யிரணிய கருப்பன் வென்றான். (௱௧௩)

சண்டனை யிலம்ப கன்னன் சரமழை பொழிந் தொழித்தான்
முண்டனை முனிந்து தாவா நலன்முடித் தனன்கை வாளாற்
கண்டனை நலமார் பஞ்சா னனன்கணை யாலே காய்ந்தான்
மிண்டிய கதம்பன் றன்னைச் சாமளன் வீட்டி னானால் (௱௧௪)

கலனைநல் லரன்செ யிர்த்துக் காதின னிரத்தக் கண்ணன்
வலபிர பலனை யட்டான் வயிரங்கொள் புவமன் றன்னை
யலமறு பிருங்கி வென்றா னசுரர்தம் வீர ரிவ்வா
றலைவுறீஇ யழிந்தார் தானை யுவரியு மொழிந்த தன்றே. (௱௧௫)

நரிகொடி யலகை சேன நாய்கழு கினமங் கெய்தி
யுருவழி பிணவிட் டத்தை யுண்டுணக் களிப்பின் மூழ்கும்
பெருகுசெங் குருதி மாந்தித் துணங்கையாட் டயருஞ் சில்பேய்க்
கருகுற நின்று பாடு மங்கைகள் கொட்டிச் சில்பேய். (௧௧௬)

இரத§நா வாய்போல் வெங்க ணிபம்பெருஞ் சயிலம் போல்வாம்
பரிகணீர் நாய்போன் மற்றும் பாணிகால் வதனங் கண்கள்
புரையிலா வனச நீலம் போனிணை நுரைபோற் சாய்ந்து
விரவிவார் குடர்க ணீண்ட பாசிபோல் விளக்க மெய்த. (௧௧௭)

அடுகளத் தெழுந்த செந்நீ ராறுடைத் தோடி வார்ந்த
கடல்புக விசய மாது களித்தமர்க் களத்து லாவி
நடமிட வழற்கட் பூதர் நாலைவா யெழுந்த காள
விடமென வெகுண்டு சிந்து வேந்தனோ டெதிர்த்தார்த் தாரால். (௧௧௮)

தன்பெருஞ் சேனை யாவுஞ் சாய்ந்ததுந் தலைவ ரெல்லா
மென்புதோ றசைசெந் நீரா யிற்றதும் பூத வீரர்
வன்படை கொண்டு போர்செய் மறமும்பார்த் தயர்ந்து தேறிக்
கொன்பயில் வேற்கைச் சிந்து குறுநகை பூத்த டர்த்தே. (௧௧௯)

‡கார்முகத் தேற்றம் பானுங் கைப்படை யாதி யானும்
போர்முகத் தெதிர்த்த பூதர் புயந்தலை யாதி யங்கம்

§ நாவாய்-மரக்கலம்.

‡ கார்முகம்-வில்.

பார்முகத் தருள வீட்டிப் பகர்சங்க ளுதி வீரர்
சார்முகத் தேவை யேவிச் சாய்த்தெம திறைமுன் சாரா. (கஉ௦)

கனவினு மெவருங் காணற் கரியவோர் கடவு டன்னை
முனைவினை நலத்தாற் றன்கண் மூன்றுமா னந்த மெய்த
நனவிடைக் காணப்பெற்று நல்லருள் பெறுமு ழில்லான்
சினவியொல் லாவை யேசித் தெறுபடை பலவிட் டார்த்தான். (கஉக)

எழுசீர்க்கழி நெடிலடியாசிரியவிருத்தம்.

சீருள் கொழிக்கும் விநாயகன் றமது சிலைநிகர் சிலைகுனித் தடற், ணேருற வினைத்து மணிவிர றெரிப்ப வெழுமொலி சேடனுட் கலங்கப், பார்முதற் சகல புவனமு மலைந்து பற்றலன் சாங்குலைந் தனபின், காரெ ன விசிகம் பொழிதலு மொன்னுன் ‡கவானுதல் புயமுரங் துளைத்த. கஉஉ

தரியல னவச மாயிர தத்துச் சாய்ந்துபின் றெளிவடைந் தழிவு, கருதுறு மனத்து மானமீக் கொளவிற் கதிரவன் படைவிடுத் தார்த்தான், பொருவின்முத் தலைவேல் விடுத்தன னெந்தை பொன்னென வதுவரு ப டையை, யிரையென மடுத்தாங் கொன்னலன் செவிக ளிரண்டையு மறுத் துமீண் டதுவே. (கஉ௩)

ஓரிரு செவியு மிழந்தவன் முகத்தை யுடைகொடு மறைத்தொளி தருகண், ணீருறத் தன்னிற் போங்தொரு மூலை யிருந்தன னிருமல மூர்த்தி, போரிடை விளிந்தா ரெழவருள் புரிந்து பொலந்திகழ் பாச றை யடைந்து, சீருண் முருகக் கடவுளா தியர்சூழ்ந் திடக்களிப் பெய் திவீற் றிருந்தான். (கஉச)

தன்பெயர்ப் படையை விடுத்திடிற் போரிற் சயம்பெற லாமென மதித்து, வன்புடை மனச்சிந் தேவமாய்ந் தவன்றன் வார்செவி களுமி ழப் பித்த, தென்பய னெனுமுட் குளஞ்சுடக் கடற்புக் கிருந்தது தணிது மென் பவன்போன், மினபொலி வழியத் தேரொடு மேலை வேலைவா யென்று மேவினனால். (கஉரு)

சிந்துமன் னுளம்போற் கங்குல்வந் திறுத்த சீருள் விநாயக னிசை போ, லிந்துவந் துதித்தான் கண்டக நகர மெங்கணு மிரங்கொலி யெ ழுந்த, தந்தமன் மனைவி தன்பெருங் கணவ னனுருமுந் திருத்தல்கண் டவன்கொல், வந்தவென் கெணவ வெனவவ னுற்ற துரைத்தலும் வருத் தமுற் றுரைப்பாள். (கஉசா)

‡ கவான்-தொடை.

வேதமு மகமு முலகிடை மலியின் வேண்டுவ யாவையு மலியுங்,
கோதற வவையோம் பமரர்கட் கவியூண் கொடுத்திடு மரையர்தங் குலத்து,
நீதக வுதித்து மமரர்தங் குழுவை நிகழ்ந்தருஞ் சிறையினுட் படுத்தி,
யேதமிக் கியற்று நிசாசரர்த் தழுவி யினிதருள் புரிந்துவந் தனையால். ()

வேந்தர்க டரும மிதுவல வமரர் சிறைவிடு விடினொரு வெண்கோட்,
டேந்தலின் னருளா லிடர்களந் தனையு மிரியுமெக் கூளியும் வந்துறுமென்,
றுந்திற னியம்பல் கேட்டமா சூழின் றுகலி னவன்மொழி மறுப்பப, போந்
தன னழுங்கி முகமலர் *புலர்ந்து புலர்ந்தது கங்குலாம பொழுதும். கஉஅ

காலையி லிவரோ டெதிர்த்திடு விகலன் கலனெனு மிருவர்வெம் படை
யோ, டேலமர்க் களஞ்சே றலுமிவர் வீரவை நாரதர் விநாயகற் கிசைப்
ப, மாலைதா ழுயிற்கை யிளவனைமுன் னவன்றாள் வணங்கியுக் கிரன்மு
தல் வீரர், சாலவாங் கேகி யமர்செய்து சேனைக் குழாஞ்சவட் டலும்வி
றற் பூதர். (கஉகூ)

வீரமுற் றெதிர்ந்தா ரதுகண்டு கலனும் விகலனும் பலகணை மழையாற்,
சாரதப் படையைச் சாய்த்தடற் புட்ப தந்தனை நந்தியைச் சினந்தவ், வீர
ரைக் கவற்ற வில்விகண் டழன்று விகலனைப் புடைத்துயிர் தொலைத்தான்,
கூரயிற் படைக்கை வேள்கலற் பிடித்துக் குலையத் தடித்துயிர் குடித்
தான். (கஙo)

கொற்றவன் மனைவி துணைவரோ டிருவ ரிறத்தலாற் கொதித்தயர்
காலைப், பெற்றகா தலராந் தன்மனே யதன்ம னேயெனும் பெயரினை
யுடையோ, ருற்றுவேந் தவலமொழிந்தவன் விடையேற் றுவரிநேர் தா
னையோ டடுத்து, வெற்றிவேற் குமரன் பாலமர் வீர வாகுவா தியரைவி
ளற்றே. (கஙக)

வருத்தலு நீபத் தொடையுடை முருக வள்ளலவ் விருபுதல் வரையுந்,
தரைத்தலத் தெற்றி யாவிமாய்த் தன்னத் தன்மைவேந் தறிந்துளந் தளர்ந்
தே, யாற்றலு மன்னோன் புரோகித னடைந்தவ் வயர்வொழிப் பானெ
ம தண்ணல், பெருத்தவின் னவரைச் சிறைசெய்தோர் நேமி யுருட்டி
மா யாவாம் பெற்றாய். (கஙஉ)

---

* புலர்ந்து-வாடி.

## கலிவிருத்தம்.

தந்தைதாய் மனைசுதர் தாவில் சுற்றமா
வந்துதோன் றுதல்பினர் மாய்தல் புற்பல
முந்துகாற் றென்றினோர் முகங்கு ழீஇப்பினோர்
§வங்தெறி தாப்பிரிந் தோடன் மானுமே. (௧௬௩)

தவ்வலில் வினைவசத் தானு தித்திடு
மெவ்வுயிர் கட்குமுண் டெண்ணி னுற்பவ
மவ்வுயிர்க் கப்பனு யரிய சேய்மனை
யொவ்வுத லளவில் வுயிர்க்கெ லாந்துணே. (௧௬௪)

வீதரேன் றுதலிலா விமல னேயலா
லோதுசிற் றுயிர்கொலோ வோரிற் பாரினி
லாதனி னுயிர்ப்பொருட் டழுங்கி னேண்கெடு
†மேதிலா ரிகழ்வர்தொல் லிசையி றந்திடும். (௧௬௫)

இசையிற வசையுறு மென்ன றிண்ணமவ்
வசையற வகங்கெழு மம்மர் விட்டெழீஇப்
பசையுட லோம்பிநீ பகைவ ரைதகெற
நசையுற வேண்டுமா லெனந வின்றனன். (௧௬௬)

புத்தியிற் கூர்த்துணை புரோகி தன்சொலைப்
பத்தியி னுளங்கொடு பரிவு நீர்ந்தெழுந்
துத்தம வுணவயின் றுடுத்துப் பூண்டரு
மத்திர சத்திர மனைத்துங் கொண்டபின். (௧௬௭)

## அறுசீர்க்கழி நெடிலடியாசிரியவிருத்தம்.

தடவரை நிகர்தே ரூர்ந்து தானையங் கடலோர் நான்கு
புடைகளும் பொதுள மன்னன் போர்க்களத் தடைப்ப வாங்கே
யடல்கெழு ‖வில்வி நந்தி யாதிய வீரர் பூநர்
மிடையவெஞ் சூரை யட்ட வேளடுத் தேற்று னன்றே. (௧௬௮)

---

§ வங்து-காற்று.

† ஏதிலார்-பகைவர்.

‖ வில்வி-வீரபத்திரன்.

அன்னதே வொடுசென் றோரு ளடல்கெழு வில்லி நந்தி
யென்னும்வீ ரர்கள்கைம் மாவை யிவுளியைப் புட்ப தந்தன்
பன்னரும் பிருங்கி யென்போன் பதாதியைப் பூத ராசன்
மின்னிர ணியகர்ப் பப்பேர் வீரரேற் றறச்செய் தாரால். (கஙௗ)

வடுவில்சீ ரிலக்கத் தொன்பான் வயவரோ டிற்கை வள்ள
றடவரை யனைய திண்டேர்த் தானையந் தலைவர் சூழ
விடமென வெகுண்டு போர்செய் வேந்தனுஞ் சிந்து வின்ற
னடல்கெட விரதத் தானை யாவையு மழித்துப் பின்னர். (கச0)

அன்னவ னிவர்தின் டேருஞ் சேமத்தே ரனைத்து நூறிப்
பொன்முடி கார்மு காதி படைகளும் பொடித்த லாலம்
மன்னவன் றனித்த லர்ந்த வதனமும் புலர்ந்து ளாறுய்ந்
தன்னிலை தளர்ந்து நிற்ற னோக்கிநந் தனிவே லையன். (கசக)

வடுவறு வீர மக்கண் மந்திர முறைபபோர் வீர
ரடல்கெடக் கரிதேர் பாய்மா யாவுமிற றனநீ யென்னன்
மிடலகன் றுட்கி வீட்டுட் புக்கனை மீட்டு மின்று
படுகளத் தேக னுைய் பயினிரா யுதனு மாகி (கசஉ)

ஆதலாற் கள்வ னேநீ யருங்கதி யடைய வேண்டின்
மேதகு நமது பாத விரைமலர்ச் சரண்பு கின்றேற்
பூதல மாதி மூன்று புவனத்து நின்று ழுற்ற
வேதமும் வேத மோது மிருந்தவ ரெய்து துன்பும். (கசங)

உம்பரார் சிறையு முன்ற னூழ்வலி வினையு மொற்றை
யம்பினு னொழித்தல் செய்வே னறநினைந் தாற்றற் கொல்லேன்
வம்பவின் றேகி நாளை வாவெனச் சென்றான் மேலைப்
பம்புவே லையில்வெய் யோனும் பகல்செய்வே லையினீத் தற்றான். (கசச)

இருள்வலி யறக்கோ லோச்சு மினன்குண கடல்வாய்த் தோன்ற
மருளறு மனத்து வீணை முனிவன்மா முகத்தெம் மான்றா
டெருளுற விறைஞ்சி யெந்தாய் தெவ்வுயி ரழித்தல் செய்தற்
கருள்செயா திருத்தல் யாது திருவிளை யாடல் கொல்லோ. (கசரு)

என்னலு மெம்மா னென்ன விளவலா விரிந்த சிந்து
மன்னவு னமுற் றேற்பி னன்றிமாய்த் திடனல் லாறோ
பின்னுகேன் றிடப்பி ருங்கி பகைவன்வந் தேற்குஞ் சூழ்ச்சி
யுன்னியாற் றிடுதி யென்ன வுறுபடை மொய்ப்பச் சென்றே. (கசசு)

இடையிடை யரண்க ளெல்லா மெற்றியுண் ணகர்புக் காங்கே
படையொடு மமர்ந்த மூலப் படையழித் தவனில் லாடன்
முடியரிந் தெதிர்த்த சிந்து மோலியுங் காலிற் றள்ளிக்
கடிதின்மீ டரலுஞ் சிந்து கனன்றடு களஞ்சென் றுங்கே. (கசஎ)

ஆறுமா முகத்தோன் வீர பத்திர னாதி யாதி
வேறுவீ ரர்கள்செல் லற்க வியன்மயி லிவரோ ரம்பன்
கூறமர்க் கெழுகென் றெற்று விட்டறை கூவி நின்றான்
மாறுளத் தவனை மாய்ப்ப நினைத்ததே மறுக்குங் கொல்லோ. (கசஅ)

மற்றது செய்வ லென்ன மகிழ்ந்தடு களஞ்சென் றேற்று
றுற்றசிந் துவுமுன் றன்னோ டெதித்தவா ழியினை யுய்த்தான்
வெற்றிகொண் ணேமி போங்தெம் விமலன்றாட் கலர்போல் வீழப்
பெற்றதன் னதுகண் *டென்றிற் பிறங்குசூ லத்தை யுய்த்தான். (கசகூ)

விடுபடை யனல்கா றிய விடம்பல கான்று போங்கி
யடுபடை யலகை பூத ரவுணரா தியர்ப்ப டைத்துக்
கடுகிமண் ணோடு விண்ணுங் காலவீ றுற்ற தென்ன
நடுநடுக் குறவே போத நாதனங் கதனைநோக்கி. (கரு0)

மாற்றலற் செருக்குஞ் செவ்வி வரத்திரு வுளத்து முன்னி
யாற்றலார் மழுவை யுய்த்தா னஃ்தடு படைக்கு ழாங்கள்
வீற்றுவீற் றுக்கிச் சூலப் படையொடும் விட்டா ஞவி
பாற்றியொண் கங்கை யாடி மீண்டுபெண் டெனக்கை யுற்ற. (கருக)

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

அந்தரத் தவர்செம் மலர்மழை பொழிந்தா ரார்த்தன துந்துமி யைக் துஞ், சுந்தரத் தவரம் மறைகளிற் பலவாத் துதித்தனர் தொழுதனர் கறையார், கந்தரத் தவர்தந் தருளிய முருக ஞதிய தானைகா வலரு மெந்தரத் தவரு மின்பவா ரிதிதோய்ந் திபமுகன் மலரடி பணிந்தார். ()

அன்னதற் குவந்து விண்ணவர் சிறைநீத் தருள்புரிந் துறைந்தன ஞங்கே, யென்னையா ளுமையோ டைமுகப் பெருமானேற்றின் வந்தி பமுகத் திறையைச், சென்னியா றுடையெம் பரனையுந் தழுவித் திருக் கணேக் கேனையோர்க் கருளி, நன்னரார் கயிலைத் திருப்பருப் பதத்து நண்ணினிற் றிருந்தன ரிப்பால். (கருஉ)

---

*என்றிற்பிறங்குசூலம் - சூரியனைப்போல்பிரகாசிக்குஞ்சூலாயுதம்'

மிடல்கெழு சிந்து விளிதல்கேட் டவச மீப்படு தந்தைதீக் கரு மம், படுகளத் தவனுக் காற்றிய பின்னர்ப் பாசறை யுறைகணே சனைத் தாழ்ந், தடியனே னகஞ்சென் றியற்றுபூ சனைகொண் டருளெனச் செ ன்றுபூ சனையேற், றொடிவில்வேந் தியலன் னவற்களித் தகன்று திரி சந்திவனத் துறைந் தனன்பின். (கடுச)

திருவுள மகிழ்ந்து பலர்க்கு நல்கருளிச் சிகியெனுந் தனதுவா க னத்தை, முருகனுக் கருளி யிளையவ னின்னை மூவுல கங்களு மென்று ம், பொருமயிற் றுவச னெனவழைத் திடுக வென்றுபொற் புறவிடை கொடுத்துப், பெருமுனி வரர்தஞ் சிறுரொடு தனது பேருல கடைந்து விற் றிருந்தான். (கடுரு)

மூவர்கோ னருளாற் சிந்துவா மகன்கோன் முறைபெறு சக்கர பாணிக், காவல னுலகங் காத்தன்ன் மறைகள் கலித்தன கலிகளுந் தீர் ந்த, யாவருந் தத்த நிலைமையி னமர்ந்தா ரமரரு மவிகொடு மகிழ்ந்தார் தேவரா லயங்கள் சகலமு முன்போற் சிறப்பொடு பூசைகொண் ட னவே. (கடுசா)

வேறு.

திருமா முகனம் பிகைமகனுய்ச் சிந்து தனைமாய்த் திடலீதா
மொருமா வனல னெனுமன்சே யுயிருண் பால சந்திரப்பேர்
தருமா வவதா ரத்தைமுனஞ் சாற்ற லால்வைத் ததன்பின்னர்
வருமா தூம கேதுவவ தாரந் தனைமேல் வகுப்பேமால். (௱டுஎ)

பிந்தியமயூரேசன் பாலசந்திரன் றிருவவதாரப்படல
முற்றுப்பெற்றது.

ஆகப்படலம் எ-க்குத் திருவிருத்தம். ௲௱௯௧.

---

# தூமகேதுதிருவவதாரப்படலம்.

அறுசீர்க்கழி நெடிலாசிரிய விருத்தம்.

*பகுவாய் விகிரம் பெடையொடுகண் படைகொள் பொழில்விந் தியநா ட்டின், மகிவா தினியென் றுளாநகர்க்கு மன்னுந் தூமன் றகுவர்குலத் திகழீர் தரவந் தறநெறிக்கோ லெங்குஞ் செலுத்தி வருநாளந் நகர்வா ழுளாயர் குலத்தினன்மா தவநா மத்தன் கலைவல்லோன். (க)

---

*பகுவாய்விகிரம் பிளந்தவாயையுடைய பட்சி.

இம்மைக் குரிய செயன்மறுமைக் கியைநற் செயல்கள் சுமுதை
யெனு, மெய்ம்மைக் கற்பா ளொடுமியற்றி வாழ்நாண் மகவின் மையின்
வெறுப்பாற், பொய்ம்மைப் பழிச்சொ லவட்கிசைப்பப் பொருதுவனம்
புக் காழியங்கைச், செம்மைத் தேவை நினைந்தீரா றுண்டு தவஞ்செய்
திருந்தனளால். (௨)

யாதோர் தெய்வங் தனைக்கருதி யாதா மொருவர் தவஞ்செயினு
மாதோர் பாக னஃதேற்று மகிழ்ந்து வரநன் கருளுமெனல்
வேதா கமத்தின் றுணிபென்ப துணர்த்து மாறு மெய்த்தேவிற்
பேதா பேதந் தீர்தரத்தோன் றினனெங் கரத்தெம் பெருமானே. (௩)

வேறு

அரியெனச் சின்னம் யாவு மணியுரு வுடன்முன் றோன்றப்
பெரியதே வினைமா லென்று பெரிதுவந் திறைஞ்சி யன்னா
டிருமறு மார்ப சேயில் சிறுமைதீர்த் தருளின் றேலெற்
குரியவன் பழிசொல் லாதிங் குயிர்துறந் திடுவ லென்றாள். (௪)

ஏத்துவா ரிடர்க டீர்க்கு மிறைவனன் னவள்பே ரன்பைப்
பார்த்துநங் காய்நின் சேயாய்ப் பரிவினு முதிப்பே மென்ன
†வார்த்தி யினுரைத்துச் சென்னி யங்கைவைத் தகன்று னன்னாள்
சீர்த்திகொ டன்னூர்க் கேக முன்னிச்செந் நெறிகா ணாளாய். (௫)

கொலைபயில் பலமா வைகுங் கொடுஞ்சுரத் தூடு சென்றே
யலைபுனற் சடையெம் மீச னருளினூர்ப் புறத்துச் சேர
மலைபுரை புயவேந் தன்னு ணிலைமைதேர்ந் தழைத்தான் மாண்பிற்
கலைமதி முகத்தாள் சென்று காதலற் பணிந்து முன்னர். (௬)

புரிசைசூழ் நகர நீத்துப் போந்தது முதனி கழ்ந்த
சரிதமும் விமலன் சேயாய் வரத்தரு வரமுஞ் சாற்றப்
பரிவுடன் கேட்டுள் ளோகை படைத்துவாழ் நாண்மா மாயன்
கருவினுற் றனன் னுடொல் கவின்றிரி தரவ யிற்றின். (௭)

இன்னணஞ் சுமுதை கர்ப்ப மெய்திமுற் றவுமங் நாட்டு
மன்னனுந் தூமன் றெவ்வின் வலிதெறச் சமர்மேற் செல்கா
னின்னைமாய்த் தற்கா மாய னேரிழைச் சுமுதை சேயாய்த்
துன்னிடு மெனவோர் *காய வாணிவான் வயிற்றெ ழுந்த. (௮)

---

†ஆர்த்தி மகிழ்ச்சி.

*காயவாணி-ஆகாயவாக்கு

அந்தவாக் கரசன் கேட்டு மீண்டஃ தொழிப்பான் றீமை
சிந்தைசெய் தனனல் லோனா யிருந்துமுன் வினைத்தி றத்தப்
புந்திவாய் தரவென் றாழும் போயினன் குடபா லாங்கே
வெந்திறல் வீர னாம்வித் துருமனை விரைவிற் கூவி. (௯)

மாதவ மன்னை யன்னான் மனைவியைக் கருவோ டின்னே
வீதல்செய் யெனப்போய்ப் பற்பல் வீரரோ டுறக்கஞ் சோதித்
தீதுநல் லமைய மென்னா மஞ்சமோ டவர்க்கொண் டேகித்
தீதுறு கானிட் டுள்ளந் துணிவெய்தான் சிந்திக் கின்றான். (௰)

கொடியது துயில்வோர்க் கோறல் கொம்பனார்க் கோற லறறிற்
கொடியது கருப்ப மாதர்க் கோறன்மிக் கொடித வற்றிற்
கடிதுகா ணிதிற்புக் கேனென் றழுங்கக்கண் டுயிறீர்ந் தன்னார்
கடிதுகா ன க்கான் வீரர்ப் பார்த்தஞ்சக் கழற்கால் வீரன். (௰௧)

அருளினா னிகழ்ந்த யாவு மறைந்தனன் சுமுகை கேட்டு
மருளிலா மனத்தா யெம்மை வதைப்பினிற் றீம்பு நிற்கியாந்
தருகைம்மா றெவன்பொன் னுடன் றளாவைமுன் †முதுகென் பீந்தோ
னுரவனோம் பினனன் றேவெம் முயிரைமுற் றவுங்காத் தின்னும் (௰௨)

அத்தனா ரருளுக் கேற்ப வாற்றுக நினைவி டுத்தோன்
சித்தமை யுறாதோர் சூழ்ச்சி செய்துமாற் றுகசி றந்த
வித்துரு மப்பேர் வீர வெள லும்வேந் துரைம றாதோ
னைத்தில னாகவின்றே லுவப்புறேன் சபிப்பே னென்றாள். (௰௩)

வீரன்வேல் விழிநின் சாப விளைவுபின் முன்வேந் தாற்றுங்
கோரமெய் தலினெல் லேனின் கூற்றினுக் கெனவன் னாண்முன்
சீர்வர மளித்த தேவைச் சிந்தைசெய் தலும்பல் வீர
ராரரு ளாற்போந் தன்னார் தமையட்டா ரவரு ளஞ்சி. (௰௪)

ஆயிடை யிரியல் போம்வித் துருமன்றா மப்பே ரண்ணற்
கேய்திற னுரைப்ப நாணுற் றெரிசினத் தவற்செ குந்தே
மாயையின் வல்லோர் நான்கு வயவரை விளித்துக் கான்போய்த்
தேயிடைச் சுமுகை சேயைச் செனித்தபின் செகுமி னென்றான். (௰௫)

அன்னநால் வருங்கா னுற்றே யமர்ந்தனர் மறைந்தே குற்றார்
முன்னரோ ரம்ப னாற்போந் தவர்விலங் காதி மோதித்
துன்னுறு வகைவா ளேந்தித் துயின்றிலன் மாத வப்பேர்
மன்னிருள் வலிக வர்ந்து வயங்கிருள் வலியும் வந்தான். (௰௬)

---

†முதுகென்பீந்தோன்-ததீசிமகாரிஷி.

வேறு.

கங்குன் முழுதுந் துயர்க்கடல்வீழ் காந்தன் காந்தை காய்கனியுண்
டங்கண் வதிமா தவர்போன்றூ ரவர்முன் னிறைவ னருள்வரத்தாற்
றிங்கண் முடியுந் தவளநிறத் திருமா முகமும் விழிமூன்றுந்
தங்கு மழுத்தண் கமலமக்க வடமோ தகஞ்சேர் நாற்கரனாய். (௧௭)

செம்மே னியனா யொருமகப்போற் சிறந்து தோன்றக் கண்டைய
வெம்மா வழுங்கிக் கொடுஞ்சுரதது மேவு நீயா ரெனச்சுமுதை
யெம்மான் பால சந்திரனென் றறைய வெங்கு நிறைந்தடியர்
தம்மா ருளத்து நிறைபொருள்யா தஃதென் றுணர்வாய் தவவடிவாய். ()

எழுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்.

நின்னுளத் தமைத்த வாறுமா யனைநின் கருப்பத்தி னிகழ்வித்து
நங்கட், கின்னல்செய் தூமா சுரனைமாய்த் திடச்சே யெனவந்தோ
மிரவினும் பகைஞா, துன்னுறு தொழித்தோ ரங்கணத் தவர்மா றோ
ன்றலா யுதித்துல சோமடிம, பொன்னனை பாய்மின வரனென்றெடம் முல
கம் புகுமின்மே லுரைன வறைந்தான். (௧௯)

†அறைந்தபின் னிறைவ னெழிற்றிரு வாய்க நுண்ணத்துல கத்தை
யுங் காட்டப, பிறங்குசீர்ச் சுமுதை சகலதே வருங்கும பெரியதோர்
பிரமமீ தென்றுண், ணிறைந்தபே ரன்பால வியாதுசே யெனலா னீள்
கரத் தெடுத்தனண் முலைப்பா, லிறங்கலு மூட்ட லேச்சிமுன் மறை
நால் வருமிரீஇத் தம்மிறைஞ் கிசைத்தார். (௨௦)

காயிரும் பனைய வுரைசெவி நுழையக் கலங்கினன் விழுந்தனன்
புரண்டான், மாயிரும் படிக்கணொருவழி சேறு மாமருமை வடவை
யிற் சீறுப், பாயிருங் கடலிற் படைபுடை பொதுளப பலைப மிடியெ
னக் குமுறச், சேயெனச் சுமுதை பாலயின் றங்கைச் செம்மல்வாழ்
வனத்தினெய் தினனால். (௨௧)

எய்தினிற் கோட்டிப் பல்கணை பூட்டி யெம்பிரான் மிசைவிட வி
ட்டி, ‡வெய்துயிர்த் தஞ்சு நன்முலைத் தாயைத் தநதையை வெருவலி
ரெனச்சொற், றையன்வாய் நின்றோர் புகையுயிர்த் தவனி பிளப்பித்து
த் *தூமனை யதில்வீழ்த், துய்வுறு தொழித்தா னன்னதாற் றூம
கேதுவா யினதவற் கொருபேர். (௨௨)

---

(†அறைந்தபின்) என்றதனால் விநாயகக்கடவுள் சொல்லியதில், சுமுதைக்குச்சந்தேகம், செனித்ததையறிந்து தமதுதிருவாய்க்குள், சகலபுவனங்களையும் காட்டியருளினார்.

‡வெய்துயிர்த்தல் - பெருமூச்சுவிடல்.

*(தூமனை)யென்றதனால், தலைமைபற்றி தூமனும் அவனோவெந்தகடல்போன்ற, சேனைகளுமெனக்கொள்க.

மகவினிவ் விளையாட் டயர்பிரான் மறைந்தான் மாதவன் முசு தையா மனையோ, டகமகிழ் வாற்றன் னகரடைந் தரியை மகவெனப் பெற்றா சானுந், தகவின்வாழ் தரக்கண் டமர்ந்துசின் னுட்சே றலுமரு ட்டம்பிரா னுலகம், புகுதலுற் றுலகந் தணந்தன ரிம்மான் மியம்புகன் றோர்கதி புகுவார். (உரு)

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

பொருவிலங் கரத்து வள்ளல புகையுயிர்த் தவுணற் காய்ந்த
சரிதமீ தினிக்க ணேசன் றனியவ தாரஞ் சாற்றற்
குரியதென் னினுமுன் சாற்ற லுற்றதால் விடுத்த தன்பின்
வருகண பதிதோற் றத்தை யறிந்தவா வகுக்க லுற்றும். (உச)

தூமகேதுகணேசன்றிருவவதாரப்படலமுற்றுப்பெற்றது.

ஆகப்படலம் அ-க்குத் திருவிருத்தம். கூாருயரு.

---

# கணபதிதிருவவதாரப்படலம்.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

கடியவிழ் கடுக்கை யான்*மெய்க் காப்புவெண் மதிதண் கங்கை
விடையயி ராவ ணப்பேர் வேழத்தி னொளிசெய் தம்மை
வடிவினிற் பசுங்கா வார்ந்து வயங்குசீ ரடியா ருள்ளின்
படிகரா தியநீ மல்கிப் படர்ந்திடுங் கயிலைக் குன்றம். (க)

பன்னருஞ் சிறப்பா ரின்ன கயிலையம் பருப்ப தத்தே
யென்னையாண் டருளு மெண்டோ ளீசனு ரிமய மீன்ற
வன்னையோ டமர்நாள் வேனி லான்விழாப் பருவ மெய்த
மன்னுமைம் பருவத் தோங்கு மரமெலா மிலைக *ளுழ்த்து. (உ)

மென்றளி ரீன்ற ரும்பி மலர்ந்துகாய் கனிகண் மேவி
நன்றுற னளின மெல்லா நமக்குநம் பதிக்குந் தெவ்வாத்
துன்றிய பனியை வென்றே மெனநகை முகந்து லங்க
நின்றெனத் தடம லர்த்து நிறைதர மலர்த லுற்ற. (ங)

---

*மெய்க்காப்பு-திருநீறு.
*உளழ்த்தல் - உதிர்த்தல்.

நன்றிசெய் தோர்க்குப் பின்னர் நன்றிசெய் திடல்க டப்பா
டென்றறி மாந்த ரேய்ப்ப விருஞ்சுனைக் கரையிற் சூழு
*மொன்றறி மரஞ்சி ரங்கொண் டுகுக்குந்தேன் மாரி யென்ன
முன்றடத் தடியிற் கொண்ட முதிர்சுவை யமுதந் தன்னை. (ரு)

†ஐங்கணை மதன்கி ழாவிற் கலங்கரித் தெனத்து ளித்தார்
பொங்காரம் படைவீ டுற்ற பூங்குயி லினங்கண் மாவின்
செங்கொழுந் தளிர்கோ திப்பூஞ் சிலீமுகன் வந்தா னென்று
மங்கையர் சமுகமெல்லா மகிழ்வுறக் கூவு மாதோ. (௬)

குயிலினங் கூவக் கூவக் கொண்டல்கண் டாடும் பைந்தண்
மயிலின மாண்பில் வேந்தன் படைவர மாண்பார் வேந்த
னயர்படை நாடு நீங்கி யகங்கொளா தொடுங்கு மாபோற்
பயமுறீஇ யிறகொ டுக்கிப் பதுங்கின வரசுகு தேடி. (௭)

இவ்வண நிகழ்வ சந்த காலத்தம பிகையோ டெம்மான்
றிவ்விய வளஞ்சே ருய்யா னத்துலாய்ச் சித்தி ரத்தா
oனவ்வியார்ந் தங்க ணுற்ற மண்டப ஞாங்கர் நண்ண
வவ்விடை யெம்பி ராட்டி சித்திரத் தணிநோக் குற்றாள். (௭)

அன்னதிற் பிரண வத்தோ ரத்தியோர் பிடியைத் தோய்ந்து
நன்னலம் பருகி நிற்கு நிலைகண்டு நாத வீதென்
னென்னமுன் னவனின் றூட லீதென்று களிற்றை நோக்க
மின்னிடை பிடியை நோக்க விநாயகன் சேயாய் வந்தான். (௮)

ஈன்றசேய் கதிரோர் கோடி யிலங்கல்போற் பிரண வத்தி
னுன்றபே ருருவோ டீச னமலைதா டொழுவெ டுததே
யேன்றவன் புடன ணைத்து மகிழ்ந்தபின் னெந்தை நோக்கித்
தோன்றனீ நம்மில் வேறன் றுனைத்தொழார் துன்பிற் றேய்க. (௯)

மணமுத லியதொ டங்குங் காலுமுன் மலர்த்தாண் முன்னாப்
பணிபவ ரருள்பெற் றுய்க பல்கணங் கட்கு மேலாக்
கணபதி யெனப்பேர் பெற்றெக் கணங்கட்கு மருளிப் போரிற்
றுணிகச முகற்செற் றும்பர் துயர்தவிர்ந் திடப்பு ரப்பாய். (௰)

---

*ஒன்றறிமரம் - பரிசஅறிவு ஒன்றைமாத்திரம்உடையமரங்கள்,
†ஐங்கணைமதன் - முல்லை, அசோகு, மா, தாமரை, நீலம், என்னும் ஐந்துபுட்பங்களையும் பாணமாகஉடையமன்மதன்

oசவ்வி அழகு.

எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

எனவருளி யுமையோடங் ககன்று கோயி லெய்தியங்கு முதல்வா யிலிருப்பை யன்ன, பனைமுகக்கைச் சேய்க்களித்தா னெவரும் போற் றிப் பயனெய்த விதுநிற்கப் பரனோர்காளென், னனையுடன்சூ தாடலினைத் தாங்குநீவென் றுனமது பூணினக்குமி யாம்வென் றேமே, வினதுபூ ணெமக்குமுரித் தெனப்ப கர்ந்தா னோர்ந்துமைமா யவனொடு நிலையா வைத்தாள். (௧௧)

இருவரும்பல் லாடலியற் றிடுகால் வென்று ளிறைவியஃ துணர்ந்து மிறை யெவனுட் கோளோ, வொருவிளையா டலேகினைந்தான் போலும் வெற்றி யுமையேயெம் முடையதுன்பூ ணுகவி டென்றான், பொருவின் மலை மகளீது மறைசொன் னுவாற் புகலவற்றே வெற்றியெற்கும் பூண னைத்தும், தருகவென மாலும்வெற்றி யிறைக்கென் றஞ்சிச் சாற்றவெ குண் டரவாவா யெனச்ச பித்தாள். (௰௨)

பனைசபித்தல் கேட்டயர்மால் பரமன்றாளிற் பணிந்திதுதீர் வரு ளெனலும் வடதீ பத்துப, புரிவொடுசேர்ந் துறைகவிப முகச்சே யாக் குப் போதருகா லகலுமஞ்சேன் மாய வென்றான், றரணிதந்தோன் றனைத்தந்து மனைபுதுங் காத்துஞ் சங்கரிப்பான் பாலமர்ந்துந் தழைப் போ னோர்பொய், புனையுமனுக் கிச்சாப மெனினி னென்று முனை பொய்யாக் கெற்றுமோ வுணாகி லேமால். (௰௩)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

அருட்டனு வாரே ரமப னடிமல ரகத்து முன்னி
மருட்டனு வுறச்சா பங்கொண் மால்வட தீபஞ் சென்றோர்
குருட்டர வாய்நீள் கோட்டோர் *கோளியங் தருவை யுற்றே
யிருட்டுதை பொந்துட் புக்காங் கிருந்தன னினைவுற் றிப்பால், (௧௪)

இந்திர னாதி வானோ ரிபமுகத் தவுண னாற்றும
வெந்திறல் வினைக்காற் றாது †வெள்ளிவே தண்ட மெய்தித்
தந்திர நவின்ற வாற்றாற் றந்திமா முகற்பூ சித்து
மந்திர வுாைக ளாலே வழுத்தியுள் ளுருகி நின்றார். (௧௫)

உருகுநெஞ் சினராய் நிற்கு மும்பரார்ப் பார்த்தே ரம்பன்
பெருகுமன் பொடுசெய் பூசை பெரிதுவந் தனநும் வேட்டல்
விரிமினென் னலுமெங் கோவே விளம்பரு மஞர்செய் தோங்கும்
கரிமுகா சுரற்காய்ந் தெங்கட் காத்தியென் றிரந்திட் டாரால். (௧௬)

*கோளி - ஆலமரம்.
†வெள்ளிவேதண்டம் - கயிலையங்கிரி.

அருள்செயே ரம்ப வள்ள லவர்துய ரகற்று மாறு
மருளுமோ ரசல மன்ன வசலனும் பூதர் மன்னன்
பொருவறு களத்தி வர்ந்து பூதரா தியர்சூழ் போதக்
கரிமுகத் தவுணன் வைகுங் கடிநகர்ப் புறத்த ணைந்தான். (கஎ)

மாயவல் வினைகீ ரெந்தை வரவறிந் தசுரர் கோனுங்
காயிர வெள்ளஞ் சேனை யடரவந் தமர்செய் காலைக்
காயரி போற்சி னந்து கணபல பூதரோவத்
தீயசெய் யவுணர் சேனை சிதைந்துடைந் தோடிற் றன்றே. (கஅ)

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

தன்ன தானை வென்சொ மித்த தன்மை கண்ட சுரமனும்
பன்னு மானை வதன னுட்ப டர்ந்தெழுந்த வெஞ்சின
வன்னி பொங்கி விழிக ளார வயமிகுந்த பூதரைத்
துன்னி யெண்ணில் வாளி கள்சொ ரிந்து காதி யங்ஙனே. (கசு)

அந்தி யிந்து வேணி வேயு மண்ண லார்தம் முன்னரோ
வந்து நின்று நிந்தை பேசி வார்ந்த *சாபம் வாங்கியே
பந்தி பந்தி யவ்வெவ் வேறு பகழி மாரி பெய்தன
னெந்தை யந்த வம்பி லாப மெய்தி டாது செய்துபின் (உ0)

மாய வஞ்சன் †வானி யாவு மாய்வு செய்ய வுந்தனித்
தேய்தல் கண்டு நெஞ்ச கவதி னெஞ்சு ருத வெஞ்சின
மேய தால னேக வாளி விட்டு வெய்ய போர்செய
வாய போத வன்வ ரங்கள் யாவு மைய னுன்னியே. (உக)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

தன்வலப் புறத்துக் கொம்பின் ‡றாரைசேர் நுதியொ டித்து
மின்விரித் தெனச்செ லுத்த வன்னது வெய்ய கள்வன்
பொன்னுரங் கிழித்தான் மாவைப் பொள்ளென வுண்டு சுத்த
மன்னுநீர் வாரி மூழ்கி மீண்ட து வள்ளல் கையில் (உஉ)

பூமழை பொழிந்தார் விண்ணோர் புனிதமா தவத்த ரெல்லா
மாமறை யாசியோதி வரன்முறை வணங்கி நின்றார்
நேமியில் வரைபோல் வீழ்ந்த நிசாசரர் குலனுக் கெல்லாங்
கோமக னான கள்வ °னுந்துரு வுருவங் கொண்டான். (உங.)

---

*சாபம்வாங்கி - வில்வளைத்து.
†வானி - சேனை
‡தாரைசேர் நுதி-கூர்மைபொருந்தியநுனி
°ஊந்துரு-பெருச்சாளி

அந்தரை யாதி யண்ட மனைத்தையு மழிக்க வெண்ணுஞ்
சிந்தைகொண் டண்ட முட்டுந் திறலுரு வெடுத்து வந்த
வுந்துரு வினை நேர் கண்ட வும்பரார் முனிவரெல்லாம்
புந்திநைந் திரியல் செய்வான் பொள்ளெனத் தலைப்பட்டாரால். (உச)

வெருவுரு வெடுத்துப் போந்த வெய்யமூ டிகத்தி னுண்மை
கருகிட வதனை யையன் கதுமெனப் பிடித்திவர்ந்தான்
பெருமைசா லறவோ ரெல்லா மாகுமேற் பிறங்காநின்ற
வொருமருப் பினனைப் பூசை யுஞற்றிமா வரம் பெற்றாரால் (உரு)

அங்கணோர் சைவ லிங்க மணிபெறத் தாபித் தார்வம்
பொங்குபூ சனைசெய் தீது கணடீச் சுரப்பே ராற்பூ
வெங்கணும் பொலிக வென்ன விசைந்தன னிமையோ ரெல்லாஞ்
செங்கையைந் துடைய வள்ளல்விடைகொடு வான்சேர்ந் தாரால்(உசு)

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

விடைகொடு விண்ணோர் மீண்டபி னெம்மான் வியன்வட தீபமே கலுமுன், றடமலை யரவா யுறைதிரு மான்மேற் றனியருள் விழிபடச் சாப, வுடலகன் றெந்தா யுமைதரு சாப மொழித்தனை யென்றுபூ சையுஞ்செய், தடையுமித் தினநற் றனுமதிதியா ருதலா வித்தினந் தோறும்

உனைவழி படுவோ ரறமுதனன்கு முறவருளெனவுரைத்தனனு லனையவா றிசைந்தே கயிலையுற் றனனுங் கமரர்போந் தையமுன்யாங் க, ணினைவொடு தோப்புக் கரணமுங் குட்டு நிகழ்த்தினங் கயமுகற்க வை நிற், கினியியற் றிடவு மியற்றுவோர்க் கிதநீ யீயவு மருளெனவிசைந் தான் (உஅ)

மத்தகத் திருகை கபித்தமாத் தாக்கல் குட்டெனும் வணக்கமி ன் னதைத்தென், னத்திரி தனில்வா ழகத்திய முனியு மழகிய விலங் கைமன் னவனும், வித்தகம் வழங்கும் விநாயகன் றிரு முன்வேறுவே றேல்வையிற் புரிந்தந், நித்தனல் லருளைப் பெற்றன ரெனவு நிகழ்த்து வ ரான்றவர் மன்னோ. (உகூ)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

சோதியரு ளேரம்பன் கயமுகத்து நிசாசரனைத் தொலைத்துப்பின்ன
ரோதரவா மால்சாப மொழித்தமையீ தன்னபிரா னுலக முய்ய
மாதவக்கா சிபன்மனைவி யதிதியருந் தவத்தாலோர் மகவாத் தோன்றிக்
கோதின்மகோற் கடனுய வவதாரந் தன்னையினிக் கூற லுற்றாம் (௩0)

கணபதிதிருவவதாரப்படலமுற்றுப்பெற்றது.

ஆகப்படலம் (௧)க்குத் திருவிருத்தம் - (௩௱அ௰௫)

# மகோற்கடன் றிருவவதாரப்படலம்.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

அளியுழுதே மலர்ப்பொழில்சூ ழங்கமெனு நவிஞட்டஞ் சாலியா
ர்ந்து, விளைகழனிப் புறம்படுத்த காத்திரமென் றிசைகெழுவும்வியன்மூ
தூரிற், கிளருமறை பயில்சிரவுத் திரகேது வெனுநாமங் கெழுமுந் நூலோ
ன், வளர்பெருமைக் கற்புடைய சாரதைப்பேர் மனைவியொடு வாழ்வா
ஞனன். (௧)

அன்னவடன் வயிற்றுடைப் புதல்வருதித் தனரவருக் கறைநூ
லாற்று, னன்னர்வினை யிரப்பிமுன்னோன் பேர்தேவாந் தகன்பின்னோ
னராந்த கப்பேர், பன்னவளர் நாள்வனஞ்சென் றுயிரப்பத் தாண்டுசிவ
பரன்றாள் சிந்தித், துன்னலற நோற்றலுஞ்சா ரதர்சூழ வம்பிகையோ
டிறைவன் றோன்றி. (௨)

மறையீர்நும் விழைவியாதென் றருளின்வின வலுந்தாழ்ந்து மா
யோ ஞதி, முறையாவெய மேவல்செயும் வாழ்வுமெவர் படையாலு
முடியா மெய்யு, மிறைவா.ல் கென்றார்கேட் டிபமுகத்தே வாலன்றி
யீறு றீரென், றறையாவாங் குருக்கரந்தான் மகிழ்வொடிரு வருமகன்
றீன் றார்பா லண்மி. (௩)

மிகுவரத்தின் றிறநவிலக் களிக்கடறோய்ந் தனர்சுதரும் வீமகாயக்,
தொகவினவு ணரைப்போன்று ரவர்தமிற்றே வாந்தகன்போய்த் தொடர்
ந்தான் போரின், மகபதிபால வனூற்று தொளித்தனன்மே ருவின்வெள்
ளைமதமா வூர்ந்து, நகுமரியா சனதிருந்து மசுரரொடு சுரரையுமன்
ஞக வாண்டும். (௪)

வேறு.

போதன்மா லொடும்போர்க் கேய்ந்தான் வரவறிந் தொளிப்பப் புக்கவ்
வேதமி லுலகங் காக்க வவுணரை யிருத்தி விண்சேர்ந்
தாதரத் தாண்டான் மற்றை நராந்தகன் புவியாள் வாரோ
டோதம ராற்றித் தோற்பித் துற்றனன் பிலத்துடன்றே. (௫)

உடனுறு மவுண ரெல்லா மோங்குபுள் ளரசா யுள்ள
படவர வனைத்து மாய்ப்பச் சேடன்பன் மணிக ணல்கி
யடிதொழு தனனே ல்லான்வெஞ் சிறையிட்டோ ரவுணன் றன்னை
மிடலினங் கோம்ப வைத்து மீண்டற வோனை யெல்லாம். (௬)

இன்னவிப் பாகந் தேவர்க் கிடாதுவன் றளேப்ப டுத்தித்
தன்னர சாண்டா னின்ன தகையுணர் தாதை யோகை
மன்னுமங் கலம்பு ணர்த்த மகப்பயந் துயர்ந்தா ரீது
மின்னிடை யதிதி யாற்றுள் காசிபற் கியம்பி மேலோய். (எ)

துன்னுமென் புதல்வர்க் கின்னல் சூழ்தேவாந் தகந ராந்த
கன்னென மிவனை யீட்டோர் *கான்முளை யென்பாற் றோன்ற
வின்னருள் புரிதி யென்று விரநதனள் கேட்டம் மேலோன்
மின்னிடை யணைய ரீசன் வரம்பெற்று ரெவரால் வீவா (அ)

மாதங்க முகப்பெம் மானுவ் மாய்வரவ் விறைநின் சேயாய்ப்
போதன்பு மிகுநோன் பாற்றப் பொருந்துவை யென்னிற் றோன்று
மீதொன்று புரிதி யென்றைந் தக்கா முபதே சித்தான்
சீதந்துன் றமுதுண்டாள்போன் றதிதியோர் வனஞ்சென் றுளால் (கூ)

சென்று நூறுண்டே ரமபன் றிருவடி சிந்தையுட் கொண்
டொன்றிய புலனெ டைநதக் கரஞ்செபித் துறு நோன் பாற்ற
வென்றுகோ டியின்மெய் தோளீ ரைந்தொடீரஞ் சடையி லங்கத்
துன்றுகோ ளரியி வர்ந்து தோன்றின னவணமுன் னெம்மான் (ய)

எழுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்.

பேரொளி யாற்கண் கொளாமையின் வெருவி யிறைஞ்சி யெந் தாய்சிறு பேதைக், காருரு வொடுநின் றருள்கென விரப்ப வவ்வுருக் கோடலு நோக்கிச், சூருடைத் தேவாந் தகனராந் தகனுற் றுயருறு முலக மன்னவனைப், பாரின்வீழ்த் திடுமோர் மதலையா யெளியேன் பால்வர வரமரு ளென்றாள். (யக)

அமரர்க டாய்சொற் கிசைந்துருக் கரந்தா னண்ணலன் னவள்வன மகன்று, தமைநிக ரன்பற் குறுவர மியம்பக் களித்தலுந் தானிப முகன்று, ணிமிடமு மறவா துபாசனை புரிவா ணேயமோர்ந் தையனொ ருறுப்புங், கமைகொளா யிரமாப் பொலிதரு வடிவங் காட்டியுற் றனனவட் கோர்நாள். (யஉ)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

தையன்மகிழ்ந் தெந்தாயீ தருளுருவாயினுமன்று சாற்றியாங்குக்
கையிலெடுத் தணைத்துவிரை நீராட்டிப் பாலூட்டிக் கனிவாய் முத்தஞ்
செய்யநகை முகமலர்தக் துறுபருவந் தொறுமியற்றுஞ் சீராட்டாற்றி
வையகத்தார்மகிழ்குழவியெனவந்தென்மனக்கவலைமாற்றுயென்றாள் ()

*கான்முளைஎன்பது-மகன்.

